# சங்க இலக்கியத்தில் கதைகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப்
(பகுதி நேரம்) பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு (Thesis)


ஆய்வாளர்

**பொ.முத்துமாரி**

(பதிவு எண்.1682)

நெறியாளர்

முனைவர். மு.சுதா

இணை நெறியாளர்

பேரா.முனைவர். மு.பாண்டி






தமிழ்த்துறை

**அழகப்பா பல்கலைக் கழகம்**

(தேசியத்தர நிர்ணயக் குழுவின் மறுதரமதிப்பீட்டில் ‘A’ மதிப்புப் பெற்றது)

காரைக்குடி – 630 003

இந்தியா


நவம்பர் - 2013

முனைவர் **மு.சுதா**
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள்:

# <u>நெறியாளர் சான்றிதழ்</u>

“**சங்க இலக்கியத்தில் கதைகள்**” என்னும் தலைப்பில் ஆய்வாளர் திருமதி. **பொ.முத்துமாரி** அவர்கள் தமிழ் முனைவர் (பி.எச்டி., பகுதிநேரம்) பட்டத்திற்காகச் செய்யப்பெற்ற இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னிச்சையாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம்: காரைக்குடி **நெறியாளர்**
நாள் :

திருமதி **பொ.முத்துமாரி,**
முனைவர்பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்),
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003.

நாள்:

# ஆய்வாளர் உறுதிமொழி

"**சங்க இலக்கியத்தில் கதைகள்**" என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (பிஎச்.டி., பகுதிநேரம்) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இவ்ஆய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: காரைக்குடி **ஆய்வாளர்**
நாள்:

**உறுதிக் கையொப்பம்**

முனைவர் **மு.சுதா,**
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி–630 003.

# நன்றியுரை

சங்க இலக்கியத்தில் கதைகள் எனும் தலைப்பில் முனைவர்பட்டம் மேற்கொள்வதற்கு எனக்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர், தமிழ்த்துறைத் தலைவரும் எனது இணை நெறியாளருமான பேரா.முனைவர். மு.பாண்டி ஆகியோருக்கு முதற்கண் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்டத்திற்கு வாய்ப்பளித்த, அன்று முதல் இன்றுவரை எனக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்து என் ஆய்வை செம்மைப்படுத்திய என் ஆய்வு நெறியாளர் முனைவர் மு.சுதா அவர்களுக்கும் மற்றும் துறைப் பேராசிரியர் பெருமக்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

பகுதிநேரமாக முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த சருகணி, இதயா மகளிர் கல்லூரியின் முன்னாள் முதல்வர் அருட்சகோ. பாத்திமாபவுலா அவர்களுக்கும், இந்நாள் முதல்வர் அருட்சகோ. ஜோதிமேரி அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்கு கல்விக் கொடை நல்கிய எனது பெற்றோருக்கும், என் ஆருயிர் கணவர் திரு.பா.கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும், எனது பாசமலர்களான செல்வி.கி.சுவாதி, செல்வி.கி.அபிராமி மற்றும் எனது குடும்பத்தாருக்கும் என் நன்றி மலர்களை அர்ப்பணிக்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நூலுதவி செய்ததோடு எனக்கு ஆறுதலும் தேறுதலுக்குமுரிய எனது அன்புச் சகோதரிகள் முனைவர்.ப.சு.செல்வமீனாள், முனைவர்.பரமேஸ்வரி, திருமதி.காயத்ரி மற்றும் அன்புச் சகோதரர் முனைவர்.மாரிமுத்து, முனைவர் சுப்பிரமணி அவர்களுக்கும் என்றும் நன்றியுடையவளாவேன்.

ஆய்வு தொடர்பாக எனக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்த இதயா மகளிர் கல்லூரியின் தமிழ்த்துறை பேராசிரியர் பெருமக்களுக்கும், எனது ஆருயிர் தோழிகள் திருமதி.விஜயலெட்சுமி, திருமதி.அன்னுரோஸ் அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான தரவுகளைத் திரட்டுவதற்கு பெரிதும் உதவிய நூலகங்கள் அழகப்பா பல்கலைக்கழக நூலகத்திற்கும், இதயா கல்லூரி நூலகத்திற்கும் நன்றி.

ஆய்வேட்டினை வெகுநேர்த்தியாக கணினியாக்கம் செய்து உதவிய அருண் கணினி நிறுவனத்தின் உரிமையாளர் திருமதி. சாந்தி பாண்டியன் அவர்களுக்கு நன்றி நவில்வதில் பெருமகிழ்வு அடைகின்றேன்.

நன்றியுடன்...

**பொ.முத்துமாரி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| கலித். | – | கலித்தொகை |
| குறள். | – | திருக்குறள் |
| குறுந். | – | குறுந்தொகை |
| நற். | – | நற்றிணை |
| பரி. | – | பரிபாடல் |
| பதிற். | – | பதிற்றுப்பத்து |
| புறம். | – | புறநானூறு |
| திருமுருகு. | – | திருமுருகாற்றுப்படை |
| சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| முல்லை. | – | முல்லைப்பாட்டு |
| மதுரை. | – | மதுரைக்காஞ்சி |
| பெரும்பாண். | – | பெரும்பாணாற்றுப்படை |
| சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| தொல். | – | தொல்காப்பியம் |
| தண்டி | – | தண்டியலங்காரம் |
| புற.பொருள் | – | புறப்பொருள் வெண்பாமாலை |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர்கள் |
| உ.ஆ. | – | உரையாசிரியர்கள் |
| பா.எ. | – | பாடல் எண் |
| மேலது | – | மேலே சுட்டியது |
| தொ.ஆ. | – | தொகுப்பாசிரியார் |

# பொருளடக்கம்

# முன்னுரை

வாய்மொழியாகவோ அல்லது எழுத்து மூலமாகவோ சொல்லப்படும் உண்மை அல்லது கற்பனை நிகழ்ச்சிகளின் தொகுப்பு கதையாகும். ஒரு கதையின் முக்கியமான சிறப்பு அடுத்து என்ன நிகழ்ந்தது என்று அறிய வேண்டுமென்னும் ஆவலைத் தூண்டுவதாகும். ஏனைய சிறப்புகளெல்லாம் கதை கூறுவோனின் ஆற்றலைப் பொறுத்து அமையும். காவியம், கதைப்பாடல், நாடகம், புதினம், சிறுகதை ஆகிய பல இலக்கிய வகைகளுக்கும் கதையே அடிப்படையானது. இக்கதைகள் சங்க காலத்தேயே இலக்கியங்களுள் பயின்று வருவதைக் காணமுடிகின்றது.

சங்கத் தமிழ் நூல்களில் புலவர் பெருமக்களால் பதிவு செய்யப்பட்டுள்ள இக்கதைகள் தமிழரின் பண்பாட்டையும் செம்மாந்த வாழ்வையும் அற உணர்வையும் காட்டும் கண்ணாடி, கலைகளுக்கெல்லாம் முன்னோடியாகும். மேலும் அக்காலத்து மன்னர்கள் மற்றும் அவர்கள் ஆண்ட நாட்டின் நிலையையும் மக்கள் மன உணர்வுகளையும் அரசர்களின் குடி தழுவிய செங்கோலையும் சான்றோர்களின் அறன் வலியுறுத்தலையும் புராணச் செய்திகளையும் அறிந்து கொள்ளும் சாதனங்களாக இவை திகழ்கின்றன. சங்க இலக்கியங்களுள் பரவிக் காணப்படும் இக்கதைகளை இவ்வாய்வு எடுத்துரைக்கின்றது.

## ஆய்வுத் தலைப்பு

“சங்க இலக்கியத்தில் கதைகள்” என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

சங்கப் புலவர்கள் காதலையும் வீரத்தையும் சிறப்பாகப் பாடியுள்ளனர். காதலைப் பற்றிப் பாடியதை அகப்பாட்டு என்றும், வீரம், கொடை பற்றிப் பாடியதை புறப்பாட்டு எனவும் கொண்டு சங்க இலக்கியங்கள் அமைந்துள்ளது.

சங்க இலக்கியப் பாடல்களில் ஒரு முத்துதான் கதைகள். அக்கதைகள் சங்க இலக்கியங்கள் தோறும் பரவிக் கிடக்கின்றன. இக்கதைகள் பற்றியும் அதன் வகைப்பாடு குறித்தும் எடுத்துக் கூறுவதுடன் கதைகூறும் தொன்மைப் பழக்கம், அக்கதைகளின் சிறப்பு பயன்படுத்தப் பட்டுள்ள தன்மை, கதைகளை எடுத்துரைத்த புலவர்களின் தனித்திறன் இக்கதைகளைப் பெற்றதால் மேலும் உயர்வுபெறும் சங்க இலக்கியத்தின் சிறப்புகள் போன்றவற்றை ஆய்வு வழி எடுத்துரைப்பதே ஈண்டு ஆய்வு நோக்கமானது.

## கருதுகோள்

சங்க இலக்கியத்தின் கண் ஆராய்ச்சிக்குரிய பல செய்திகள் பொதிந்து கிடக்கின்றன. மேல் நோக்காய் காண ஒரு செய்தியும், அது உணர்த்தும் பொருளோ பல செய்திகளையும் எடுத்துரைக்கும் பாக்கள் நிறைந்துள்ளன. அந்த வகையில் சங்க இலக்கியப் பாக்களுள் பயின்று வரும் கதைகள் பல என்றும், அவை செய்திகளை உணர்த்தி நிற்கின்றன என்பதையும் நிறுவுவதே கருதுகோளாக அமைந்தது. இக்கருதுகோள் ஆய்வின் வழி நிறுவப்பட்டுள்ளது.

## ஆய்வின் மூலங்கள்

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை பத்துப்பாட்டு நூல்கள் இவ்வாய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாகின்றன. திறனாய்வு நூல்கள், ஆய்வேடு, அகராதிகள் போன்றன இவ்வாய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாகின்றன. திறனாய்வு நூல்கள், ஆய்வேடு, அகராதிகள் போன்றன இவ்வாய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாகின்றன.

## ஆய்வு அணுகுமுறைகள்

சங்க இலக்கியங்கள் எனப் போற்றப்படும் அகப்புற இலக்கியங்களில் அமைந்துள்ள கதைகளைப் பகுத்துக்கூறும் வண்ணம் பகுப்பாய்வு

அணுகுமுறையும் அதனை விளக்கிக்கூறும் முகமாக விளக்கவியல் அணுகுமுறையும் கையாளப்படுகிறது.

**ஆய்வுப்பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களாகப் பகுக்கப்படுகிறது.

1. கதைகள் – விளக்கம்
2. சங்க இலக்கியத்தில் கதைகள்
3. சங்கப் புலவர்களின் கதைத்திறன்

என்பவையாகும்.

“கதைகள் விளக்கம்” என்னும் முதலாம் இயலில் கதை என்பதற்கான விளக்கமும், திறனாய்வாளர்களின் கருத்துக்களும், கதைகள் அன்றிலிருந்து இன்றுவரை உள்ள தன்மைகள் குறித்தும் விளக்கியுரைக்கப் பட்டுள்ளது.

“சங்க இலக்கியத்தில் கதைகள்” என்னும் இரண்டாமியலில் சங்க இலக்கியங்களில் எட்டுத்தொகை பத்துப்பாட்டு நூல்களில் விரவிக் கிடக்கும் கதைகள் மன்னர் குறித்த கதைகள், கடவுள் குறித்த கதைகள், குறுநில மன்னர்கள், கடையேழு வள்ளல்கள் குறித்தும், யார் கூற்றில் கதைகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன என்ற செய்திகள் வகைமை அடிப்படையில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

மூன்றாமியலில் கதைகள் வாயிலாக அறியலாகும் சமூகம், சங்கப் புலவர்கள் பாடல்களில் கதைகளை எடுத்துரைத்துள்ள பாங்கு, சங்ககாலச் சமூகச் செய்திகளைப் பதிவு செய்த தன்மை, மக்களது வாழ்க்கை முறை, இன்றளவும் ஆளப்படும் கதைகள்போன்றவை இவ்வியலில் விரித்துரைக்கப்பட்டுள்ளது.

ஆய்வின் வழி கண்டறிந்த முடிவுகள் முடிவுரையில் தரப்பெற்றுள்ளன.

இக்கதைகள் தொடர்பான தகவல்களும் அட்டவணைகள், ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்டுள்ள நூல்களின் விவரங்கள் போன்றவை பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது.

வாய்மொழியாகவோ அல்லது எழுத்து மூலமாகவோ சொல்லப்படும் உண்மை அல்லது கற்பனைநிழ்ச்சிகளின் தொகுப்பு கதையாகும். ஒரு கதையின் முக்கியமான சிறப்பு அடுத்து என்ன நிழ்ந்தது என்று அறிய வேண்டுமென்னும் ஆவலைத் தூண்டுவதாகும். ஏனைய சிறப்புகளெல்லாம் கதை கூறுவோனின் ஆற்றலைப் பொறுத்து அமையும். காவியம், கதைப்பாடல், நாடகம், புதினம், சிறுகதை ஆகிய பல இலக்கிய வகைகளுக்கும் கதையே அடிப்படையானது.

**கதை - அகராதிகள் தரும் விளக்கம்**

"கதை பெரிய சரிதம், இதிகாச புராணங்கள், விசித்திரக்கதை, கட்டுக்கதை, உரையாடல். தண்டாயுதம் என்று அடோன் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது."[1]

"ஒருவரின் வாழ்க்கையையும் நடத்தையையும் பற்றிக் கூறப்படும் செய்தி என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது."[2]

"பெரிய சரிதம், வரலாறு, கட்டுக்கதை, இதிகாச புராணங்கள், பெருங்கதை, பொய்ச் செய்தி, சொல், உரையாடல், விதம், தடி, தண்டாயுதம் என்று தமிழ் - தமிழ் அகர முதலி விளக்கம் தருகிறது."[3]

"கதை-சரிதம், காரணச்சொல், தடி, கட்டுக்கதை, தண்டாயுதம், சம்பாஷனை என்று பவானந்தர் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது."[4]

"சரிதை, தண்டாயுதம், காரணச்சொல், உரையாடல், வரலாறு, சொல், பொய், கதையென்னேவல் என்று கழகத் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது."[5]

"அபிதான சிந்தாமணி கதைக்கு தரும் விளக்கம் விஷ்ணுவின் பஞ்சாயுதங்களில் ஒன்று."[6] இவ்வாறு அகராதிகள் கதைக்கு பல விளக்கங்கள் தருகிறது.

**பழந்தமிழில் சிறுகதைக் கூறுகள்**

*கதை ஏதேனும் ஒரு செய்தியை, நிகழ்ச்சியை அல்லது கற்பனையான ஒன்றை மையமாக வைத்துச் சுவையுடன் சொல்லப்படுவது, நடந்ததைப் பற்றிய விவரத் தொகுப்பு.*

*கதைகள் மனித மனத்தைப் பிணிப்பது மனிதன் பிறந்தது முதல்கதை கேட்க விரும்புகிறான். சிறு குழந்தைகள் வீட்டிலுள்ள பெரியவர்களை தாத்தா கதை சொல்லு பாட்டி கதை சொல்லு என்று நச்சரிப்பார்கள். காந்தி அரிச்சந்திரன் கதையால் ஈர்க்கப்பெற்றார். அதனால் உண்மையே ''வாழ்க்கை'' எனக் கருதினார். சத்ரபதி சிவாஜி, சிறுவயதில் தம் தாயிடம் வீரக்கதைகளைக் கேட்டு வீரரானர். கதைகள் எல்லா நாட்டிற்கும் பொதுச் சொத்து, ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு முறையில் அமையும்.*

*பழங்காலத்தில் தமிழ் இலக்கியம் செய்யுள் வடிவில் இருந்தது. உரைநடை வடிவமும் தொல்காப்பியக் காலத்திற்கு முன்பே இருந்தது.*

***''பாட்டிடை வைத்த குறிப்பினானும்***
***பாவின்றெழுந்த கிளவியானும்***
***பொருள்மர பில்லாப் பொய்ம் மொழியானும்***
***பொருளொடு புணர்ந்த நகை மொழியானும் என்று***
***உரைவகை நடையே நான்கென மொழிப''***

***(தொல்.செய்யுள்.171)***

*இதில் ''பொருள் மரபு இல்லா பொய்ம்மொழி என்பதற்கு பொருளற்ற பொய் மரபுக்கதை''*[7]

*''பொருளொடு புணரா பொய்ம்மொழி என உண்மையோடு சேராமல் சொல்லப்பெறும் கட்டுக்கதையும், பொருளோடு சேராமல் நகைமொழி என உண்மையை நகைச்சுவைப்படச் சொல்லும் உரை எனவும் கூறியுள்ளது கதை இலக்கிய வகையேயாகுமென்பர்.''*[8]

தமிழில் சிறுகதையின் தோற்றம் பற்றி நினைப்போர் தொல்காப்பியத்திற்குப் போய்விடுவதுண்டு. செய்யுளியலில் "உரை" என விளங்கிய ஒன்றில் "பொருளொடு புணராப் பொய்ம்மொழி எனவும் பொருளொடு புணர்ந்த நகைமொழி நகைமொழி எனவும் அமைந்தவை பிற்கால உரையாசிரியரால் "புனைந்துரை"யாகக் காட்டப்பட்டு கதை எனும் எண்ணத்தைத் தந்தன."[9]

"சங்கத் தனிப்பாடல்களைச் சிறுகதைக் கருவினதாக நினைத்து விளக்கும் நிலையும் திறனாய்வாளரிடம் அமைகின்றது."[10] கலித் தொகையில் வரும் சல பாடல்கள் சிறுகதைகள் போல் அமைந்துள்ளது.

சங்க இலக்கியத்தில் தனிப்பாடல்கள் அனைத்தும் சிறுகதைகளே ஒவ்வொன்றும் ஒவ்வொரு தன்மையில் அமைந்து மக்களுக்கு நல்ல பல கருத்துக்களை எடுத்து இயம்புவன.

பல வரலாற்று நிகழ்வுகள் கதைகளாக மாறுகின்றன. கதை கூறும் களமாக தலைவன் தலைவி சந்திக்கும் இடம் அமையும். தலைவன் தலைவிக்கு கூறும் விதமாகவும், தலைவிக்கு தோழி கூறும் விதமாகவும் கதை அமையலாம்.

"கதை என்பது உவமைத் தன்மையில் ஒருவருக்கு எடுத்துக்காட்டிக் கூறுவது போல் அமையும்."[11]

கதைகளை பல பிரிவுகளாக அமைக்கலாம்

1. மன்னர்களைப் பற்றியது
2. கடவுளர்களைப் பற்றியது
3. குடிமக்களைப் பற்றியது.

சங்க இலக்கிய கலித்தொகையில் இராமாயண, மகாபாரதக் கதைகள் இடம் பெற்றுள்ளன. சீதையினை இராவணன் கடத்திச் செல்லும்போது சீதை தான் அணிந்திருந்த ஆபரணங்களை கழற்றி காட்டிடையே வீசிச் சென்றாள். அப்போது இராவணன் அவளை விடவில்லை. இலங்கைக்கு தூக்கிச் சென்றான். அதன்பின் இராமன் தன் படையை ஏவி சீதையை தேடச் சொன்னபோது

அவர்கள் வனத்தில் தேடினார்கள். அப்போது சீதாவின் ஒவ்வொரு அணிகலன்களும் கிடைத்தது. கிடைத்தவற்றை வானரங்கள் தாங்கள் அணிவித்து மகிழ்ந்தது. இக்குறிப்பு கலித்தொகைப்பாடலில் சுட்டப் பட்டுள்ளது. வீமன் துச்சாதனன் தொடையைப் பிளந்த நிகழ்வு, அரக்கு மாளிகைக்கு தீமூட்டிய சம்பவம் போன்ற இதிகாசக் கதைகளும் சங்க இலக்கியப் பாடல்களில் கூறப்படுகிறது.

**தோற்றம்**

"ஆதி மனிதன் காட்டில் வேட்டையாடச் சென்று திரும்பியவுடன் தன் அனுபவங்களை மற்றவர்களுக்கு சொன்னதிலேயே கதையின் தொடக்கத்தைக் காணலாம் என்று கதைகளின் தோற்றத்தைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்."[12] இந்திய இலக்கியத்தின் மிகப் பழமையான வடிவம் கதை தான். கவிதை தோன்று முன்னர் கதைகள் தோன்றின. இக்கதைகளே கவிதைகளின் பொருளாயின என்பது உண்மை.

"உலகம் படைக்கப்பட்ட விதம் பற்றி வரலாற்று முற்கால மக்கள் பல கதைகளைப் படைத்திருக்கிறார்கள். உலகைப் படைத்தது தாய்தான். அவளை உலக மாதாவாகக் கருதி படைக்கப்பட்ட கதைகள் ஒரு விதம். உலகைப் படைத்தது தந்தை தான். அவர் உலகப் பிதா என்று கருதிப் படைக்கப்பட்ட கதைகள் இன்னொரு விதம் சில கதைகளில் தாய் கடலையும், வானையும் படைத்தாள் என்றும், பூமியையும், உயிரினங்களையும் படைத்தானென்றும் கூறப்படுகிறது."[13]

இவையாயும் நாகரிக முற்கால மக்களின் வாய்மொழிக் கதைகள் இவற்றை எழுத்துத் தோன்றிய பின்னர் தனிக்கதைகளாகவும், காப்பியங்களின் பகுதிகளாகவும், சமய நூல்களின் பகுதிகளாகவும் உருவாக்கினர். இவற்றுள் பழமையானவை பாபிலோனிய சுமேரியக் கதைகள் கிரேக்கக் கதைகள், யூதர்களது கதைகள், ஆரியர்களது வேதப்புராணக் கதைகள் முதலியனவாகும்.

நாகரிகம் வளராத ஆதிகாலத்தில் சமுதாயத்தில் வழங்கிய புனைகதை அதாவது மூலநிலைப் புனைகதை சொல்லப்படுகின்ற ஒரு கதையன்று. அது வாழ்க்கையின் உண்மையாகும். இன்று நாம் படிக்கும் ஒரு புதினத்தின் தன்மையைப் பெற்றதன்று நாகரிக முற்கால புனைக்கதை. அக்கதையின் நிகழ்ச்சிகள் உண்மையில் புராதன காலத்தில் நடைபெற்றதாக அக்கதையைச் சொல்லுபவர்கள் நம்புகிறார்கள்.

அது மட்டுமல்லாமல் அக்கதையின் சம்பவங்கள், நிகழ்ந்த காலத்திலிருந்து தம் காலம் வரை உலகையும், மனித விதியையும் இயக்கி வருவதாகவும் அவர்கள் நம்புகிறார்கள். "ஒரு கிறிஸ்துவன் பைபிள் கதையான, சிருஷ்டி, மனிதன், தாழ்வு, சிலுவையில் மரித்த கிருத்துவினால் மனிதன் மேன்மை பெறுவது ஆகிய சம்பவங்கள் எவ்வளவு உண்மையெனக் கருதுகிறானோ அவ்வளவுக்குத்தான் கூறும் கதைகள் உண்மையெனப் பண்டை மனிதன் நம்பினான்."[14]

பண்டைய பண்பாட்டு வளர்ச்சி நிலையில் இருக்கும் தற்கால இனக்குழு மக்களும் அவ்வாறே நம்புவதை மானிடவியலாளர் கண்டுள்ளார்கள். புனைக்கதைகள் இத்தன்மையன என்பதை அறிந்து கொண்ட பின், நாம் உலகப் படைப்புக் கதைகளில் மிகப் பண்டைக் காலக்கதைகளை ஆராய்ந்து அவற்றின் தோற்றத்திற்கு அடிப்படையான சமுதாய அடித்தளத்தைக் கண்டுபிடித்து இரண்டையும் தொடர்புபடுத்திக் காணமுடியும்.

பண்டைக் கதைகளில் மிகப் பழமையானவை பாபிலோனிய சுமேரியக்கதை, கிரேக்கக் கதைகள் ஆகியவையாகும். அதற்கடுத்த பண்பாட்டுக் கட்டத்தில் யூதர்களது யெஷோவா படைப்புக் கதையைக் கூறலாம். "இதைப் பின்பற்றியே "பைபிள்" உலக படைப்பின் வரலாற்றைக் கூறுகிறது."[15] ஏறக்குறைய அதே பண்பாட்டு வளர்ச்சி நிலையில் ரிக்வேதத்தில் காணப்படும் புருஷசூக்தக் கதைகளைக் கூறலாம். பின்னர் விஷ்ணு புராணத்தில் கூறப்படும் நாராயணன் உலகப்படைப்புக் கதையைக் குறிப்பிடலாம்.

கதை புனைந்த மனிதன் தன்னைச் சுற்றிலும் இயற்கைப் பொருள்களைக் கண்டான். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், கடல், பூமி, மலை இவற்றையெல்லாம் பார்த்தான். அவற்றொடு தொடர்பு கொண்டு தனது வாழ்க்கையை அமைத்துக்கொள்ள முயன்றான். அவனுடைய மனதில் இவை தோன்றிய காலம் கற்பனையில் தோன்றியது. தன்னுடைய வாழ்க்கையின் அனுபவங்களின் மூலம் மனதில் தோற்றத்தையும் கற்பனை மூலமாக உருவாக்க முயன்றான்.

தாயும் சேயும் பிரசவத்திற்கு முன் ஒன்றாயிருந்து பின்னர் பிரிவது, முட்டையினுள் வளர்ச்சியடைந்த கரு முட்டையுடைந்து குஞ்சாவது போன்ற தோற்ற நிலைகளை அவன் அனுபவ மூலம் அறிந்திருந்தான். அது போலவே தான் ஒளிக்கோளங்கள் இல்லாத காலத்தில் பொருள் ஒருமையில் இருந்தது. நீர் மட்டும் வெள்ளமாகப் பெருகி வந்ததும் அதன்பின்னர் ஒளிக்கோளங்கள் வந்ததாகவும் கற்பனையில் அனுமானம் செய்தான்.

இவ்வாறு மிகவும் எளிய நாகரிக நிலையில் வாழ்ந்த மனிதன், மிக எளிய கற்பனையில் புனைகதைகளைப் படைத்தான்.

**உலக அரங்கில் கதை**

உலக நாடுகள் எல்லாவற்றிலும் மிகப் பழங்காலத்திலேயே கட்டுக் கதைகளும் நீதிக் கதைகளும் வழங்கப்பட்டு வந்துள்ளன. இக்கதைகளில் பல இயற்கை இறந்த நிகழ்ச்சிகளைச் சித்தரிப்பவை.

வரலாற்றை நோக்கும் போது மனிதன் பல்வேறு வகைகளில் கதை கூறி மகிழ்ச்சி அடைந்துள்ளான் எனத் தெரிகிறது. நையாண்டிக்கதை, நூதனக்கதை, ஒட்டுவமைக்கதை, மந்திர தந்திரக்கதை, கட்டுக்கதை என்ற வகைகளைக் காணமுடிகிறது.

இவற்றின் மேல் வளர்ச்சியாக கி.பி.19ம் நூற்றாண்டில் தோன்றிய சிறுகதையைக் கருதுவதில் தவறில்லை. மேலும் அந்த நூற்றாண்டில் வணிக, விவசாயமும், கைத்தொழில் வளர்ச்சியும் பெருக நில மானிய அமைப்புச் சிதையத் தொடங்கியது.

இதன் தாக்கத்தால் கூட்டுக் குடும்ப வாழ்க்கைமுறை சிதையத் தொடங்கியது. தனிமனிதன் முதன்மைப்பெறத் தொடங்கினான். தனி மனிதனுக்கும், சமுதாயத்திற்கும் உள்ள மரபுவழி உறவு பிறழத் தொடங்கியது. இதனால் ஏற்பட்ட தனிமனித சமுதாயச் சிக்கல்கள் புனைகதை வடிவில் வெளிவரத் தொடங்கின. அமெரிக்க, உருசியா, பிரான்சு, செருமனி ஆகிய நாடுகளில் உரைநடையில் அமைந்த புனைகதைகள் தோன்றின.

**கதை கூறுவதில் இந்திய மரபு**

ஐரோப்பிய எடுத்துரைப்பு முறைக்கு மாறான ஒரு கதை கூறும் மரபு இந்தியக் கதை மரபில் உண்டு. இதில் ஆசிரியரே நேரடியாக வாசகனை நோக்கிக் கதையைக் கூறிவிடுவார். இக்கதை கூறும் மரபுக்கு நீண்ட வரலாறு உண்டு.

கதைகள் கூறுவதன் மூலம் மந்திர சக்தியைப் பயன்படுத்தி நோய்களைத் தீர்க்கவியலும்என்ற நம்பிக்கை பண்டைய தொல்குடி மக்களிடம் இருந்ததாக ஜார்ஜ் தாம்சன் கூறுவதும் எண்ணத்தக்கதாகும். இக்கருதுகோள் அனைத்துமே கதை கூறும் மரபும் கதை கேட்கும் ஆர்வமும் மனிதனின் இயல்பூக்கத்திலே அமைந்திருந்தன என்பதை நிறுவுவதற்காகத் தான் என்பது குறிப்பிடத்தக்கது.

இதில் கவனிக்க வேண்டிய முக்கிய அம்சம் என்னவென்றால் கதையை எடுத்துரைக்கும் பண்டைய முறையிலாகும். பண்டைய கதைகூறும் முறையில் கதை கூறுவோன், கதைகேட்போன் என்ற இருவருக்குமிடையே தான் கதைப் பரிமாற்றம் நடக்கிறது. இதற்கு ஏற்றவாறு அதாவது இந்த கூற்று முறைக்கு ஏற்றவாறு கதைகளில் நேரடித் தன்மை அமைந்துவிடுகிறது. இந்த நேரடித் தன்மைதான் இந்திய கதைகூற்று முறையின் சிறப்பு பண்பு. நாட்டுப்புறக் கதைகூறும் மரபிற்கு இது பொருந்தும்.

“கதை என்பதன் அடிச்சொல்லான ‘கத்’ என்பதற்குப் பேசுதல், சொல்லுதல் என்ற பொருள்கள் உண்டு. எனவே கதை என்றாலே ஒருவர்

*சொல்லப் பலர் கேட்டல் என்றே பொருள். இவற்றில் நீதி போதனை முக்கியம் இடம்பெற்றது. எனவே நேரடித் தன்மையும், நீதிபோதனைப் பங்கும் கொண்ட இந்தியப் பஞ்ச தந்திரக்கதைகள். நாட்டுப்புறக் கதைகளும் இன்றைய சிறுகதைக்குரிய மூலவித்துகள்''*[16] *கதை சொல்லுதலும் கேட்டலும் காலம் காலமாக நடந்து வருவன. தொல்காப்பியர் காலத்திலேயே செவிலித்தாய் கதைகூறும் முறை இருந்துள்ளமையை,*

**''பொருளொடு புணராப்பொய்ம்மொழியானும்**

**பொருளொடு புணர்ந்த நகை மொழியானும்''**

***(தொல்.செய்.171)***

*எனும் தொல்காப்பிய வரிகளோடு உரையாசிரியர்கள் தரும் உரை விளக்கும் ஆயின் இவை கதைக்கூறுகளே.*

**சங்க இலக்கியத்தில் தொன்மம்**

*''தொன்மை தானே உரையொடு புணர்ந்த யாப்பின் மேற்றே'' என்று தொல்காப்பியர் கூறும்போது, தொன்மம் பழமைக்கும் பழமை பயக்கும் பெற்றி புலனாம்.*

*ஓர் இனம் காலங்காலமாக இந்நிலவுலகில் வாழ்ந்ததினால் உருவாகிய பண்பாட்டின் விளைவால் தொன்மங்கள் தோன்றின. எனவே, ''பழங்கதைகளாம் தொன்மங்கள் கூட்டுக் கற்பனையாலும், கூட்டு அனுபவத்தாலும் கிளர்ந்து எழுந்தவை''*[17] *இவை ஒருநாளில் உருவாகியவை அல்ல. காலத்தின் கோலத்தினால் இக்கதைகள் கருவாகி வளருகின்றன.*

*கன்னி கருவுற்றுப் பிள்ளையைப் பெறுதல் ஓர் உயரிய வாழ்க்கைக்கு வழிகாட்டும் படிமமாவதைப் பார்க்கலாம். கன்னிமரியாள் கருவுற்றது, குந்தி கன்னியாய் இருக்கும் போதே மகவு பெற்றது போன்றன தொன்மங்களில் பேரிடம் பெறுகின்றன. உலகெங்கனும் இத்தகைய தொன்மக் கருத்துக்கள் ஊடாடுவதைக் காணலாம்.*

மரமும் பாம்பும் தொன்மங்களில் பேரிடம் பெற்றன. மரத்தில் கடவுள் வாழ்வதாகத் தொன்மங்கள் உண்டு. ‘‘ஆலமர் செல்வன்’’ என்ற வழக்கினைச் சங்கத் தமிழில் காணலாம். குருந்த மரநிழலில் குருவடிவாய்த் தோன்றிய கடவுள் மணிவாசகருக்கு அனுபூதி அளித்தது மரங்கள் தொன்மத்தில் பெறும் பேரிடத்தைத் தெள்ளிதின் சுட்டும். ‘‘ஆலமர் கடவுள்’’ என்றால், ஆலமரத்தின் அடியில் உள்ள கடவுள் என்று பொருள் அன்று; ‘‘அமர்’’ என்ற சொல், சங்கத் தமிழில் ‘‘விருப்பம்’’ என்ற பொருளில் வரும் ஆலமரத்தை விரும்பி உறையும் கடவுள் என்றே பொருள் கோடல் சாலப் பொருந்தும். புத்தர் போதி மரத்தடியில் ஞானம் பெற்றமையை குறிப்பிடல் மரங்கள் மனித வாழ்வில் கொண்ட தொடர்பினை நன்கு காட்டும். மனிதர்கள் தோன்றுவதற்கு முன்னரே இந்நிலவுலகில் மரங்கள் இருந்தன. தொன்மைக்குத் தொன்மை எனப்படும் ‘‘ஆதாம் ஏவாள்’’ கதை இதை மெய்ப்பிக்கும். இத்தொன்மத்தில் மரம் கனி தருதல் (GARDEN OF EDEN) என்பது நன்மைக்கும் தீமைக்கும் பாலமாய் அமைந்து படிமம் ஆதலைக் காட்டும்.

தொன்மத்தை ஆங்கிலத்தில் ‘‘மித்’’ என்ற சொல்லால் குறிப்பிடுவர். ‘‘மித்’’ என்ற ஆங்கிலச் சொல்லுக்கு உண்மையான அல்லது கற்பனையான கதை அல்லது உட்கரு என்று பொருள்படும்.’’[18]

இதனை Mythos என்ற கிரேக்கச் சொல்லின் திரிபாகக் கருதுவர். அரிஸ்டாடில் இப்பொருளில் தான் ‘‘மித்’’ என்ற சொல்லைக் கவிதையியல் எனும் தன் நூலில் கையாளுகிறார்.’’[19]

இற்றைநாளில் ‘‘புராணம்’’ என்ற சொல் ஒரு பழங்கதை அல்லது நிகழ்ச்சி. அது நம்ப இயலாத ஒன்று என்ற கருத்தில் தான் பேசப்படுகிறது. பொதுவாக மூன்று வகைப்பொருள்கள் உண்டு.

தொன்மம் எனில் அது மிகப் பழைய மரபுவழி வந்த கதை. இக்கதையின் ஆசிரியர் யார் என்பதை அறுதியிட்டு உறுதியாகச் சொல்ல இயலாது. ஒரு காலத்தில் தொன்மம் தோன்றிய சூழலில் தொன்மம் தரும் செய்திகளை உண்மையென நம்பி இருந்தனர்.

★ இயற்கை இகந்த ஆற்றல்களுக்கு உட்பட்டுஇவ்வுலகம் ஏன் இயங்குகிறது. இந்நிலவுலகில் நடக்கும் நிகழ்ச்சிகள் ஏன் இவ்வாறு நடக்கின்றன என்பதை விளக்கவும் இச்சொல் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.

★ தொன்றுதொட்டு வரும் சமூகப் பழக்க வழக்கங்கள் மனிதர் தம் வாழ்வினை நெறிமுறையாக அமைப்பதற்கு உதவுகின்றன. அத்தகைய நியதிகளின் அடிப்படைக் கோட்பாட்டினை இச்சொல் உணர்த்தும்.

தொன்மங்கள் இலக்கியங்களின் ஆன்மா என் அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார். இ.பி.டெய்லர் அவர்கள் புராணக்கதைகள் தங்களை உருவாக்கிய மக்களைப் பற்றியும் பயன்படுத்துவோரைப் பற்றியும் கூறுகிறது என்கிறார். மானிடவியல் பேரறிஞர் மாலினோவஸ்கி அவர்கள் புராணக் கதைகளைச் சமுதாயத்தின் தனியுரிமைப் பத்திரம் என்கிறார். மர்சியா எலியட் அவர்கள் மனிதனின் தொடக்க நிலைகளைப் பற்றியும் தோற்றங்கள் பற்றியும் கூறுவன, புராணக்கதைகளில் காணப்படும் நிகழ்ச்சிகள் மீண்டும் மீண்டும் உலகத்தில் நிகழ்கின்றன என்கிறார்.”[20]

தொன்மத்தில் செயற்கரிய செயல்களை ஆற்றிய மனிதர்களையே மக்கள், கடவுளாக்கிக் காட்டினார்கள். மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என மனிதனாகப் போற்றப்பட்ட மன்னன், தொன்மத்தில் தோய்ந்த காரணத்தால், “திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே” என்ற கருத்து உயர்வுக்கு மன்னர் அழைத்துச் செல்லப்படுகிறான். எகிப்திய அரசர்களும், ரோமானிய சக்கரவர்த்திகளும் இப்படித்தான் கடவுள்களாகப் பாராட்டப்பட்டனர்.

தொன்மம் சமயக் கொள்கைகள் தோன்று முன்னரே மக்கள் உள்ளத்தில் உருவாகியது. தொன்மை என்று தொல்காப்பியர் சுட்டுவதற்குப் பலகாலத்திற்கு முன்பே அதைப்பற்றிய கூறுகளும் விளக்கவுரைகளும் தோன்றிவிட்டன.

சில தொன்மக்கதைகள் புகழ்மிக்கன. இராமாயணம், மகாபாரதம் போன்றவை இதற்குக் காட்டாகச் சுட்டலாம். இவை இந்திய வரலாற்றோடு பின்னிப் பிணைந்து காணப்படுகின்றன.

தொன்மத் திறனாளிகள் கண்டறிந்த உண்மைகள் சில உண்டு. அன்றுதொட்டு இன்றுவரை கற்புடைய மனைவி எந்தச் சூழலிலும் கணவனைச் சார்ந்து நிற்றல் என்பதும், ஆனால் கணவனோ, மனைவியைக் கைவிட்டுப் பரத்தையை நாடுதல் என்பதும் அழகிய பெண்ணின் கண்களை மீனிற்கு ஒப்பிடுதல் போன்ற உருவக அமைப்பினைப் பின்பற்றல் என்பது வாழ்க்கையில் தொடர்ந்து காணப்படுகின்றன. இவை மனிதனின் அடிப்படை உள்ளத்திலே ஏற்படும் தொன்மைமிக்க அனுபவத்தின் எதிரொலியாகும். இத்தகைய கருத்துக்களைக் கொண்டே ராபர்ட் கிரேவ்ஸ், பிலிப்வீல்ரைட் லெஸ்லிஃபிட்லர் முதலியோரும், மிகச் சிறந்த தொன்மத் திறனாளியான நார்த்ராப் ப்ரை போன்றோரும் எல்லா இலக்கிய வகைகளும் தனிப்பட்ட இலக்கிய கதைக் கருப்பின்னல்களும் இலக்கியத்தில் மீண்டும் மீண்டும் நிகழும் மூலப்படிமங்கள் என்று சுட்டுகின்றனர். தொன்மப் பிரிவுகள் தாம் இலக்கிய மரபுகளாகவும் இலக்கியப் பிரிவுகளாகவும் மாறுகின்றன என்பது அவர்தம் கருத்தாகும்.

தொன்மங்கள் இலக்கியத்திற்கு ஆதியாய் நின்றன. முதன்முதலில் தோன்றிய தொன்மங்கள், உலகத் தோற்றத்தையும் அண்டசராசரங்களையும் வியக்கும் தன்மைகள் நிறைந்தனவாய்க் காணப்பட்டன. இயற்கைக்கும், தொன்மத்திற்கும் வேறுபாடு அதிகம் இல்லை என்று கருதத்தக்க வருணனைகளாய்க் காட்சி அளித்தன.

காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வாணிகனார் மகனார் நப்பூதனார் பாடிய முல்லைப்பாட்டில் முல்லை நிலத்தின் வருணனை தொன்ம நினைப்பை நமக்கு ஊட்டுகின்றது.

**“நனந்தலை உலகம் வளைஇ, நேமியோடு**
**வலம்புரி நொறித்த மாதாங்கு தடக்கை**

**நீர்செல நிமிர்த்த மாஅல் போல**

**பாடுஇமிழ் பனிக்கடல் பருகி, வலன்ஏர்பு**

**கோடுகொண்டு எழுந்த கொடுஞ்செலவுஎழிலி''**

***(முல்லை.1–3)***

*முல்லை நிலத்தின் இயற்கை வருணனையாக அமைந்த இவ்வரிகள், இருக்க, எஜீர் வேதங்களில் காணப்படும் இயற்கை வருணனையாக இல்லாமல், உவமை எனும் இலக்கிய உத்தியாகவே பயன்படுத்தப்பட்டுள்ளது. மூன்று நிலைகளில் தொன்மங்கள் இந்நில உலகில் அவை வருமாறு:*

1. *இயற்கை என்றும் தொன்மம் என்றும் வேறுபாடின்றி வருணனையாய் அமையும் திறம்.*
2. *தொன்மக் கதைகளைக் காப்பியங்களாகவும், புராணங்களாகவும், சமயப் படிமக் கருத்தைப் பரப்பும் கருவூலங்களாகவும் கூறும்தரம்.*
3. *தொன்மங்களை இலக்கிய விளக்க உத்திகளாகப் பயன்படுத்தும் வித்தகம்.*

*மூன்றாவது நிலையாகிய தொன்மங்களை, இலக்கிய விளக்க உத்தியாய்ப் பயன்படுத்தும் வித்தகத்தைச் சங்க இலக்கியங்களில் பரந்து காணப்படுகிறது.*

*இந்திய நாட்டுத் தொன்மங்களில் இராமாயணம் காலத்தால் முற்பட்டது. ஆதி காவியம் என்று வடவரால் பாராட்டப் பெறுவது. அரிஸ்டாடில் கருத்துப்படி, காப்பியம் என்பது காலந்தோறும் பல்வேறு கதைகளால் கட்டப்பட்டது என்பதாகும். தேசிய கற்பனைகளினூடே இராமன் வளர்ந்தவன். எனவே ஒருமொழியில் உள்ள இராமாயணத் தொன்மக் கிளைக் கதைக்கூறு பிறிதொரு மொழியில் இல்லாமல் போகலாம். ஆயினும், இராமகாதை என்று தொன்மக் கிளைக் கதைகளையும் கற்பனை நிகழ்ச்சிகளையும் அனைவரும் ஏற்றுக் கொள்வர்.*

*சங்க இலக்கியத்தில் கடுவன் மள்ளனார் எனும் புலவர் அகநானூற்றில் பாடியுள்ள பாட்டொன்றில் பின்வரும் கருத்தை விளக்க வேண்டும் என்று நினைக்கிறார்.*

ஒரு தலைவனும் தலைவியும், தம்முட் காதலித்துக் களவொழுக்கம் மேற்கொண்டிருந்த பொழுது, அலர் தூற்றிய அவ்வூர்ப் பெண்டிர்கள், பின்னர் அவ்விருவரும் முறைப்படி திருமணம் செய்து கொண்ட நிலையில், அலர் தூற்ற வாய்ப்பின்றி நாவடங்கி ஒடுங்கி நின்றனர்.

இராமாயணத்தில் இராமபிரான் சேதுவை மேடிருத்தி இலங்கை செல்லத் தலைப்படும் முன்னர், ஒருநாள் மாலை, தன் துணைவர்களாகிய வானர வீரர்களுடன் மேலே நிகழ்தற்குரிய அமரைக் குறித்துத் தனுக்கோடியிலுள்ள ஓர்ஆலமரத்தின் கீழ்த்தங்கியிருந்து ஆராய முற்பட்டார். அது மாலை நேரம் ஆதலின் அவ்வாலமரத்தின் கண் அடையும் பறவையினங்கள் தம் இயல்பிற்கேற்ப ஒன்றுகூடிப் பேரொலி செய்தன. அந்நிலை, கலந்துரையாடலுக்குச் சிறிது தடையாக இருந்தது. அதைக்கண்ட இராமன் அப்பறவைகளை நேக்கித் தம் திருக்கையை அமர்த்தினர். அவ்வளவில் ஆலின்கண் பேரரவம் செய்த பறவைகள், ஒலி செய்யாமல் அமைதியுற்றடங்கி நின்றன.

இக்கருத்தினைத் தொன்ம விளக்க உத்தியாய்ப் புலவர் வருமாறு பாடுகிறார்.

**“வென்வேற் கவுரியர் தொன்முது கோடி**
**முழங்கிரும் பவ்வம் இரங்கும் முன்துறை**
**வெவ்வேல் இராமன் அருமறைக்கு அவித்த**
**பல்வீழ் ஆலம் போல**
**ஒலியவிந் தன்று இவ்வழுங்கல் ஊரே”     (அகம்.70)**

கலித்தொகையில் ஒரு வருணனைப் பகுதியைக் கபிலர் விளக்க நினைக்கிறார். குறிஞ்சி நிலத்தில் இயற்கைச் சூழலில் ஒரு நிகழ்ச்சி நடக்கிறது. மலை நிலத்தில் வாழும் மதங்கொண்ட ஓர் யானை, பூத்துப்பொலிவு எய்தி நின்ற வேங்கை மரத்தையும் அதனடியில் புலி போல நிறங்குவிந்த மலர்களையும் கண்டு புலி என்றே மயங்கி மருண்டு, கறுவு கொண்டு வேங்கை மரத்தை அடியோடு பெயர்க்கத் தன் தந்தத்தினால் அழுத்தியது. ஆனால் வேங்கை மரத்தின் கண் அழுந்திய தந்தங்களை மீண்டும் இழுக்க முடியாமல் அவ்யானை அலறிக் கதறி ஓலமிட்டது.

இவ்வியற்கை நிகழ்ச்சியில் யானைபடும் துன்பத்தை மனத்தில் படும்படி விளக்க எண்ணினார் கபிலர். இராமாயணத் தொன்மம் அவர்க்குக் கைக்கொடுத்து உதவுகிறது.

இராவணன், சிவனும் உமையும் இருந்த திருக்கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க முயன்று முடியாமல் அதன் கீழ் கை அகப்பட்டுக் கொண்டதால் அலறிக் கதறி அல்லல் உற்று அமைந்து ஓலமிட்ட நிகழ்ச்சியை உவமமாக எடுத்துக்காட்டித் தாம் காட்ட வந்த வருணனையை உள்ளுறையுடன் பொலிவாக்குவதில் கபிலர் வெற்றி பெற்றார். அப்பாடல் என வரும்,

**"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமையமர்ந்து உயர்மலை இருந்தனன் ஆக**
**ஐயரு தலையின் அரக்கர் கோமான்"** ***(கலித்.38)***

இராமாயணத்தில் வரும் கிளைக்கதைத் தொன்மங்களை இலக்கியத்தில் சொல்லோவிய உவமையாக மட்டுமின்றிச் சித்திர மண்டப ஓவியமாகவும் சங்க இலக்கியத்தில் தீட்டி வைத்தனர் என்பதைப் பரிபாடல் மூலம் அறிகிறோம்.

இராமன் தாடகை வதம் புரிந்த பின்னர் அகலிகையின் சாபம் தீர்த்தவன். இந்திரன் வஞ்சக வடிவம் கொண்டு அகலிகையைக் கூடியதும், கவுதம முனிவர் வரக் கண்டு பூனை வடிவம் கொண்டு இந்திரன் கரந்தோடியதும், முனிவர் நிகழ்ந்தது உணர்ந்து அகலிகையைக் கல்லாகும் வண்ணம் சாபம் ஈந்ததும் என்பன போன்ற தொன்ம நிகழ்வுகள் இராமாயணத்தில் நிகழ்வன. இவற்றை

**"இந்திரன் பூனை; இவன் அகலிகை இவன்**
**சென்ற கவுதமன்; சினம் உறக்கல் உரு**
**ஒன்றியபடி இது என்றுரை செய்வோரும்"** ***(பரி.19)***

என்று பரிபாடல் கூறும்.

பாரதத் தொன்மக்கதை நிகழ்ச்சிகளும் சங்க இலக்கியத்தில் ஆங்காங்கே உவம உத்தியாகச் சுட்டப்பட்டு, நம் உள்ளங்களில்

தொன்மங்களைப் போல் அப்பாடல்கள் நிலைபெறுகின்றன. ''பாலைக்கலி'' காட்டும் பாரதத் தொன்மம் இது தலைவன் தலைவியைப் பிரிய நினைக்கிறான். பிரியும் வழியோ பாலை! இது தொடர்பாகக் கண்ணில்லாத இருவரும், அழகிய கண்ணுடைய தலைவியும் புலவர் மனக்கண்ணில் தோன்றுகின்றனர். ஆதித்த மண்டலத்திற்கு வடமொழியில் ''பகன்'' என்றொரு பெயர் உண்டு. அந்தப் பகன் கண்ணிலி; அவனைப் போன்றே கண்ணற்றவன் திருதராட்டிரன் ஆவான். அவன் மக்களுள் மூத்தவனான துரியோதனன் கொடியன். சேர்க்கையால் ஐவர் எனப் புகழ்பெற்ற பாண்டியர்கள், அரக்கு மாளிகைக்குள் இருக்க கொடிய நெருப்பினை அந்நாளிலே ஊட்டினான். அதேபோலக் களிப்பு மதநீர் கொண்ட களிறு உள்ளே அகப்பட்டுக் கொள்ளவும், உலர்ந்த மூங்கில்களோடு கூடிய உயர்ந்த மலையிலே பெருநெருப்புச் சூழ்ந்து கொண்டது. அன்று புகையழல் சூழ எரியும் அரக்கு மாளிகையை, வாயுக்குமரனாம் பீமன் உடைத்து, உள்ளத்துப் பேரன்பு கொண்ட தன்னைச் சார்ந்தவரோடு பிழைத்துத் தப்பிப் போனதைப் போல், கணைய மரத்தையும் தகர்க்கும் தடக்கையினை உடைய வேழமானது, புதர்கள் அழியும்படி மிதித்து விலக்கிக் கொண்டு, தன் இனத்தோடு கூடித் தப்பிச் செல்லும், அத்தகைய கொடிய வெம்மையான கானல் வழியைக் கடக்க நினைக்கும் தலைவனே! கலங்காத கதிரவன் கண்ணில்லாதவன். அவனுக்கு ஒப்பானவன் கண்ணில்லாத துரியோதனன். நீ சிறிது பிரிந்த அளவில் கலங்கிக் கண்ணீர் சொரியும் ''கண்'' என்ற உறுப்புடைய நின் தலைவி என்பதை மறக்காதே என்று தோழி கூறுவதாய் பாடல் அமைவதைக் கீழே காணலாம்.

**''வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற**
**முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்**
**'ஐவர்' என்று உலகேத்தும் அரசர்கள் அகத்தராக்**
**கைபுனை அரக்கு இல்லைக் கதழ்எரி சூழ்ந்தாங்குக''**

***(பாலைக்கலி.24)***

இதுபோன்ற பாரதக் கதைத் தொன்மங்கள் விளக்கஉவம உத்தியாய் மிளர்வதைச் சங்க இலக்கியத்துள் ஆங்காங்கே காணலாம்.

இலக்கிய உத்தி என்ற அளவில் தொன்மங்கள் உவமாய் மட்டும் நின்றுவிடுவதில்லை! தொன்மங்கள் நுண்பொருள் விளக்கங்களாய் அமைகின்றன. சாதாரணமாக நுண்பொருளை எளிதில் உணரமுடியாது, அவைகளைக் கதை உருவாக்கிப் பருப்பொருள் மேல் ஏற்றி உணர்த்த வேண்டியுள்ளது. விளக்க முடியாதவற்றை விளக்குவதற்கு மெய்ப்பொருள் உண்மைகளையும், நுண்மைகளையும் தெற்றெனக் காட்டுவதற்கும் நுண்மான் நுழைபுலக் கருத்துக்களுக்குக் கதை வடிவம் தந்து புரிய வைப்பதற்கும் இவை பயன்படுகின்றன.

**கதைகளின் வளர்ச்சி நிலை**

மனித குலம் வளர்ந்த கதை சுவையானது. மனித வாழ்வில் ஒவ்வொரு நிகழ்ச்சியும் கதையாகிறது. சில நிகழ்ச்சிகள் பெருங்கதையாய் விரிகின்றன. மனிதனின் ஆசைகள், அவலங்கள், தேவைகள், விருப்பு, வெறுப்புகள், கனவுகள், கற்பனைகள் கதைகளாகின்ன. கதை கற்பனையை வளர்க்கிறது. கற்பனைக் கதைகளும் மனித வாழ்வின் மகத்துவங்களையே பேசுகின்றன. கதை சொல்வதும் கேட்பதும் மாந்தர் இயல்பு, கதை சொல்வதும் கேட்பதும் கலை. ஆதிகால மனிதன் நாடோடி வாழ்க்கை நடத்தினான். ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் சென்றதும் கால்நடை மேய்ச்சலுக்காக அலைந்து திரிந்த போது அதைக் கதையாகக்கூற ஆரம்பித்தான். அச்ச உணர்வு இயற்கை நிகழ்ச்சிகளுக்குக் காரணம் காணும் முயற்சி, வாழ்வியலில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளால் மக்கள் மனதில் நேர்ந்த பாதிப்பு, உயர்வு தாழ்வு மனப்பான்மை அறம் உரைத்தல் முதலியவைகள் கதைகள் தோன்றக் காரணம் என்பர். பொழுது போக்கிற்காகவும் நீதிகளை வலியுறுத்தவும் கதைகள் புனையப்பட்டன. உலக முழுவதும் ஒரே மாதிரியான கதை பரவ தொழில், கொண்டு கொடுத்த உறவுமுறை, விழா முதலியனவும் பிறமொழிக் கதைகள் பரவ வணிகத்தொடர்பு, கலை இலக்கியம், பண்பாடு, ஆட்சித் தொடர்பு முதலியவைகளும் காரணமாக உள்ளன.

இந்தியா ஒரு கதைக் களஞ்சியம். தமிழ்நாடு கதைகளின் கருவூலம். ஆதிகால மக்கள் உலகத்தைப் பற்றியும் உலகத் தோற்றத்தைப் பற்றியும் கதைகள்

புனைந்தனர். இவைகளே காலப்போக்கில் கற்பனைக் கதைகளாகவும் இதிகாசங்களாகவும், புராணங்களாகவும் வளர்ச்சி அடைந்தன. பழங்கால இயற்கை மாறுதல்களையும் உற்பாதங்களையும் உருவகங்களால் விளக்குவதற்காகக் கதைகள் ஏற்பட்டன என மானிடவியலாரும், சமூகவியலாரும், உளவியலாரும் பொது விளக்கம் அளிக்கின்றனர். இயற்கையின் வளம், பிறப்பு, இறப்பு போன்றவற்றை விளக்குவது பழங்கதைகள் என்கிறார். பிரேசர், ஆசை நிறைவேறுவதற்குரிய கருவி பழங்கதைகள் என்கிறார் உளவியல் பேரறிஞர் சிக்மண்ட் பிராய்டு மனிதகுலத்தின் நனவில் மனக்கனவுகளைக் காட்டுவது பழங்கதைகள் என்கிறார் யுங் என்னும் பேரறிஞர்.''[21]

உலகக் கதைகளை ஆராயும் போது மனிதகுலத்தின் வளர்ச்சியும் மனித மனங்களின் எழுச்சியும் புலனாகின்றன. அடிப்படை உண்மைகளைக் கொண்ட கதைகள் உலகெங்கும் சிரஞ்சீவியாக வாழ்கின்றன. கதைகள் வெறும் பொழுதுபோக்கு இலக்கியங்கள் மட்டுமல்ல. அறக்கோட்பாடுகளை விளக்கும் கதைகள் புவி போற்றும் காவியத் தன்மை பெற்றுவிடுகின்றன. சிறுவர் முதல் பெரியோர்வரை கேட்டு மகிழ்ந்து நினைத்து அசை போடத்தக்கன.

**தற்காலக் கதைகள்**

புனைந்துரைக்கப்பட்ட கதைகள் படிப்படியாக வளர்ச்சியடைந்து தற்போதைய நிலையை அடைந்துவிட்டது. உரைநடையால் ஆக்கப்பட்ட புனைக்கதைகளின் வகைகளுள் ஒன்று சிறுகதை. புதினத்தையும் விடச் செறிவானது, அழுத்தமானது. இவை அனைத்தும் கதையிலக்கியத்தின் மாற்றுருவங்கள். கதை என்ற பெயரில் கற்பனை உலகிலேயே நடமாடிய நிலை மாறி எதனையும் உண்மை நோக்கில் இயற்கையோடு இணைந்து நோக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றிய போது தான் சிறுகதைகளும் புதினங்களும் தோன்றின. சிறுகதை ஏதேனும் ஒன்றை மையப்படுத்துவது சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது. எனவே தேவையற்ற சொல் ஒன்று கூட இடம்பெறக்கூடாது என்பர் எட்கர் ஆலன்போ.''[22]

“சிறுகதையில் கட்டுக் கோப்பே முக்கியம் என்பர் உருசியநாட்டு ஆண்டன் செக்காவ்.”[23]

“நிகழ்ச்சிகளையும், உண்மைகளையும் வெளிப்படுத்தும் விதமே முதன்மையானது என்பர் இ.சே.ஒ.பிரியன்.”[24]

“குதிரைப் பந்தயம் போல் விறுவிறுப்பாக அமைய வேண்டும் என்பர் ஜெட்ஸ்விக்.”[25]

“வாழ்வின் ஏதோ ஒரு சிறு பகுதியையோ உயிர்களையோ படம்பிடித்துக் காட்டுகிறது சிறுகதை. எனவே தனித்தொரு சூழமைவே சிறுகதையின் முக்கியம் என்பர் எல்லான்மே.”[26]

**சிறுகதை இலக்கணம்**

“எந்த உணர்ச்சியை அல்லது கருத்தை அது தன்னகத்தே கொண்டிருக்கிறதோ அதை படிப்பவரின் நெஞ்சில் மின்வெட்டைப் போல் பாய்ச்சும் ஆற்றல் சிறுகதைக்கு வேண்டும். படித்து முடித்தவுடன் படித்தவர் உள்ளத்தில் எது ஊற்றுப் பெருக்கைப் போல் உணர்ச்சிகளைப் பூத்துச் சொறிகிறதோ அதுவே சிறந்த சிறுகதை எனக் கொள்ளலாம்.

கதை ஆசிரியரின் கலை ஆற்றல், கற்பனைத்திறன், சொல்லாட்சி அவர் மறைமுகமாய் கூறும் செய்தி இவை இலக்கண வரம்பைவிட முக்கியமாகும்”[27] என்ற அகிலனின் கருத்து சிறுகதையின் வளர்ச்சிக்கு மைல் கல்லாகும்.

அளவில் சிறியதாக இருப்பது சிறுகதை வாழ்க்கையில் நிகழும் ஒரு நிகழ்ச்சியை ஓர் உணர்ச்சியைக் கருவாகக் கொண்டு பின்னப்படுகின்ற ஒரு கதையாகும். இவை ஒருமணி நேரத்திற்குள் படித்து முடிக்கக் கூடியதாகவும், ஒரே மூச்சில் படித்து முடிக்கக் கூடியதாகவும் அமையப் பெற்றிருக்க வேண்டும் எனப் பொதுவாகக் கூறினாலும் அதற்கு சிறுகதை வல்லுனர்கள் வகுத்துள்ள வரையறைகளும் கொள்கைகளும் இன்றளவில் பின்பற்றியே எல்லோராலும்

எழுதப்படுகிறது. மேனாட்டு அறிஞர் எச்.ஜி.வெல்ஸ் என்பார் சுமார் அரைமணி நேரத்தில் படித்துணரத்தக்கதாகச் சிறுகதை அமையவேண்டும் என்கிறார். "முன்னதாகச் செய்து கொண்ட திட்ட வார்ப்புகளை மீறுகிறார் போல் ஒரு வார்த்தைகூட நேரடியாகவோ, மறைமுகமாகவோ சிறுகதையில் பயன்படுத்தப் படடல் கூடாது என்கிறார்"[28] எட்கர் ஆலன்போ.

ரஷ்யநாட்டு சிறுகதையாசிரியரான ஆண்டன் செக்காவ், கதையின் கட்டுக் கோப்பிற்கு முதன்மை கொடுத்துப் பேசினார். மேலும் "கதையின் தொடக்கத்தில் சுவரின் மீது ஒரு துப்பாக்கி தொங்கிக கொண்டிருக்கிறது என்று எழுதுவாயானல் அது கதை முடிவதற்குள் வெடித்தே ஆகவேண்டும்."[29]

இ.ஜே.ஓ.பிரியன் என்பார் "ஒரு சிறுகதை ஆசிரியர் எங்ஙனம் நிகழ்ச்சிகளையும் உண்மைகளையும் தெரிந்தெடுத்து ஆற்றலோடு வெளிப்படுத்துகிறார் என்பதே சிறுகதையை அளந்து பார்க் வேண்டிய முற்சோதனை"[30] என்று குறிப்பிட்டார்.

இவ்வாறு கருதப்படும் கதைகள் பல வகைப்படும். இன்ப முடிவு கொண்டவை, துன்ப முடிவு பெற்றவை. அவலம், நகை, களிப்பு ஆகியவை போன்ற ஏதேனும் ஒரு சுவையை மிகுதியாகக் கொண்டவை. வீரம், காதல், குற்றம் பற்றியவை, வரலாற்றுப் பின்னணி உடையவை, எதிர்காலம் பற்றிப் பேசும் அறிவியல் பார்வை பெற்றவை, துப்பறியும் கதைகள் உளவியற் கதைகள், நனவோடைக் கதைகள், அங்கதக் கதைகள், தத்துவக் கதைகள், சமயக் கதைகள் என்றெல்லாம் அவற்றைப் பலவாறாகப் பகுக்கலாம்.

அதேபோல் எந்தவொரு கதைக்கும் கதைச்செயல் அல்லது கதைக்கரு இன்றியமையாததாகும். கதைகளைக் கொண்ட புதினம், சிறுகதை, நாடகம், காப்பியம், கவிதை ஆகிய இலக்கிய வகைகளில் தொடர்புடைய நிகழ்ச்சிகளின் அமைப்பை கதைக்கரு என்பர்."[31]

"கதையெல்லாம் காரணகாரியத் தொடர்புமுறையில் அமைத்துக் காட்டுவது கதைக்கருவென்று ஈஎம்.பாசுட்டர் கூறுவார்."[32]

ஆர்.எசு.கிரேன் என்பாரின் தலைமையிலான சிகாகோ திறனாய்வாளர்கள் கதைக்கரு வாசகர்களின் உணர்வு வெளிப்பாடுகள் மீது ஆசிரியர்கள் கொள்ளும் கட்டுப்பாடு என்றும் படிப்போரின் உற்சாகத்தையும், ஆதங்கத்தையும் கிளப்பி அவற்றை ஒரு குறிப்பிட்ட நேரத்திற்குக் கட்டுக்குள் வைத்திருப்பதே என்றும் விளக்குவர்.''[33]

**கதைப்பொருள்**

கதைப்பொருள் ஒரு சிக்கலுக்குரிய கூறாகும். சில திறனாய்வாளர்கள் இதனைக் கதை கூறும் நீதி அல்லது படிப்பினையெனக் கருதுவர். ஒப்பிலக்கிய அறிஞர்கள சிலர் இதனை குறிப்பொருளிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவர்.

கதைப்பொருள் கதையின் பாத்திரங்களோடு தொடர்புடைய தென்றும், குறிப்பு பொருள் கதை நிகழ்ச்சிகளோடு தொடர்புடையதென்றும் விளக்குவர். ஒரு கதையிலிருந்து பெறப்படும் பொதுக்கருத்தும் மனித வாழ்க்கையில் ஏதேனும் ஒரு கூறு பற்றிய கதையின் விளக்கமும் கதைப்பொருள் என்று கருதப்படலாம்.

உயர்ந்த கதைகள் குறிப்பால் உணர்த்தும் தன்மையவை. உணர்ச்சியை நேரடியாக வெளிப்படுத்தாமல் குறிப்பால் தெரிவித்தல் கவிதைக்கும், கதைக்கும் பொதுவானதே. ''எப்பொழுதும் நாடகப்படுத்து ஒரு பொழுதும் வெளிப்படையாகச் சொல்லாதே என்பது செகாவின் கூற்றாகும்.''[34]

இக்காலக்கதைகளுள் மிகவும் சிறப்பான உத்தியாகக் கருதப்படுவது நோக்கு ஆகும். யாருடைய நோக்கில் கதை கூறப்படுகிறதென்பதைப் பற்றி அறிய மூன்று வினாக்களுக்கு விடைபெறல் வேண்டும்.

- ★ கதை சொல்வது யார்?
- ★ அவருக்கும் கதைக்கும் உள்ள உறவு என்ன.
- ★ எந்த நிலையிலிருந்து கதை சொல்லப்படுகிறது.

இந்த உத்தியானது பலவிதமாக ஆராயப்படுகிறது. அதனைத் தன்மை நோக்கு, படர்க்கை நோக்கு என்று இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஏனைய பல உட்பிரிவுகள் ஒரு பாத்திரத்தின் நோக்கு முழுமையானதா கட்டுப்பாட்டுடன் கூடியதா என்பதைப் பொறுத்து அமையும்.

தன்மை நோக்கில் கூறப்படும் கதைகளுக்கும் பொருள், கட்டமைப்பு, சொல்லாட்சி, நடை ஆகியவற்றில் வேறுபாடுகள் இருக்கும். பல நோக்கில் கூறப்படும் கதையைவிட ஒரு நோக்கில் கூறப்படும் கதை உத்திச் சிறப்புடையதாகும். கதையின் முக்கியப் பாத்திரத்தின் நோக்கில் கூறப்படும் கதைகளே இப்பொழுது மிகுதியாகும்.

இக்கால வாழ்க்கை, வரைவும் நெருக்கடியும் நிறைந்ததாய் உள்ளது. காப்பியம், புதினம் போன்ற பெரிய இலக்கியங்களை நிதானமாகப்படிப்பதற்கு மக்களுக்குப் போதிய நேரங்கிடைப்பதில்லை. நேரங்கிடைத்தாலும் அவற்றைப் படிப்பதற்கு பொறுமை கிடைப்பதில்லை. மேலும் வார இதழ்களும், நாளிதழ்களும் சிறுகதைகள் பலவற்றை வெளியிடுகின்றன சிறுகதை ஒரு சில பக்கங்களில் முழுமையாக முடிவுறுவதால் இதழ்களில் வெளியிடுவதற்கு அவற்றிற்கு வாய்ப்பு மிகுதியாகக் கிடைக்கிறது. சிறுகதைகள் எல்லாம் மக்களின் அன்றாட வாழ்க்கையையொட்டி உள்ளமையால் அவற்றின் கண் அவர்தம் உள்ளங்கள் பெரிதும் ஈர்க்கப்படுகின்றன. இதனாலும் சிறுகதைக்கு மதிப்புப் பெருகுகிறதெனலாம்.

இவ்வாறு கதைகள் என்பது அன்றிலிருந்து இன்றுவரை மக்கள் மனதில் நீங்கா இடம் பிடித்துள்ளது. தொன்மம் தான் சங்க இலக்கியத்தில் வரும் கதைகளில் அதிகம் இடம்பெறுகின்றன. இதன் படிப்படியான வளர்ச்சி நிலைகள் தான் முன்னர் உரைக்கப்பட்ட தற்கால கதைகளாகும் என்பதில் ஐயமில்லை. பொருளோடு புணரா பொய்மொழியாக உரைக்கப்படும் கதைகள் சங்க இலக்கியம் முழுமையும் விரவிக் கிடக்கின்றது. அக்காலச் சமூகத்தை படம்பிடிக்கும் கதைகளாக சங்க இலக்கியக் கதைகள் இடம்பெற்றுள்ளன. அவற்றைப் பின்வரும் இயலில் விரிவாக காண்பதே இவ்வாய்வாகும்.

**தொகுப்புரை**

★ வாய்மொழியாகவோ அல்லது எழுத்து மூலமாகவோ சொல்லப்படும் கற்பனை நிகழ்ச்சிகளின் தொகுப்பு கதையாகும்.

★ கதை ஏதேனும் ஒரு செய்தியை, நிகழ்ச்சியை அல்லது கற்பனையான ஒன்றை மையமாக வைத்துச் சுவையுடன் சொல்லப்படுவது, நடந்ததைப் பற்றிய விவரத் தொகுப்பு.

★ கதை என்பது பெரிய சரிதம், வரலாறு, கட்டுக்கதை, இதிகாச புராணங்கள், பெருங்கதை, பொய்ச்செய்தி, சொல், உரையாடல், விதம், தடி, தண்டாயுதம் என அகராதிகள் விளக்கம் தருகின்றன.

★ ஆதிமனிதன் தான் வேட்டையாடும் போது ஏற்பட்ட அனுபவத்தை பகிர்ந்ததே கதையின் தோற்றமாக உதயமானது.

★ உலக நாடுகள் எல்லாவற்றிலும் மிகப் பழங்காலத்திலே கட்டுக் கதைகளும், நீதிக்கதைகளும் வழங்கப்பட்டு வந்துள்ளது.

★ கதை கூறும் மரபும், கேட்கும் மரபும் மனிதனின் இயல்பூக்கத்திலே அமைந்திருந்தது.

★ தொன்மம் என்பது ஆற்றல்பெற்ற ஒரு கதைக் கூறாகும்.

★ இத்தகைய கதைகளின் வளர்ச்சியே 19ம் நூற்றாண்டில் தோற்றம் பெற்ற சிறுகதைகள்.

★ சிறுகதையின் இலக்கணமாக எட்கர் ஆலன்போ கூறுவது சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது தேவையற்ற ஒரு சொல் கூட வரக்கூடாது என்பதாகும்.

## சான்றெண் விளக்கம்

1. அடோன் தமிழ் அகராதி, ப.138
2. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.345
3. மு.சண்முகம் பிள்ளை (தொகுப்பாசிரியர்) தமிழ்-தமிழ் அகரமுதலி, ப.262
4. பவானந்தர் தமிழ் அகராதி, ப.110
5. கழகத் தமிழ் அகராதி, ப.277
6. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.332
7. பா.வீரப்பன், 'தமிழ் ஆராய்ச்சியின் வரலாறு', ப.141
8. மேலது, ப.142
9. ச.வே.சுப்பிரமணியன், 'திராவிட மொழி இலக்கியங்கள்', ப.362
10. அகிலன், 'கதைக்கலை', ப.24
11. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 8, ப.356
12. நிர்மலாமோகன், 'இலக்கியத் தென்றல்', ப.119
13. வானமாமலை, 'பழங்கதைகளும் பழமொழிகளும்', ப.3
14. நிர்மலாமோகன், 'இலக்கியத் தென்றல்', ப.120
15. வானமாமலை, 'பழங்கதைகளும் பழமொழிகளும்', ப.8
16. மேலது, ப.10
17. கதிர்.மகாதேவன், 'தொன்மம்',ப,2
18. மேலது, ப.20
19. தமிழண்ணல், 'சங்க இலக்கிய ஒப்பீடு', ப.114
20. சு.சக்திவேல், 'நாட்டுப்புறவியல் ஓர் ஆய்வு', ப.150
21. மேலது, ப.65
22. தா.ஏ.ஞானமூர்த்தி, 'இலக்கியத் திறனாய்வியல்', ப.339
23. ச.சுந்தரவல்லி, 'டாக்டர்.மு.வ.வின் சிறுகதைகள் ஆய்வு', ப.50
24. மேலது, ப.51

25. ச.வே.சுப்பிரமணியன், 'தமிழ் இலக்கிய வரலாறு', ப.303

26. ச.சுந்தரவல்லி, 'டாக்டர் மு.வ.வின் சிறுகதைகள் ஆய்வு', ப.50

27. மேலது, ப.28

28. ஆ.த.முத்தையா, 'தமிழ் இலக்கியக் கொள்கைகள்', ப.356

29. மேலது, ப.356

30. மேலது, ப.356

31. 'வாழ்வியற் களஞ்சியம்', தொகுதி–6, ப.658

32. மேலது, ப.658

33. மேலது, ப.658

34. மேலது, ப.660

தொல்காப்பியம் நமக்குக் கிடைத்த முதல் இலக்கணம் என்றால் எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் நமக்கு கிடைத்துள்ள முதல் இலக்கியங்களாகும். இவ்விரண்டுமே முதிர்ந்த ஒரு பாரம்பரியத்தில் விளைந்து நின்ற சிறந்த சொற்கலையாக்கங்கள். புலவர் பெருமக்களின் செம்மாந்த எண்ணங்களில் அரும்பி முகிழ்ந்தவை. பொது மரபினும், உணர்வினும், கவிதைப் பண்பினும் பிறந்தவையே. இவ்விலக்கியங்கள் உதிரிப்பூக்களாக இல்லாமல் உன்னதமான இலக்கியங்களாக உள்ள இவற்றில் காணப்படும் கதைகளை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**குறுந்தொகை**

குறுகிய பாடல்களின் தொகுப்பு. நாலடி முதல் எட்டடி வரையில் உள்ள பாடல்களே இந்நூலில் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலைத் தொகுத்தவர் பூரிக்கே. இது அகப்பொருளைப் பற்றிக் கூறும் நூல். இக்குறுந்தொகையில் முறையே 73, 105, 292, 298வது பாடல்களில் மட்டுமே கதைப் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளது.

**பெண் கொலை புரிந்த நன்னன்**

குறுந்தொகை 73 ஆவது பாடல் 'நன்னன்' என்ற மன்னன் பற்றிய செய்தியைக் கதையாகத் தருகின்றது. இந்நன்னன் கோசரது ஆட்சிப் பகுதியை அடுத்த குறுநிலத்தை (துளுநாடு) ஆண்டுவந்தவன். "மாமரம் இவன் காவல் மரமாகும்"[1] பரணரால் எழுதப்பட்ட இப்பாடல் பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்ந்து அதுவும் மறுத்தமைபடத் தலைமகனுக்குத் தோழி கூறுவதாக அமைந்ததாகும்.

தலைவனை விரும்பும் தலைவியிடத்துத் தோழி அவன் வரவு மறுத்தமை ஒரு சூழ்ச்சியாகும். அவ்வாறு சொல்வது தலைவன் விரைவில் வந்து மணமுடிக்க ஏதுவாகும் என்றுரைக்கையில் அச்சூழ்ச்சியின் தன்மையை உணர்த்துவதற்கு உவமையாக

**"நன்னன்**

**நறுமா கொன்று ஞாட்பில் போக்கிய**

**ஒன்றுமொழிக் கோசர் போல,**

**வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமால் சிறிதே'' (குறுந்.73)**

என்று எடுத்துரைப்பதாக அமைகின்றது. உவமையாக எடுத்தாளப்பட்ட இச்செய்தி வழியாகப் பெறப்படும் கதை நன்னன் என்ற குறுநில மன்னனைப் பற்றியதாகும்.

உண்பவர்க்கு நீண்ட ஆயுளைத் தருவதெனக் கருதப்படும் ஒரு மாமரத்தை தனது காவல் மரமாகப் போற்றி வளர்த்து வருகின்றான் நன்னன் என்ற குறுநில மன்னன். இம்மரத்திலிருந்து ஆற்றில் விழுந்த ஒரு கனியை, நீராடிக் கொண்டிருந்த கோசர் குலப்பெண் உண்டுவிடுகிறாள். அப்பெண் செய்த தவற்றிற்கு நன்னன் ஒன்பதிற்று ஒன்பது களிறுகளோடு அவள் நிறை பொன்னால் செய்யப்பட்ட பாவையைக் கோசர்கள் தந்தும் அவளைக் கொன்றுவிடுகின்றான்.

''கோசர் என்போர் பண்டைத் தமிழகத்தில் வாழ்ந்த ஒரு பெருங்குழுவினர். இவர்கள் வரலாற்றினை அறிவதற்குச் சங்க இலக்கியச் செய்யுள்களிற் காணப்பெறும் சிற்சில குறிப்புகளைத் தவிரப் பிற சான்றுகள் கிடைக்கவில்லை''[2] இவர்கள் சிறந்த வீரமும், கட்டுப்பாடும் வாய்மை தவறாத ஒழுக்கமும் உடையவர்கள். குறுநில மன்னர்களாக இருந்து ஆட்சி புரிந்தவர்கள் என்பன சங்கப்பாக்களைக் கொண்டு அறிய முடிகின்றன.

''நன்னன் நறுமாகொன்று ஞாட்பிற் போக்கிய ஒன்று மொழிக்கோசர்'' (குறு.73) கடந்தடுவாய் வாள் இளம்பல் கோசர் (மதுரை–774) என்பனவற்றால் இவர்தம் ஒப்பற்ற வீரம் புலனாகின்றது. இவர்கள் தேர்ப்படை வீரர்களாகவும் விளங்கினர் என்பது ''துனைக் காலன்ன புனை தேர்க் கோசர்'' (அகம்.25) என்னும் அகப்பாட்டால் விளங்குகின்றது.

இவர்கள் கொங்கு நாட்டுப் பகுதிகளிலும் துளுநாட்டுப் பகுதிகளிலும் குறுநில மன்னர்களாக வாழ்ந்தனர் என்பது 'கொங்கிளங்கோசர் (சிலம்பு உரை பெறு கட்டுரை) கோசர்..... தோகைக்காவின துளு நாட்டன்ன' (அக.15) என்பவற்றால் தெரிகின்றது. செல்லூர்க் குணாது..... கருங்கட்கோசர் நியமம்

நாலூர்க்கோசர் நன்மொழி போல (குறுந்.15) எனவருவனவற்றால் இவர்கள் மேற்கூறிய கொங்கு நாட்டிலும், துளு நாட்டிலும் செல்லூரிலும் சோழநாட்டுக் கீழ் கடலைச் சார்ந்த நியமத்திலும் நாலூரிலும் வாழ்ந்தனர் எனத் தெரிகின்றது.

இவற்றுள் "நாலூர்" என்பது தனியே ஒரூரைச் சுட்டாமல் நான்கு ஊர்களைச் சுட்டுவதாகவும் கருதலாம். இதற்கு பழையன் மோகூர் அவையகம் விளங்க, நான்மொழிக் கோசர் தோன்றியன்ன, தாம் மேந்தோன்றிய நாற்பெருங்குழுவும் (மதுரை.509) என்வரும் அடிகள் துணை செய்கின்றன. 'தொன்மூதாலத்துப் பொதியிற்றோன்றிய நாலூர்க்கோசர்' (குறுந்.15) என்னும் தொடர் அதற்கு அரண் செய்கின்றது.

கோசர்கள் வாய்ச்சொல் தவறாத ஒழுக்கமுடையவராய் இருந்தமை, 'ஒன்று மொழிக்கோசர்' (குறுந்.73) நாலூர் கோசர் நன்மொழி போல வாயாகின்றே (குறுந்.15) வாய்மொழி நிலை இய சேண் விளங்கு நல்லிசை வளங்கெழு கோசர் (அகம்.205) என வருவனவற்றால் அறியக் கிடக்கின்றது. இவர்கள் சூழ்ச்சியும் ஆராய்ச்சித் திறனும் உடையராய்ச் செயலாற்றுபவராக இருந்தனர் என்பது, 'ஒன்று மொழிக் கோசர் போல வன்கட்சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே' (குறுந்.73) என வருவதனால் தெரிகின்றது.

இவர்கள் கண்ணோட்டமின்றி ஆணை செலுத்தும் இயல்பினர் என்பது 'பயறு ஆபுக்கென, வாய்மொழித் தந்தையைக் கண் களைந்து அருளாது, ஊர்முதுகோசர் நவைத்த சிறுமையின், கலத்தும் உண்ணாள்' (அகம்.262) என வரும் அகப்பாட்டுத் தொடர்களால் தெரிகின்றது. அப்பாடற் குறிப்பாலும் 'தொன் மூதாலத்துப் பொதியிற் தோன்றிய, வலம்புரி கோசர் அவையகத்தானும்' (புறம்.283) என்பவற்றானும் இவர்கள் அவை நடுவராயும் தலைவராயும் அமர்ந்து வழக்கினை ஆராய்ந்து தீர்ப்பளிப்பவராக விளங்கினார் எனத் தெரிகின்றது.

கோசர் தொன்றுதொட்டு வாழும் தமிழ்க் குடிமக்களல்லர். வேளரையடுத்து காசுமீர நாட்டிலிருந்து தமிழகத்திற்குப் போந்த குழுவினர் என்பார் ரா.இராகவையங்கார். சங்கப் பாடல்கள் இவர்களைத் தமிழ்

நாட்டவராகக் கருதுதற்கு இடந்தருகின்றன. இத்தகைய சிறப்புடைய பழிதீர்க்கக் காத்திருந்த கோசர்கள் பாடல் மகளிர்க்குப் பெண் யானைகளைப் பரிசாக வழங்கும் அகுதை தந்தையும் அகவல் மகளிரைப் பரிசுபெற அனுப்புகின்றான். அவர்களும் பரிசு பெற்றுத் திரும்பும் போது அவ்யானைகளை நன்னனின் காவல் மரத்தில் பிணிக்கச் செய்கின்றனர். நன்னன் ஊரில் இல்லாத அந்நாளில் அவ்யானைகளால் காவல் மரங்கள் அழிக்கப்பட்டன. ஊர் திரும்பிய நன்னனுக்கும் கோசர்களுக்கும் போர் ஏற்பட இறுதியில் நன்னன் கொல்லப்படுகிறான். அறியாமல் இழைத்தத் தவற்றிற்காக ஒரு பெண்ணைக் கொன்றவனைத் தக்க தருணம் எதிர்பார்த்து வன்கண் சூழ்ச்சியால் வெல்லப்பட்ட வரலாற்றுக்கதை ஒன்று இங்கு தோழியால் உவமையாக எடுத்தாளப்பட்டுள்ளது.

ஒரு பெண்ணுக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குப் பெண்களால் தண்டனை அளிக்க கோசர்கள் செய்த சூழ்ச்சி போல இங்கு தோழியும் வரவு மறுத்தலும் ஒரு சூழ்ச்சியே. இதன் காரணமாக தலைவன் விரைவில் தலைவியை மணம் முடிப்பான் என்று எடுத்துரைக்கின்றாள். தன்னுடைய சூழ்ச்சியின் தன்மைக்கு நாடறிந்த ஒரு வரலாற்றுக் குறிப்பைக் கதையாகத் தோழி சுட்டிச் செல்கிறாள்.

உவமையாகச் சுட்டப்பட்ட இக்கதை ‘பெண் கொலை புரிந்த நன்னன்’ கதை என்றும்

**“இன்சூருங் கள்ளின் அகுதை தந்தை**
**வெண்கடைச் சிறுகோல் அகவல் மகளிர்**
**மடப்பிடி பரிசில் மான**
**பிறிது ஒன்று குறித்தது அவன் நெடும்புற நிலையே”  (குறுந்.298)**

என்றும்,

**“வாய்மொழி நிலைஇய சேண்வாங்கு நல்இசை**
**வளம்கெழு கோசர்”  (அகம்.205)**

என பிற இலக்கியம் வழியும் சுட்டப்பட்டுள்ளது.

இப்பாடல் வழியாக சங்க காலத்து ஆண்ட நன்னன் என்ற குறுநில மன்னன் பற்றியும் கோசர் குலம் பற்றியும் அறியமுடிகிறது. இவர்கள் பற்றிய பதிவாகக் குறுந்தொகை அமைந்துள்ளது. மேலும் இக்கதை பரவலாக மக்களிடத்துக் காணப்பட்டுள்ளது.

இந்நூலின் 298 ஆவது பாடலும் 'நன்னன்' என்ற குறுநில மன்னன் குறித்தக் கதையைத் தருகின்றது. பரணால் எழுதப்பட்ட இப்பாடல் தலைவிக்குத் தோழி தலைவனின் நிலையைக் கூறுவதாக உள்ளது.

தலைவன் களவிற் கூட்டம் நீட்டிக்க விரும்பிய வழி, தோழியால் சேட்படுத்தப்பட்டான். இரவிலும் பகலிலும் பலநாள் வந்தும், அல்ல குறிப்பிட்டும் அவளைப் பெறாமல், காமம் பெருகி வருந்திய நிலையில் மடல் ஏறுவதே அவளைப் பெற வழி எனத் துணிந்ததை அறிந்த தோழி அவன் நிலையை தலைவிக்குத் தெரிவிக்க உவமையாக

**தோழி**

**இன்கடுங் கள்ளின் அகுதை தந்தை**
**வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்**
**மடப்பிடிப் பரிசில் மானப்**
**பிறிது ஒன்று குறித்தது, அவன் நெடும் புறநிலையே (குறுந்.298)**

என்று எடுத்துரைப்பதாக அமைகிறது. உவமையாக எடுத்தாளப்பட்ட இச்செய்தி வழியாகப் பெறப்படும் கதை.

நன்னன் என்ற மன்னன் தன் காவல் மரத்திலிருந்து விழுந்த மாங்கனியை உண்ட பெண்ணை கொலை செய்த குற்றத்திற்காக கோசர்கள் அவனைப் பழிவாங்க எண்ணி, அகவல் மகளிரை அகுதையிடம் பரிசில் பெற அனுப்பி அவர்கள் பெண் யானைகளைப் பரிசாகப் பெற்று மீண்டபோது அவற்றை நன்னனுடைய காவல் மரத்தில் பிணித்து, அதன்வழி அம்மரத்தை வேரொடு சாய்த்துத் தம் பழியைத் தீர்த்துக் கொண்டனர்.

தலைவன் மடலேறினால் தலைவியின் காதலை ஊரார் அறிவார்கள். அதனால் உன் நாணம் அழியும் என்று எனவே அத்தகையதொரு நிகழ்வு

ஏற்படாமல் இருக்க நீ தலைவனை ஏற்றுக் கொள்ள வேண்டும். நன்னன் அகவல் மகளிரை போற்றுபவன் என அறிந்து கோசர்கள் அகவல் மகளிரை வாயிலாக்கினார்கள். அதேபோல் தலைவனும் மடலேறுதலால் உன் நாணம் அழிந்துபட என இக்கதையை உவமையாகக் கூறினாள்.

இப்பாடல் வழியாக அக்காலத்தில் வாழ்ந்த நன்னன் என்னும் குறுநில மன்னன் அகவல் மகளிரைப் போற்றுபவன் என்பது தெளிவாகியது.

குறுந்தொகை 292வது பாடல் நன்னன் பற்றிய கதையைத் தருகின்றது. பரணரால் எழுதப்பட்ட இப்பாடல் களவு ஒழுக்கம் மேற்கொண்ட தலைமகன் இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்கு பொருட்டு சிறைப்புறமாக வந்து நிற்க தோழி, தலைவி அவர்கள் சுற்றத்தாரால் பெரிதும் பாதுகாக்கப்படுகிறாள் என்பதை தலைவன் வரவு அறியாதது போன்று தலைவியிடம் கூறுவதாக அமைந்ததாகும்.

களவு ஒழுக்கம் ஒன்றையே தலையாய நோக்கமாக கொண்டு தலைவியை மணமுடிக்க காலம் தாழ்த்தி வந்த தலைமகனுக்கு அவளை விரைவில் மணமுடித்தலே சிறந்த செயல் என்பதை உணர்த்துவதற்காக உவமையாக

**“மண்ணிய சென்ற ஒள்நுதல் அரிவை**
**புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு**
**ஒன்பதிற்று – ஒன்பது களிறறொடு, அவள்நிறை**
**பொன்செய் பாவை கொடுப்பவும், கொள்ளான்**
**பெண்கொலை புரிந்த நன்னன் போல”   (குறுந்.292)**

எடுத்துரைக்கப்படுகிறது. உவமையாக எடுத்தாளப்படும் அக்கதை நன்னன் என்ற மன்னன் நீராடுவதற்காகச் சென்ற ஒளி பொருந்திய நெற்றியுடைய பெண் ஒருத்தி தான் நீராடிய ஆற்றில் மிதந்து வந்த பசிய பிஞ்சினைத் தின்ற தவற்றிற்காக, அவளுடைய தமர் அவளை மீட்கும் பொருட்டு எண்பத்தொரு களிற்றி யானைகளோடு, அவளது எடைக்கு நிகரான பாவையினை தண்டமாக கொடுக்கவும் அவை எதுவும் ஏற்றுக் கொள்ளாதவனாய் நன்னன் அப்பெண்ணைக் கொலை செய்தான்.

நீராடுவோர் நீரில் மிதந்துவரும் கனியை உண்ணுதல் குற்றமற்றதாகவும் அருந்தியவள் பெண் ஆகவும் நன்னன் சிறிதும் அருளின்றி அவளைக் கொலை செய்து இறப்பப் பெரும்பாவம் ஈட்டினான்; அதனால் அவன் என்றென்றும் மீளாத எரிவாய் நரகம் புக்கான். அவன் எய்திய நரகத்தையே கற்புக்கடம் உடைய நின் செயலும் அறத்தொடு பட்டதென்று கருதி, இனியும் நீ அச்செயலை செய்யக்கூடாது என்று அன்னை துயிலாது இருந்து நினக்கு பெரிதும் துன்பத்தையே தருகிறாள். ஆகவே நம் அன்னையும் அந்நரகத்தையே அடைவாள் எனத் தாயின் கொடுமையைத் தக்கதோர் உவமையாக நன்னன் கதையை எடுத்துக்கூறும் தோழியின் படைப்பு போற்றக்குரியது.

இக்குறுந்தொகைப் பாடல்களில் குறிப்பிடப்படும் இந் "நன்னன் என்பவன் ஒரு குறுநில மன்னன். மலைபடுகடாம் கொண்ட நன்னன் என்பவன், செங்கண் மாத்துவேள் நன்னன் சேய் நன்னன் எனப்படுவான் இங்கு பெண் கொலை செய்த நன்னன் கொண் கானவேள் நன்னன் எனப்படுவான்"[3] இந்நன்னன் குறித்த கதைகள் விரிவாகச் சுட்டப்பட்டுள்ளன.

**நஞ்சுண்ட சிவன்**

குறுந்தொகை 105வது பாடலில் தலைவி தலைவன் நாட்டின் பெருமையைக் கூறும் போது தலைவன் நாட்டில் உள்ள மயில் அறியாது உண்ட நிலைமைக்கு குறிப்பாக இக்கதைப்பகுதி இடம்பெற்றுள்ளது.

**"புனவன் துடவைப் பொன்போற் சிறுதினைக்**
**கடியுண் கடவுட்கிட்ட கில்குரல்" (குறுந்.292)**

'கடியுண் கடவுள்' என்ற தொடரில் சிவன் நஞ்சுண்ட புராணச் செய்தி இடம்பெற்றுள்ளது. இக்கதையை விரிவாக "பதினெண் புராணம்"[4] கூறுகிறது. ஒரு சமயம் தேவாசுரர்கள் இணைந்து மந்திரமலையை மத்தாக்கி சந்திரனை அடைத்தூணாக்கி வாசுகியை நாணாகக் கொண்டு பாற்கடலை அமுதம் பெறக்கடைந்தனர். அப்போது மலை நீரில் மூழ்க, ஸ்ரீவிஷ்ணு கூர்மாவதாரம் எடுத்துத் தாங்கிட கடலிலிருந்து பல பொருள்கள் வெளிவந்தன. அவற்றுள் ஒன்று 'ஆலகால விஷம்' ஆகும்.

நாணாகி இருந்த வாசுகி சர்ப்பம் களைத்து, பதைத்து, தனது நா துடிதுடிக்க விடத்தைக் கக்கியது. அதனால் தேவர்களைக் காக்கத் திருமால் ஆலகாலத்தை எதிர்கொள்ளஅவர் கருமையயானார். பிரம்மாதி தேவர்கள் ஆலகால விடத்திலிருந்து தம்மைக் காத்திடுமாறு கைலாயபதியை வேண்டிட, அவர் உமையை நோக்க அவளும் உதவுமாறு வேண்டினாள். அப்போது ஆலகால விடத்தை சிவபெருமான் உட்கொள்ள அது கண்டத்தளவு செல்ல அதனைக் கண்டத்திலேயே தரித்தருளுமாறு தேவர்கள் வேண்டிட அவரும் விடத்தை கண்டத்திலேயே நிறுத்திவிட அவர் நீலகண்டர் ஆனார். தலைவன் நாட்டின் வளம் கூறுமிடத்து இக்கதை குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளது.

குறுந்தொகையில் இவ்வாறு நன்னன் என்ற குறுநில மன்னன் குறித்தும், சிவன் குறித்த புராணக் கதையும் இடம்பெற்றுள்ளது.

**நற்றிணை**

நல்+திணை=நற்றிணையாகும். நல்ல ஒழுக்கத்தைக் கூறுவது என்பது பொருள். பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதியால் தொகுக்கப்பட்ட இந்நூல் 9 அடிச் சிற்றெல்லை முதல் 12 அடிப் பேரெல்லை வரை அமைந்த 400 பாடல்களைக் கொண்டது. இந்நற்றிணையில் 180, 216, 320 பாடல்களில் முறையே கதைப்பகுதி இடம்பெற்றுள்ளது.

**அன்னி, திதியன் பகைமை**

இந்நூலின் 180 ஆவது பாடல் அன்னி, திதியன் என்பவர்களது பகைமையைப் பறைசாற்றுகிறது. இப்பாடலில் கூறப்படும் "அன்னி என்பவன் சோழநாட்டுப் பாபநாசத்திற்கு அருகில் உள்ள ஓர் ஊரின் சிற்றரசன்"[5] "திதியன் என்பவன் சங்ககாலக் குறுநில மன்னருள் ஒருவன், ஐம்பெருவேளிருள் ஒருவனாகவும் கருதப்படுகின்றான்."[6]

தோழி பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனை எதிரேற்றுத் தலைமகனிடம் சென்று கூறினாள். தலைவி சினம் கொண்டு உடன்படாதவள் ஆயினள். தோழி உள்ளங் கலங்கித் "தலைவன் பரத்தையர் விருப்பத்தோடு

வீட்டிற்கு வராது இருக்கின்றனன். அவ்வாறு வரினும் தலைவி அவனை ஏற்றுக் கொள்வாள். இவ்விருவர் பகையும் யான் இறந்தாலே தீரும் போலும்'' எனக்கூறியது. இங்கு தலைவன் தலைவியின் ஊடல் எப்போது தீரும் என்பதற்கு உவமையாக

**''அன்னியும் பெரியன், அவனினும் விழுமிய**
**இருபெரு வேந்தர்; பொருகளத்து ஒழித்த**
**புன்னை விழுமம் போல**
**என்னொடு கழியும் – இவ்விருவரது இகலே''   (நற்.180)**

தலைவன் பரத்தையர் பலரைப் பெற்று அவர்களை முயங்குதலை விரும்பியவன். ஆதலின், அவன் நம்மனையகத்து வருகின்றான். அல்லன், ஒருவேளை அவன் வந்தாலும் மாமை நிறத்தையுடைய நம் தலைவி அவனது நலமிக்க பெருந்தகைமையை விரும்பித்தான் அதற்கு எதிராகத் தான் கொண்டுள்ள ஊடலை விட்டொழிப்பாள் அல்லள். ஆகவே அன்னி குடியைச்சார்நத அன்னி என்பவனும், தேழெுந்தூரினுள்ள திதியன் என்பவனும் ஆகிய சிறப்பு மிக்க இருவர் போரிட்ட ''குறுக்கை'' என்னும் இடத்தான போர்க்களத்தில் அன்னியால் வெட்டி சாய்க்கப்பட்ட பூவும் மலரும் துன்புற வீழ்ந்த புன்னை மரம் சாய்ந்தவுடன் வேந்தர் இருவர் பகையும் தீர்ந்தது. அதுபோல் இவர்கள் இடையிலுள்ள பகையும் இடையிலுள்ள யான் இறந்துபடுவேன் ஆயின் என்னொருத்தியோடு முடிந்து போகும் எனத் தோழி கூறினாள், இக்கதைமட்டுமல்லாது நற்றிணை கண்ணகி பற்றிய கதையையும் தருகிறது.

**கண்ணகி கதை**

மதுரை மருதன் இளநாகனார் எழுதப்பட்ட **216** பாடலில் இக்கதைக் குறிப்பு வருகிறது. தலைமகனின் அன்பும் அருளும் கிடைக்கப்பெற்ற காதற்பரத்தை தன் நிலைமை தலைவனுக்கு உணர்த்தக் கருதினள். அவள் தலைவிக்குப் பாங்காய் அமைந்த பாணன், விறலி ஆகிய இருவருள் ஒருவரை முன்னிலைப்படுத்தி ''இன்பம் நுகராவிடினும் அவரைக் காணுதல் இனிதாம், அவர் இல்லாத போது ஊரும் இன்னாததாகும்'' என வருந்தியுரைத்தது.

தலைவனை பிரிந்து வருந்தும் பரத்தை தன் வருத்தம் எதனைப் போன்றது என்பதை உணர்த்துவதற்கு சிலப்பதிகார கதையை உவமையாகக் கூறியுள்ளார்.

**“ஒருமுலை அறுத்த திருமாவுண்ணிக்**

**கேட்டோர் அனையர் ஆயினும்**

**வேட்டோர் அல்லது பிறர் இன்னாரே”   (நற்.216)**

என்று எடுத்துரைப்பதாக அமைகிறது. உவமையாக எடுத்தாளப்பட்ட செய்தி வழியாக அறியப்படும் கதை.

குருகுகள் ஆரவாரம் செய்யும் வயற்கரையில் அமைந்ததும் கடவுள் நிலை பெற்றதும் நெருப்புப் போன்ற பூவை உடையதுமான வேங்கைமரம். அதன்மீது கட்டிய பரணருகில் அயலான் ஒருவன் செய்த செயலால் தோன்றிய கவலை வருத்திட, மார்பகம் ஒன்றனை அறுத்த திருமாவுண்ணி நின்றிருந்தனள். அவளைப் பற்றிக் கேட்டறிந்தவர்கள் கேட்ட அளவில் விட்டுவிடுவர் அவளிடம் உண்மையான அன்புடையவர் மட்டும் அவள் நிலைக்கு வருந்துவார்கள் அன்றிப் பிறர் வருந்தார். அங்ஙனமே தலைவன் பிரிவால் தலைவி வருந்தினும் நான்படும் துயரம் கொண்டிருக்க மாட்டாள் எனக் கூறுகிறாள்.

தலைவனை அடையப் பெறாவிட்டாலும் அவன் ஊரில் இருக்கும் போதும் அவனைக் காண எளிமையாக இருந்தது. அதனால் ஊரும் இனிதானது. அவன் ஊரினின்று நீங்கிச் சென்றுளமையாள் தற்போது ஊரும் இனிமையானதாக இல்லை, கண்ணகி தன் கணவனை இழந்து வாடிய வருத்தம் போன்றது என்றாள்.

பாண்டிய மன்னனால் கள்வன் எனக் குற்றம் சாட்டப்பட்டு கொலையுண்டான் கோவலன். அக்கொலைச் செய்தியைக் கேட்ட அளவில் அவன் மனைவி கோபம் கொண்டு மன்னனிடம் சென்று நீதி கேட்டு மன்னன் உயிரை மாய்த்தான். அதனைக் கண்ட கோப்பெருந்தேவி கண்ணகியின் பாதங்களில் விழுந்தாள். அவளை நோக்கி, “பாண்டியப் பேரரசன் தேவியே!

நான் கொடிய தீவினைக்கு ஆளானேன். ஒன்றும் அறியாதவளாக இருந்தாலும் முற்பகலில் தீமை செய்தால் அத்தீமையின் பயனாகத் தானே அத்துன்பத்தைப் பிற்பகலில் அடைய நேரிடும் என்பதை அறிவாய் எனக்கூறி பல பத்தினிப் பெண்களைப் பற்றி அரசியிடம் உரைத்த கண்ணகி, உண்மையாக நான் ஒரு பத்தினிப் பெண்ணாக இருப்பின் இத்தன்மையோடு விடமாட்டேன். அரசினையும் மதுரை நகரினையும் ஒழிப்பேன், என்னுடைய வெஞ்சினத்தைக் காண்பாய் என்று கூறியவளாய் அங்கிருந்து அகன்றாள்.

மதுரை நகரத்தின் பெண்களே ஆடவர்களே! தெய்வங்களே! தவ முனிவர்களே கேளுங்கள். என்னுடைய கணவனைக் கள்வன் என்று பழி கூறி அநீதி இழைத்த இந்த நகரத்தின் மீது சினம் கொண்டேன். நான் குற்றம் இல்லாதவர் என்று உரைத்தாள். பின்னர் தனது இடது மார்பகத்தைத் தன் கையால் திருகி எடுத்து மதுரை நகரை மூன்று முறை வலம் வந்து அழுதபடியே நகரின் மீது வீசி எறிந்தாள். மதுரை நகரம் தீப்பற்றி அழிந்தது. பின்பு அவள் சுடர்வேல் ஏந்திய குமரம் எழுந்தருளியுள்ள செங்குன்றத்தை அடைந்து அதன் உச்சியில் ஏறினள். அங்குப் பூத்துக் குலுங்கும் வேங்கை மரத்தின் கீழ் வந்து நின்றாள். கோவலன் இறந்து பட்டதனால் தனக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தாங்கமாட்டாது ஒரு முலையைத் திருகி எறிந்தாள் என்பதைச் சிலப்பதிகாரக் கதை கூறுகிறது. இதனை உணர்த்தும் பாடல் அடிகள் தானே மேலே சொல்லப்பட்டது. ''இந்நற்றிணை அடிகளுக்கு ஒப்பாக,

**''கான வேங்கை கீழோர் காரிகை**
**தான்முலை யிழந்து தனித்துயரெய்தி''** **(சிலம்பு.காட்சிக்காதை.57)**

என்ற சிலப்பதிகார அடிகளைக் காணலாம். இது கண்ணகி கதை ஒரு பழங்கதை என்பதை வலியுறுத்தச் செய்கிறது''[7] நற்றிணைக்கு உரையெழுதிய பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் திருமாவுண்ணி என்பது கண்ணகி கதையைக் குறிக்கின்றது போலும் என்பர்.

மேற்கூறிய சான்றுகளால் சிலப்பதிகாரக்கதை இளங்கோவடிகளுக்கு முன்னரே சங்க காலத்தில் வழங்கி வந்த ஒரு பழங்கதை என்று கொள்ளலாம்.

**வல்வில் ஓரி**

இந்நூலின் *320*வது பாடல் 'ஒரி' என்ற குறுநில மன்னன் பற்றிய கதையைத் தருகிறது.

தலைவன் பரத்தையை நாடிச் செல்லும் போது மற்றொரு பரத்தைக் கூறுவது.

ஊரினர் நடத்திய திருவிழாவும் முடிவுற்றது. மத்தளங்களின் ஓசையும் அடங்கிவிட்டது. இந்தக் காலத்தில் இவள் என்ன நினைத்தாளோ என்று கேட்பாயாயின் ஒருநாள் தழை ஆடையை உடுத்திக் கொண்டு அந்த தழை அசையும் அல்குலை உடையவளாய் இந்த இளையவள் தெருவின் வழியாக சென்றாள். அந்த ஒரு காரணத்திற்காக இவ்வூரிலே கல்லென்னும் நகையொலி உண்டாயிற்று. அது எவ்வாறு எனில் பழமையான வெற்றியை உடைய கொல்லிமலைக்கு தலைவனாகிய வல்வின் ஒரியைப் போரில் கொன்ற மலையமான் திருமுடிக்காரி என்பான் அவ் ஒரியினுடைய ஒப்பற்ற பெரிய தெருவிலே புகுந்தான். அதைக்கண்ட காரியின் பகைவராகிய ஒரியைச் சார்ந்த அனைவரும் ஒன்றுகூடிப் பேரிரைச்சல் இட்டது போல் இருந்தது.

**அகநானூறு**

அகப்பொருளைப் பற்றிக் கூறும் *400* பாடல்களைக் கொண்டது. *13* அடி சிற்றெல்லை *31* அடி பேரெல்லை உடைய இந்நூலைத் தொகுத்தவர், உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திரசன்மர் இந்நூல் *45, 59, 70, 76, 196, 222, 262* பாடல்களில் கதைப் பற்றிய குறிப்புகள் உள்ளது.

**பேதுற்ற ஆதிமந்தி**

அகநானூற்றின் *45*வது பாடல் "கரிகால் வளவனின் மகளாய ஆதிமந்தி குறித்தக் கதையைத் தருகின்றது. வெள்ளி வீதியாரால் எழுதப்பட்ட இப்பாடல் வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் கூறியது.

தலைவன் பொருள்வயிற் காரணமாகப் பிரிந்தான். பிரிவாற்றாது வருந்தும் தலைவியைத் தோழி தலைவன் வரும்வரை ஆற்றியிருக்குமாறு வற்புறுத்தினாள். அதுகேட்ட தலைவி அவ்வாறு என்னால் ஆற்றியிருத்தல் முடியாது என்ற சூழ்நிலையில், தலைவனைப் பிரிந்து நான் இருக்கும் நிலை இது என உவமையாக

**யானே,**

**காதலற்கெடுத்த சிறுமையொடு, நோய்கூர்ந்து**

**ஆதிமந்தி போல பேதுற்று,**

**அலந்தனென் உழவென்கொல்லோ – பொலந்தார் (அகம்.45)**

என்று எடுத்துரைப்பதாக அமைகிறது. உவமையாக எடுத்தாளப்பட்ட இச்செய்தி வழியாகப் பெறப்படும் கதை கரிகால்வளவனின் மகளாகிய ஆதிமந்தி குறித்தக் கதையாகும்.

ஆதிமந்தி நீர் விழா ஒன்றில் ''கழாஅர்'' என்னும் ஊரைச் சார்ந்த காவிரித் துறையில் தன் கணவனாகிய அத்தியுடன் நீராடும் போது காவிரிப் பெண்ணாள் தன் திரைக்கையால் அவனை வெளவிக் கொண்டு கடலிற்போய் ஒளித்துக் கொள்ள, இவள் அவனைக் காணாது புனல் வழியே காவிரிக் கரை மீது தொடர்ந்து சென்றாள்.

அவ்வாறு தேடித்தேடி நாள்தோறும் என் தலைவனாகிய ஆட்டன் அத்தியைக் காணீரோ என தேடி அலைந்து, என் தலைவனைக் கடல் கொண்டது போலும், புனல் கொண்டது போலும் என துன்பப்பட்டு ஆற்றாது அழுத கண்ணீருடன் அரற்றித்திரிந்தாள்.

இவளது கற்பின் பெருமையால் கடல் அவனைக் கரைக்கு அணிமையில் கொணர்ந்து வந்து நிறுத்திக் காட்ட இவளது துன்பத்தை அறிந்தவளும் ஆங்கே நீராடிக் கொண்டிருந்தவளுமான 'மருதி' என்பவள் அவனைக் கொண்டு வந்து இவளிடம் சேர்த்தாள்.

தலைவனைக் காணாது நானும் இதேபோல் வருந்துகிறேன் என்று தலைவி தன் நிலையை உணர்த்தி இருப்பது இங்கு தக்க பொருத்தமாகும்.

இங்கு கூறப்படும் மருதி என்பவளது வரலாறு இந்நூல் 76, 222, 236, 376, 396 ஆகிய பாடல்களிலும், சிலப்பதிகாரம் வஞ்சினமாலையிலும் (10–15) இடம்பெற்றுள்ளது.

**ஆட்டனத்தி பற்றிய வரலாறு**

"வஞ்சி நகரிலிருந்து அரசு புரிந்த சங்ககாலச் சேரமன்னர்களுள் ஒருவன். ஆடற்கலை பயின்று ஆடவல்லான் என விளங்கியதால் கலைத்தொழில் சிறப்புப்பற்றி "ஆட்டன் அத்தி" என்றும், "பொருநன்" என்றும் இவன் பெயர் பெற்றான். இவன் மிக்க அழகினன், திரண்ட தோளினன்.

ஆடற்கலையில் சிறந்தவனாகிய அத்தி எழுதெழில் சிறப்புடைய கரிகாலன்மகள் ஆதிமந்தியைக் காதலித்து மணந்து இல்வாழ்க்கை இனிது நடத்திக் கொண்டிருந்தான். இடர் அதிகம் நேரினும் உள்ளம் கலங்காதவன். கழார் நகரினை அடுத்த காவிரித் துறையில் ஒரு சமயம் புது வெள்ளப்பெருக்கு விழா ஒன்று நிகழ்ந்தது. ஆட்டனத்தி விழாக் காலத்தில் கரிகாற்சோழன் கண்டிருப்ப காலில் கழல் புரள, அரையில் கட்டிய கச்சையின்மேல் பொன்னால் செய்த பாண்டில் மணிகள் ஒலிப்ப, அழகுபெற ஆடிக்கொண்டிருந்தாள். மிகுதியாகவும் விரைவாகவும் வந்த வெள்ளம் ஈர்த்துச் சென்றது. இவன் சிறிது கலங்காது கடல் வரை நீந்திக் கொண்டு சென்றான். பிறகு ஒருவாறு கரை சேர்ந்த மருதியின் உதவியால் தன் மனைவியிடம் வந்து சேர்ந்தான். இவன் காவிரிக்கு இரையானான் என்று கலங்கியிருந்த ஆதிமந்தி இவனைக் கண்டதும் கரை காணாத மகிழ்ச்சி அடைந்தான்"[8] என்பது ஆட்டனத்தி குறித்த வரலாறு ஆகும்.

**கண்ணனும் கோபியர் கூட்டமும்**

அகநானூற்றின் 59வது பாடல் 'கண்ணன்' பற்றிய தொன்மக் கதையினைத் தருகிறது. 'மதுரை மருதன் இளநாகனரால்' எழுதப்பட்ட இப்பாடல் தலைமகன் பிரிவின் கண் வேறுபட்ட கிழத்திக்குத் தோழி கூறுவதாக அமைந்ததாகும்.

அருஞ்செயலாம் பொருள் ஈட்டலை நினைத்துத் தலைவன் தலைவியைப் பிரிந்து தொலை தூரம் சென்றான். குறித்த காலத்துத் தலைவன் வாராமை கண்ட தலைவி வருத்தமுற்றுத் தன் பேரழகு இழந்து உடல் வேறுபாடு கொண்டாள். அது கண்ட தோழி தலைவர் விரைந்து உன்னைக் காண வருவார், என்னும் சூழ்நிலையில் இக்கதையினை உவமையாக எடுத்துரைக்கிறாள்.

**"வண் புனல் தொழுநைவார் மணல் அகன்துறை,**
**அண்டர் மகளிர் தண தழை உடீஇயர்**
**மரம் செல மிதித்த மாஅல் போல" (அகம்.59)**

உவமையாக எடுத்தாளப்பட்ட இச்செய்தி வழியாக பெறப்படும்கதை,

வடதிசையில் உள்ள நீர்வளம் குன்றாத யமுனையாற்றின் மணலையுடைய அகன்ற துறையில் நீராடிய ஆயர் மகளிர் கண்ணனே தனக்கு கணவனாக வேண்டுமென பாவை நோன்பு நோற்றனர். அவர்கள் பனிவரைக் கன்னியைத் தொழுதனர். துர்க்கை உருவை வரைந்து நோன்பு நோற்றனர். இதனை 'கார்த்தியாயினி விரதம்' என்றும் கூறுவர். விரதம் அனுஷ்டிக்க முற்பட்ட பெண்டிர் நீராடச் சென்றனர்.

சென்ற இடத்தில் தங்களுடைய உடைகளையும், நகைகளையும் கரையிலேயே வைத்துவிட்டு நீரில் மூழ்கி நீராடினர். அவர்கள் நீராடிக் கொண்டிருக்கையில் அவர்களுக்கு கண்ணனின் புல்லாங்குழல் ஓசை கேட்டது. உடனே அவர்கள் வெளிவர எண்ணிக் கரையில் தமது துணிகளைக் காண அங்கே அவை காணப்படவில்லை. கண்ணனே புடவைகளைக் குறும்புத்தனமாக மறைத்திருப்பான் என்று நினைத்து, வேணுகானம் வந்த திசையை நோக்கித் தேடினர். அங்கேயே கரையில் இருந்த ஒரு மரத்தின் கிளைகளிலே அவர்களுடைய உடைகளையும், அவற்றை அபகரித்த கள்ளன் கண்ணனையும் கண்டனர். அவர்கள் தங்கள் கைகளால் மார்பை மூடிக் கொண்டு நீருக்குள் சென்று கழுத்தளவு நீரில் நின்று கண்ணனிடம் வேண்டினர்.

'கண்ணா உன்னையே நம்பி உள்ளவர்கள் நாங்கள். உங்களைத் தவிர வேறு யாரையும் எண்ணிக்கூட பார்ப்பது இல்லை. உங்களையே சரணமடைந்த எங்களை இப்படி நடத்தலாமா? தயவு செய்து எங்கள் சேலைகளைப் போடு' என்று உரைத்தீர்கள். அது உண்மையானால் நீங்கள் என்னிடம் அப்படியே நேரில் வந்து உங்கள் சேலைகளைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்றான்.

ஆடையின்றி எப்படி வருவது, எங்களுக்கு வெட்கமில்லையா? என்று கோபிகைகள் கூற கண்ணன், என்னைவிட உங்களுக்கு உங்கள் உடல் வெட்கமே முக்கியம் போலும். இத்தகைய தேகாபிமானம் அதாவது உடல் மீது பற்றுள்ள உங்களுக்கு கார்த்தியாயின் எப்படி கருணை காட்டுவாள். உங்களுடைய பற்று உங்களுக்கு மோட்சம் கிடைக்காமலிருக்கத் தடையாகும் என உபதேசித்தான். அந்த மாயக்கண்ணன், அவர்களுக்காக இறங்கிய பொழுது பலதேவன் அங்குவர அம்மகளிர் ஒரு காலத்தே ஒரு சேர மறைவதற்கு வேறு வழியின்மையால் தாம் ஏறி நின்ற குருந்த மரத்துக் கிளையினை மிதித்து வளைத்துத் தாழ்த்திக் கொடுத்தார்.

திருமால் இரக்கம் கொண்டு பெண்களுக்கு ஆடைகளை கொடுத்தது போல் தலைவன் வரும் வழியில் பெண் யானைக்காக ஒரு ஆண் யானை உணவுப் பசியைத் தீர்க்க ஓங்கி உயர்ந்த மரக்கிளையினை வளைத்து தரும் அன்பான காட்சியினைக் காணும் தலைவன் விரைந்து வருவான் எனத் தோழி ஒரு தொன்மக் கதையினை உவமையாகச் சுட்டிச் செல்கிறாள்.

**இராமனும் வானரங்களும்**

அகநானூற்றின் 70வது பாடல் இராமாயணக் கிளைக் கதையைச் சுட்டுகிறது. மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார் எழுதப்பட்ட இப்பாடல் தலைமகன் வரைவு மலிந்தமை தோழி தலை மகட்குச் சொல்லுவதாக அமைந்துள்ளது.

தலைவன் தலைவியை மணந்து கொள்ளாமல் களவொழுக்கமே சிறந்தது என பயின்று (பழகி) வரும் நாளில் அலரின் காரணமாகவும்,

தோழியின் வற்புறுத்தலின் காரணமாக திருமணம் செய்து கொள்ள சம்மதித்தான். அச்சூழலில் தலைவன் தலைவியை திருமணம் புரிந்தால் அலர் அடங்கும் என்ற நிலைக்காக உவமையாக இக்கதை எடுத்துரைக்கப்படுகிறது.

**“வென்வேற் கவுரியர் தொல்முது கோடி**
**முழங்கும் இரும் பௌவம் இரங்கும் முன்துறை**
**வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த**
**பல்வீழ் ஆலம் போல**
**ஒலி அவிந்தன்று; இவ்வழுங்கல் ஊரே” (அகம்.70)**

இராமன் இலங்கை மேல் படையெடுத்துச் செல்லும் பொருட்டுத் திருவணைக் கரையருகேயிருந்த ஆலமரத்தின் கீழ் தமக்குத் துணையான வானர வீரருடன் மறைச் செய்திகளைக் கூறும்போது, மரத்திலிருந்த பறவைகள் ஒலியெழுப்பாதவாறு தன் ஆணையால் அடக்கினான்.

அதாவது தலைவன் தலைவி காதல் நிலை அறிந்த ஊரார் அலர் தூற்றினர். அதனைக்கூற விளைந்த தோழி, இராமன் இலங்கை மீது படையெடுத்துச் செல்ல மரத்தின் அடியில் திட்டம் தீட்டினார். அப்போது பறவைகள் ஒலியெழுப்பின. அதனை தன் ஆணையால் அடக்க பறவைகள் சப்தம் ஒடுங்கியது. அது போல தலைவருடன் மணம் கூடிய பிறகு அலர் தூற்றி ஆரவாரம் செய்த இவ்வூரும் ஒலியடங்கப் பெற்றது என தோழி உவமையாக இக்காப்பியக் கதையை எடுத்துரைத்த விதம் போற்றற்குரியது.

**ஆதிமந்தியின் கூளுரை**

இந்நூலின் 76வது பாடலும் ஆட்டனத்தி ஆதி மந்தி குறித்தக் கதையைச் சுட்டுகிறது. பரணரால் எழுதப்பட்ட இப்பாடல் “தலைமகனை நயப்பித்துக் கொண்டாள்” என்று கழறக்கேட்ட பரத்தை, தலைமகட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

பரத்தையின் ஆடல் பாடலில் மயங்கினான் தலைவன் எனக்கேட்ட தலைவி அப்பரத்தையைப் பழித்து அவனோடு ஊடினாள். தன்னைப்

பழித்தமையைக் கேள்வியுற்ற பரத்தை, அவன் கூத்துக்காண வந்த அளவிற்கே என்னைத் தூற்றினாளோ? இனி அவள், அவளை என்பால் முற்றிலும் இழந்து கதறியழ அவனை நான் கைக்கொள்வேன் எனச் சூளுரைத்து சினந்து கூறியது.

அவ்வாறு பரத்தை சினந்து கூறும் போது உவமையாக இக்கதை எடுத்துரைக்கப்படுகிறது.

**"அந்தில்**
**கச்சினன் கழலினன் தேம்தார் மார்பினன்**
**வகை அமை பொலிந்த வனப்பு அமை தெரியல்**
**கரியல் அம்பொருநனைக் காண்டிரோ? என**
**ஆதிமந்தி பேதுற்று இனைய,**
**சிறைபறைந்து உரைஇச் செங்குணக்கு ஒழுகும்**
**அம்தண் காவிரி போல" (அகம்.76)**

ஆட்டனத்தி கச்சினையும், கழலினையும் தேனொழுகும் தார் அணிந்த மார்பினையும் உடையவன். பல்வேறு வகைத் தொழில் திறம் அமைந்து பொலிவுடன் திகழும் மாலையையுடையவன். சுருண்ட தலை மயிரினையுடைய ஆடல் வல்லானாம் அவனைக் கண்டிரோ என வினவி, அவன் காதலியாகிய ஆதிமந்தி பெரிதும் மயங்கி வருந்துமாறு அணை கடந்து கரை மோதி நேர் கிழக்கே பரந்தோடும் அழகிய குளிர்ந்த காவிரியாறு. அவள் கணவனாகிய ஆட்டனத்தியைத் தன் திரைக்கையால் கவர்ந்து கொண்டமை போல, யானும் சூளினை மேற்கொண்டு ஊரனைக் கைப்பற்றிக் கொள்ளுதலை எண்ணியுள்ளேன் என்ற பரத்தை தலைவி தன் மீது விடுத்த பழிச்சொல்லை பொறுக்க முடியாத நிலையில் இக்கதையைக் கூறி சூளுரைத்தாள்.

**அன்னி மிஞிலி**

பரணரால் உரைக்கப்பட்ட அன்னி மிஞிலி பற்றிய குறிப்பு; "அன்னியின் மகள் மிஞிலியாவாள். அன்னி மிஞிலி ஆகிய இருவர் தம் வரலாற்றுக் குறிப்புகள் அகநானூறு, நற்றிணை ஆகிய நூல்களில் காணப்படுகிறது."[9]

அன்னி சோழநாட்டுப் பாபநாசத்திற்கு அருகில் உள்ள ஓர் ஊரின் சிற்றரசன். அவன் இருந்தவூர் பிற்காலத்தில் அவன் பெயராலேயே அன்னி குடியென்று வழங்கி வருகிறது. இவனைப் பற்றிய வரலாறு இருவகையாக உள்ளது.

அன்னி இன்றைய மயிலாடுதுறைக்கு மேற்கிலிருந்த திருவழுந்தூரில் வாழ்ந்த வேளிர் மரபின்னாகிய திதியனுக்குரியதும் நந்திபுர விண்ணகரம் என்னும் நாதன் கோயிலை அடுத்த குறுக்கையென்னும் ஊரிலுள்ளதும் ஆகிய காவல் மரம் (புன்னை) பூத்திருக்கும் பொழுது வெட்டிச் சாய்த்தான். அன்னியின் செயிலினைத் தடுக்க எவ்வி என்னும் சிற்றரசன் எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. திதியனுக்கும் அன்னிக்கும் போர் மூண்டது. அப்போது புன்னையை வெட்டி வீழ்த்திய குறுக்கை எனும் இடத்தில் நடந்தது. அப்போ திதியன் வெற்றி பெற்று அன்னியைக் கொன்றான். (அகம்.126)

இந்நூலின் 196, 262வது பாடல்கள் ''அன்னிமிஞிலி'' குறித்த கதையைத் தருகின்றது. பரணரால் எழுதப்பட்ட இவ்விருபாடல்களில் முதல் பாடல் பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனுக்குக் கிழத்தி சொல்லியதாக அமைந்துள்ளது.

தலைவன் பரத்தையர் சேரிக்குச் சென்று அவரோடு தங்கி, வைகறைப் பொழுது இல்லம் திரும்பினன். அப்போது அவனுடன் ஊடல் கொண்ட தலைவி இக்கதையை உவமையாக

**தந்தை**

**கண்கவின் அழித்ததன் தப்பல், தெறுவர**
**ஒன்று மொழிக் கோசர்க் கொன்று, முரண்போகிய**
**கடுந்தேர்த் திதியன் அழுந்தை, கொடுங்குழை**
**அன்னி மிஞிலியின் இயலும்**
**நின்நலத் தகுவியை முயங்கிய மார்பே (அகம்.196)**

என்று எடுத்துரைப்பதாக அமைகின்றது. உவமையாக எடுத்தாளப்பட்ட இச்செய்தி வழியாக பெறப்படும் கதை ''கோசர்கள் பயிற்றிலே ஆ புகுந்த சிறு

குற்றத்திற்காக அன்னி மிஞிலியின் தந்தையின் கண்களைப் பிடுங்கிக் கொடுஞ்செயல் புரிந்தனர். இச்செயலை பொறுக்கமாட்டாத மிஞிலி, கலத்தினும் உண்ணேன் தூய ஆடையை உடுத்தேன்'' என வஞ்சினம் கூறித் தவக்கோலம் பூண்டாள். இச்செய்தியைக் குறும்பியன், திதியன் ஆகியோர்க்கு எடுத்துக்கூறி சினம் மாறி மகிழ்ச்சி கொண்ட மிஞிலி போல, நின்நலத்தை நுகர்வதற்குத் தக்கவளாகிய பரத்தையும் நின்னை அடைந்த களிப்பு மிகுதியால் செருக்குற்று திரிகின்றாள் என தலைவனுடன் ஊடல் கொண்ட சூழ்நிலையில் இக்கதை பயன்படுத்தப்பட்டுள்ளது.

பரணரால் எழுதப்பட்ட இப்பாடல் இரவுக் குறிக்கண் தலைமகளைப் புணர்ந்து நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

இரவுக்குறியின் கண் தலைவியின் நலன் நுகர்ந்து மீளுகின்ற தலைவன் புணர்ச்சி இன்பத்தால் பெரிதும் மகிழ்ந்து தன் நெஞ்சிற்குச் சொல்லியது. அதாவது தலைவியைக் கூடி இன்பம் துய்க்கும் தலைவனின் மகிழ்ச்சி எதைப்போன்று இருந்தது என்பதை விளக்க உவமையாக இக்கதை எடுத்துரைக்கப்படுகிறது.

**''பாசிலை அமன்ற பயறுஆ புக்கென**
**வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து, அருளாது**
**ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்**
**கலத்தும் உண்ணாள் வாலிதும் உடாஅள்**
**சினத்தின் கொண்ட படிவம் மாறாள்**
**மறம்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்**
**செரு இயல் நல்மான் திதியறகு உரைத்து அவ்**
**இன்உயிர் செகுப்பக்கண்டு சினம் மாறிய**
**அன்னி மிஞிலி போல''   (அகம்.262)**

பழமையான பசுமை நிறைந்த காட்டினிலே எருதுகள், பூட்டிய பல ஏர்கள் கொண்டு ஒன்றோடொன்று பின்னிக் கிடக்கும் கொடிகளை உழக்கி உழுது போட்ட சிவந்த புன்செய் நிலத்திலே, எருக்களை முறையே இட்டுக்

களை எடுத்து, நீர் பாய்ச்சியமையால் நன்கு தழைத்து வளர்ந்த பசுமையான இலைகள் செறிந்த பயிற்றங் கொல்லையில் பசு மேய்ந்தது.

பழமை வாய்ந்த அவ்வூரிலுள்ள கோசர்கள் ‘அப்பசு தன் பசு’ என்ற உண்மையை மறையாது உரைத்த தன் தந்தையின் கண்களை இரக்கமின்றிப் பிடுங்கித் துன்புறுத்திய கொடுமையினை அன்னி மிஞிலி என்பவள் அறிந்தாள்.

பொங்கிச் சினந்தவள் அக்கொடியாரை ஒடுக்கும் வரை கலத்திலிட்டு உணவினை உண்ணேன். உடலிட்டுத் தூய உடையினை உடுத்திக் கொள்ளேன் என விரதம் பூண்டாள். அவ்விரதத்தினின்றும் அவள் ஒரு சிறிதும் மாறினாள் இல்லை.

வீரம் பொருந்திய படையினையும் வெற்றியையும் உடைய குறும்பியன் என்பானுக்கும் போர்த்திறன் கொண்ட நல்ல குதிரைகளை உடைய திதியன் என்பானுக்கும், தன் நோன்பு குறித்து எடுத்துக் கூறினள். இருவரும் படை கொண்டு கோசரைக் கொன்று அவர்கள் இனிய உயிர்களைப் போக்கினர், அன்னி மிஞிலி என்பாள் அது கண்டு சினம் ஒழிந்து மனம் மகிழ்ந்தாள்.

கோசர் பலரைக் கொல்வித்து அவர்தம் இனிய உயிர்களைப் போக்கக்கண்டு சினம் மாறி மகிழ்ச்சி கொண்ட அன்னி மிஞிலி போல, தலைவி தந்த இன்பத்தை நினைந்து நாமும் உடம்பு பூரிக்கும் உவகையைப் பெற்றோம் எனத் தலைவன் தன் நெஞ்சிற்கு கூறும் விதமாக இக்கதை விளக்கமாகச் சுட்டப்பட்டுள்ளது.

அகநானூற்றில் பரணர் இது பற்றிக் கூறும் வரலாறு வேறு வகையாக உள்ளது. கோசர்களுக்குச் சொந்தமான ஊர்மிகு புன்செய் நிலத்தில் பசிய இலைகள் நிறைந்த பயிற்றங்கொல்லையில் அன்னியின் பசு மேய்ந்தது. அன்னி அதனைக் கோசரிடம் மறையாமல் உரைத்தான். பசு மேய்ந்த சிறு பிழைக்கு இரங்கி அருளாமல் அக்கோசர்கள் அன்னியின் கண்களைப் பறித்துவிட்டனர். அதனால் சினம் கொண்ட அன்னியின்

மகள் மிஞிலி என்பவள் அன்னிக்கு இழைக்கப்பட்ட கொடுமையை ஆற்றல் வாய்ந்த படையினை உடைய திதியன் என்பவனுக்கு உரைத்தாள். அவள் அக்கோசரோடு பொருது அவரைக் கொன்றான். திதியன் கோசரோடு போர் புரிந்த இடம் அழுந்தூர். அவ்வாறு கொல்லும் வரை, கலத்தில் இட்டு உண்ணாமலும் தூயதாகிய உடையினை உடுத்தாமலும் சினம் மாறாமலும் இருந்த மிஞிலி கோசர் இறந்த பிறகு தன் நோன்பை விட்டுச் சினம் மாறிப் பெரிதும் மகிழ்ந்தாள்.

“இப்பாடலில் கூறப்படும் திதியன் என்பவன் சங்ககாலக் குறுநில மன்னருள் ஒருவன். ஐம்பெரு வேளிருள் ஒருவனாகவும் கருதப்படுகின்றான். பொதியிற் செல்வன் தித்தன் என அகநானூற்று 25ம் பாடலும் 322ம் பாடலும் கூறுகின்றன.”[10] பரணர் பாடல்கள் ஏதேனும் ஒரு வரலாற்று செய்தியைக் கொண்டிருக்கும் என்ற கூற்று மேற்கூறிய பாடல்களில் நன்கு விளங்குகிறது.

**ஆட்டனத்தியின் ஆடல்**

அகநானூற்றின் 222வது பாடல் “ஆட்டனத்தி ஆதிமந்தி” குறித்த கதையைத் தருகின்றது. பரணரால் எழுதப்பட்ட இப்பாடல் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.

களவொழுக்கத்தையே விரும்பி ஒழுகிய தலைவனுக்குத் தலைவியை மணந்து கொள்ளுமாறு அறிவுறுத்த விரும்பிய தோழி, தலைவன் சிறைப்புறத்தே வந்து நிற்பதை அறியாதாள் போல தலைவன் கேட்பத் தலைவிக்குக் கூறும்போது இக்கதை உவமையாக எடுத்துரைக்கப்படுகிறது.

**“முழவுமுகம் புலராக் கலிகொள் ஆங்கண்**
**கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்**
**ஈட்டு எழில் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்**
**ஆட்டன அத்தி நலன்நயந்து உரைஇ**
**தாழ்இருங் கதுப்பின் காவிரி வவ்வலின்**
**மாதிரம் துழைஇ, மதிமருண்டு அலந்த**

**ஆதி மந்தி காதலற் காட்டி**

**படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்**

**மருதி அன்ன மாண்புகழ் பெறீஇயர்"   (அகம்.222)**

தலைவன் களவொழுக்கம் ஒன்றனையே குறிக்கோளாகக் கொண்டு மணம் செய்தலையே விரும்பாத சூழலில் தலைவன் சிறைப்புறமாக நிற்க தோழி,

மிகுந்த அழகினையும், பொலிவினையும் நிமிர்ந்து திரண்ட தோளினையும் உடைய ஆட்டனத்தி என்பான், முழவொலி இடைவிடாது கேட்கும் ஆரவாரம் மிக்க "கழாஅர்" என்னும் ஊரில் உள்ள பெரிய துறையின் கண் நிகழ்ந்த விழாவில் நடனம் ஆடினான். தாழ்ந்து தொங்கும் கருநிறக் கூந்தலையுடைய காவிரிப் பெண்ணாள் அவன் அழகினை விரும்பி அவனைக் கவர்ந்து சென்றாள். அவள் மனைவியாகிய ஆதிமந்தி தன் கணவனைக் காணாது திசையெல்லாம் தேடி அலைந்து திரிந்து மதி மயங்கி வாட்டமுற்றாள்.

மருதி என்பவள் கடலில் சென்று ஆதிமந்திக்கு அவள் கணவனைச் சுட்டிக் காட்டிப் பின்னர் உயிர் துறந்தாள். அதனால் மருதி புலவரால் பாடப்பெறும் புகழினைப் பெற்றாள்.

தலைவன் நினைவால், தலைவன் வரைதல் வேண்டி, தலைவிக்கு மேனியில் சிறு மாற்றம் ஏற்பட்டது. அந்நிலையை தலைவனுக்கு உணர்த்த வேண்டி, ஆட்டனத்தியைக் காணாமல் தவித்த ஆதிமந்திக்கு கணவனைக் காட்டி கடலில் உயிர் துறந்தாள் மருதி, அவளைப் போல் தலைவிக்காக தலைவனைத் தேடிச் செல்வோம். உயிர் போனாலும் பரவாயில்லை. நாமும் புலவரால் பாராட்டப்பெற்ற மருதி போல மாறலாம் எனக் கூறியுள்ளார். அவளைப் போன்று பெரும் புகழ் பெறுவதற்காகப் பலநாளும் வலிய இடியுடன் கூடிய பெருமழை இரவு முழுவதும் பெய்தாலும் நாமும் தலைவனைத் தேடிச் செல்வோம் எனக்கூறுவது சாலப்பொருத்தமாகும்.

**கலித்தொகை**

கலிப்பாவால் பாடப்பெற்ற அகத்துறைப் பாடல்களைத் தொகுத்துக் கலித்தொகை எனப்பெயர் தந்தனர். இப்பாடல்களைத் தொகுத்தவர் நல்லந்துவனார். "கற்றோர் ஏத்தும் கலி" என்பதற்கு ஏற்ப தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், அராகம், அம்போதரங்கம் ஆகிய உறுப்புகளைக் கொண்டுள்ளதாலும் மிகுந்த இலக்கியச் சுவை கருத்துச் செறிவு பொருள் தெளிவு உடையனவாகக் கலித்தொகைப் பாடல்கள் உள்ளன. இவற்றில் முறையே கடவுள் வாழ்த்துச் செய்யுள் உட்பட 2, 25, 38, 52, 101, 103, 134, 140, 150 போன்ற பாடல்களில் கதைப் பற்றிய குறிப்பு வருகிறது.

**ஆகாய கங்கை**

***ஆறுஅறி அந்தணர்க்கு அருமறை பல பகர்ந்து***
***தேறுநீர் சடைக்கரந்து, திரிபுரம் தீமடுத்து***

***(கடவுள் வாழ்த்து பா.எண்.1)***

இக்கடவுள் வாழ்த்துப் பாடலில் சிவபெருமானின் பெருமைகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. இக்கடவுள் வாழ்த்துப்பாடலில் கங்கை நீரின் வேகத்தை 'சடையிலே ஒரு கூற்றிலே அடக்கி' என்பதன் வாயிலாக சிவன் கங்கையை தன் தலையிலே தாங்கி இருப்பதன் கதையை "இராமயணக் கதைகள்"[11] என்னும் நூல் விரிவாகத் தருகிறது.

பழங்காலத்தில் சகரன் என்ற ஓர் அரசன் இருந்தான். அவனது பட்டத்து ராணி விதர்ப்பை. அவர்களுக்கு ஒரு மகன் இருந்தான். அவன் பெயர் அசமஞ்சன். அசமஞ்சனின் மகன் அம்சுமான்.

சகரனுக்கு வேறு ஒரு மனைவியான சுமதி என்பவள் மூலம் அறபதினாயிரம் பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்கள் யாவரும் பெரு வலிமை கொண்டவர்களாக வளர்ந்திருந்தார்கள்.

சகரன் அசுவமேதயாகம் செய்ய விரும்பினான். அதற்காக ஓர் அசுவத்தை அலங்கரித்துப் பூமியை வலம்வரச் செய்தான். அக்குதிரைக்குக்

காவலாகப் பேரன் அம்சுமான் தலைமையில் சேனைகளை அனுப்பி வைத்தான்.

சகரனின் யாகம் வெற்றியடைந்துவிட்டால் அதனால் தனக்கு ஆபத்து ஏற்படுமோ என்று அஞ்சினான் இந்திரன். எனவே சகரன் பூமி வலம்வர அனுப்பிய அக்குதிரையை யாரும் அறியாமல் பிடித்துக்கொண்டு, பாதாள லோகம் என்றான். அங்கே கபிலர் என்ற முனிவர் ஆழ்ந்த தவத்தில் இருந்தார். அந்த குதிரையை அவருக்கும் தெரியாமல், அவருக்குப் பின்பக்கமாக மறைவான இடத்தில் கட்டிவிட்டு வந்துவிட்டான்.

தங்களுக்குத் தெரியாமல் குதிரை எப்படியோ மாயமாய் மறைந்து விட்டதையறிந்த அம்சுமான் அதிர்ச்சியும், அவமானமும் அடைந்தவனாக விஷயத்தைத் தன் பாட்டன் சகரனிடம் கூறினான்.

சகரன் ஆத்திரமடைந்தான். தன் பிள்ளைகள் அறுபதினாயிரம் பேரையும் அழைத்தான். அந்தக் குதிரை எங்கிருந்தாலும் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வருமாறு ஆணையிட்டான்.

அவர்கள் யாவரும் மண்ணுலகம் எங்கும் தேடியும் காணாமல், பாதாள லோகத்துக்குச் சென்று தேடினார்கள். அங்கே தவநிலையிலிருக்கும் கபில முனிவருக்குப் பின்னே அந்தக் குதிரை மறைத்து வைக்கப்பட்டிருந்ததைக் கண்டார்கள். கபிலர் தான் இந்தக் காரியத்தைச் செய்தவர் என்று கருதி அவரைத் துன்புறுத்த ஆரம்பித்தார்கள்.

தவத்திலிருந்த கபிலர் கண் விழித்துப் பார்த்து அந்த அறுபதினாயிரம் பேரையும் சாம்பலாக்கிவிட்டார். சகரனுக்கு அந்தச் சேதி எட்ட அவன் அம்சுமானுக்கு அதனை அறிவித்து ஆறாத்துயர் அடைந்தான். உடனே அம்சுமான் பாதாளலோகம் சென்று கபிலரைக் கண்டு வணங்கி, நடந்த தவறுக்காக மன்னிப்பை வேண்டினான்.

அவரிடமிருந்து மன்னிப்பையும் அந்தக் குதிரையையும் பெற்றுக் கொண்டு மீண்டான். குதிரை பூவுலகை வலம் வந்தது. சகரனின் வேள்வி

முடிந்தது. அம்சுமானுக்கு முடிசூட்டி ஆட்சிப் பொறுப்பை அவனுக்கு அளித்தான் சகரன்.

அறுபதினாயிரவரான சகர புத்திரர்கள், பாதாளலோகம் செல்லப் பூமியைத் தோண்டியதால் கடலுக்கு சாகரம் என்ற பெயர் ஏற்பட்டது.

அம்சுமானின் பரம்பரயில் வந்தவன் பகீரதன். அவனது குலகுரு வசிஷ்ட முனிவர். பகீரதன் ஒருநாள் முனிவரிடம் தன் வம்ச வரலாற்றைக் கேட்டுக் கொண்டிருந்தான். தன் மூதாதையான சகர புத்திரர்கள் கபில முனிவரால் சாம்பலாகிப் போனதைக் கேட்டு அவன் மனம் மிகவும் சஞ்சலப்பட்டது. தன் முன்னோரான அவர்கள் நற்கதி அடையத் தன்னால் ஏதாவது செய்ய முடியுமா என்று பகீரதன் தன் குல குருவைக் கேட்டான்.

பகீரதன் ஆட்சியைத் தன் அமைச்சன் சுமந்திரனிடம் ஒப்படைத்து விட்டு பிரமதேவனை எண்ணிப் பத்தாயிரம் ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தான். பிரமன் அவனுக்குக் காட்சியளித்தார் பகீரதன் தன் கோரிக்கையைத் தெரிவித்தான்.

பகீரதா! உன்னுடைய மூதாதையர் முனிவரின் கோபத்துக்கு ஆளாகிச் சாம்பலானார்கள். அவர்களுடைய சாம்பலின் மேல் ஆகாய கங்கை பாய்ந்தால் தான் அவர்கள் நற்கதி அடையமுடியும். ஆகாய கங்கை விண்ணிலிருந்து மண்ணுக்குக் கீழே இறங்க வேண்டுமானால் அதன் வேகம் மிகவும் அதிகமானதாக இருக்கும். அதன் வேகத்தை தாங்கும் வலிமை சிவபெருமானுக்கு மட்டுமே உண்டு. ஆகவே நீ சிவபெருமானுக்கு இது குறித்துத் தவம் செய்க! என்று அருளினார் பிரம்மதேவன்.

பகீரதன் மீண்டும் தவம் மேற்கொண்டான். சிவபெருமானைக் குறித்துப் பல ஆண்டு காலம் தவம் செய்தான். சிவபெருமான் தரிசனம் தந்து அவன் கோரிக்கையை நிறைவேற்றி வைப்பதாக அருள் புரிந்தார்.

அதன்பின்னர் ஆகாய கங்கை, பூமியில் இறங்குவதற்காக பல ஆண்டுகள் தவம் செய்தான். கங்காதேவி பகீரதனுக்குத் தரிசனம் தந்து,

என வேகத்தைத் தாங்குவதற்காக மீண்டும் சிவபெருமானை வேண்டிக் கேட்டுக் கொள் என்று கூறினாள்.

பகீரதன் மீண்டும் சிவபெருமானைக் குறித்து தவம்செய்தான். இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகள் அவன் செய்த கடுந்தவத்தினால் சிவபெருமான் மீண்டும் அவனுக்குக் காட்சியளித்தார்.

கங்கை நீர் வேகத்தைத் தாமே தாங்குவதாகவும் ஒரு துளியும் கீழே சிந்தாமல் பார்த்துக் கொள்வதாகவும் பகீரதனுக்கு வரம் அளித்தார் சிவபெருமான்.

பகீரதன் மீண்டும் கங்கையைக் குறித்துத் தவமிருந்தான். சிறிது காலம் கழிந்தபின் கங்கை காட்சியளித்து, அவன் வேண்டுகோளை நிறைவேற்ற விண்ணிலிருந்து வேகமாக மண்ணை நோக்கி இறங்கி வந்தாள். சிவபெருமான் தாம் வரமளித்தபடி கங்கையின் வேகம் குறைய அவளைத் தம் தலையில் தாங்கிக் கொண்டு ஒரு சிறிதளவு நீரே பூமியில் சிந்தும்படி செய்தார்.

அதுவே வெள்ளப் பெருக்காகி, பகீரதன் முன்னே சென்று அவன் பின்னே வந்து கொண்டிருந்தாள். வெள்ள நீர் வழியிலே ஜாஹ்னு என்ற முனிவரின் யாகசாலைக்குள் புகுந்தது. யாகத்துக்கு இடையூறு செய்துவிட்டது. அம்முனிவருக்குப் பெருஞ்சினம் பொங்கியது. தம் உள்ளங்கையில் அந்த நீர் முழுவதையும் எடுத்து குடித்துவிட்டார்.

முன்னே சென்று கொண்டிருந்த பகீரதன் தன் பின்னே வந்த கங்கையைக் காணாமல் வருத்தத்தோடு திரும்பிச் சென்றபோது, நடந்ததை அறிந்து, முனிவரிடம் தன் முயற்சிகளை விளக்கித் தன் மூதாதையர் நற்கதியடைய கங்கையை விடுவிக்கும்படி உள்ள முருகுமாறு வேண்டி நின்றான்.

முனிவரும் மனம் இறங்கித் தாம் குடித்த கங்கையைத் தன் காதின் வழியே வெளியே விட்டார். அதன்பின்னர் கங்கை பகீரதனின் பின்னே தொடர்ந்து சென்று சகர புத்திரர்களின் சாம்பலின் மேல் பாய்ந்தது. அவர்கள் நற்கதி அடைந்தார்கள்.

இக்கடவுள் வாழ்த்தில் சிவபெருமான் தலையில் இருக்கும் கங்கையின் புராணம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**முப்புரம் எரித்த வரலாறு**

கலித்தொகையின் '2' ஆவது பாடலும் "சிவன்" குறித்த கதையைத் தருகிறது. பாலை பாடிய பெருங்கடுங்கோவால் எழுதப்பட்ட இப்பாடல் இல்வாழ்க்கையை நெறிமுறைப்படி நடத்துதற்கு வேண்டிய பொருளை ஈட்டுவதற்குத் தலைவன் பிரியக் கருதிப் பொருள் வயிற்பிரிவேன் என்றான். அப்போது பாலைநில வெம்மை குறித்து கூறும் நிலையில் இக்கதையை தோழி உவமையாக எடுத்துரைப்பாள்.

**"சீறு அருங்கணிச்சியோன் சினவலின் அவ்எயில்**
**ஏறுபெற்று உதிர்வன போல், வரை பிளந்து இயங்குநர்**
**ஆறுகெட விலங்கிய அழல் அவிர் ஆர்இடை"    (கலித்.2)**

இறைவன் உலகுகளைப் படைக்கக் கருதியபொழுது படைத்தல் தொழிலைச் செய்வதற்கு உரியவனாக முதன் முதலாகத் தோன்றிய முதியவன் அயன்.

"எங்கும் நீர் சூழ்ந்திருக்க, பிரம்மனாகிய பகவான் விஷ்ணு யோக துயில் கொண்டிருந்தார். நீருக்கு 'நர' என்றும் 'அயன்' என்றால் 'படுக்கை' என்றும் பொருள். எனவே விஷ்ணுமூர்த்தி நாராயணன் என்று பெயர் பெற்றார்.

நீரிலிருந்து ஓர் அண்டம் வெளித்தோன்றியது. அதனுள் பிரம்மா இருந்தார். அவர் 'சுயம்பு' ஆவார். அவர் முட்டையின் இரு பகுதியிலிருந்து சுவர்க்கத்தையும் பூமியையும் ஆக்கினார். அவ்விரண்டினும் ஆகாயம் திக்குகள், காலம், மொழி, உணர்வுகள் உற்பத்தி செய்யப்பட்டன.

பிரம்மாவின் மனதிலிருந்து மரீசி, அத்திரி, ஆங்கிரசர் புலஸ்தியர், வசிஷ்டர் என்ற சப்த ரிஷிகளைத் தோற்றுவித்தார். பின்னர் ருத்திரனையும், சனத் குமாரரையும் தோற்றுவித்தார்"[12]

அயன் முதலான தேவர் வந்து இரத்தலின் எல்லை கொள்ளாத பகைவருடைய வலியைக் கெடுத்தற்குச் சினந்து, கூற்றுவனைப் போன்று வஞ்சனை செய்கின்ற அவுணரை, எதிர்நின்று போரிடும் வலிமையுடன், மூன்று கண்களை உடைய இறைவன் மூன்று கோட்டைகளையும் அழிக்கச் சினந்து எழுந்தான். சிவன் முப்புரம் எரித்த வரலாற்றை “சிவபுராணம்”[13] வழியாக விரிவாக அறியமுடிகின்றது.

“வித்யுன்மாலி, தாரகாட்சன், கமலாட்சன் ஆகிய மூவரும் கடுந்தவம் இயற்றி, பிரமனிடம் வரம் வேண்டினர். தாங்கள் எந்த உயிராலும் கொல்லப்படக்கூடாது என்று கேட்டு பிரம்மன் அதை அளிக்க முடியாதெனக் கூற அவர்கள், நாங்கள் எண்ணிய இடம் சொல்ல பொன், வெள்ளி, இரும்பாலான மூன்று பறக்கும் பட்டணங்களும், ஆவை ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை சேர வேண்டும். அவ்வாறு ஒன்று சேரும் பொழுது ஒரே அம்பால் முப்புரங்களையும் அழிக்க வல்லவன் ஒருவனால் மட்டும் மடிய வேண்டும் என்று வரம் கேட்டுப் பெற்றனர்.

அதன்படி பிரம்மா மயனிடம் கூற அவன் பொன்னகரைத் தாரகாட்சனுக்கும், வெள்ளி நகரைக் கமலாட்சனுக்கும், இரும்பு நகரை வித்யுன் மாலினிக்கும் அளித்தான்.

இவற்றுள் பொன்நகரைச் சொர்க்கத்திலும், இரசதபுரியை மத்தியத்திலும், ஆகாயபுரியைப் பூமியிலும் சஞ்சரிக்கத்தக்க இயந்திர சூத்திரம் நிர்மானிக்க அவர்கள் தத்தம் பறக்கும் திரிபுரங்களுடன் சேர்ந்தார்கள்.

திரிபுரர்கள் அசுரர்கள் எனினும் வேத சாஸ்திரங்கள் முப்புரங்களிலும் பூரணமாய் விளங்குகின்றனர். அவர்கள் நினைத்த போதெல்லாம் புரங்கள் இடப்பெயர்ச்சி ஆகும் போது கோடிக்கணக்கான உயிரினங்கள் மாண்டு மடிந்தன. இதனால் தாங்கொணாத் துயரடைந்த தேவர்கள், ரிஷிகளும், பிரம்மாவை அணுகி தமது கவலைகளைக் கூறி முறையிட்டனர்.

அப்போது பிரம்மன் தன்னால் வரமளிக்கப்பட்ட அரக்கர்களைத் தானே அழிப்பது முறையல்ல என்று கூறி, சிவன் உதவியை நாடுமாறு ஆலோசனை கூறினார். சிவபெருமான் அசுரர்கள் ஆயினும் புண்ணிய சீலர்கள் அதனால் அவர்களை சம்காரம் செய்ய இயலாது என்று கூறி அவர்களைத் திருமாலைக் கண்டு தான் கூறியவாறு சொல்லி முறையிடச் சொன்னார்.

அவர்கள் முறையீட்டைக் கேட்ட திருமால் சிவபெருமானைத் தொழுது யாகங்கள் செய்தால் மந்திர மகிமையினாலேயே அவர்கள் இறப்பர் என்று கூறியதுடன், சிவமூலமந்திரத்தை உபதேசித்து இலட்சலிங்க அர்ச்சனை செய்வித்தார். திரிபுராதிகள் சிவபூசை, ஒழுக்க நெறியை மறக்க மாயா சக்தியால் தான் எதுவும் செய்ய முடியும். அதற்கான உபாயம் தேட திருமால் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

திருமால் தன்னிடமிருந்து ஒரு மாய புருஷனை உருவாக்கி, அவனுக்குக் கீழ்கண்டவாறு கட்டளையிட்டார். நீ பல சக்திகளையும் மாயங்களையும் என்னிடமே பெற்றுத் திரிபுரம் சென்று உன் மாயா சக்தியால் அந்த மூன்று அசுரர்களையும் மயக்கி, அவர்களுக்கு நான் கூறிய சாஸ்திரங்களைக் கற்பித்து, அவர்களுடைய ஆசாரங்கள், நெறிகளை உன் வலிமையால் அகற்றி திரிபுரம் நாசமாகும்படி செய்ய வேண்டும்'' என்று கூறினார்.

மேலும் அவர்கள் உன் வயப்பட்டு உனது சாஸ்திரங்களை மோகித்த பிறகு, உனது சீடர்களும் மோகித்த பிறகு அவற்றை பரப்பிவிடு என்றும் கூறினர். மாயாரூபி பூஜ்யன், ருஷி, பதி, ஆசாரியன் என்ற சீடர்களைப் படைத்து, வித்தைகளைக் கற்பித்து பண்டிதர்களாக்கி, திருமாலிடம் அழைத்துச்செல்ல அவர்களை ஆசிர்வதித்து மாயரூபனிடம் ஒப்படைத்து ஆசிர்வதிக்க அவர்கள் ஐவரும் திருபுரத்திற்கு அருகில் உள்ள வனத்தை அடைந்து மயக்கும் மாயவித்தைகளைப் புரியலாயினர்.

இவர்கள் மதத்தில் பல அசுரர்கள் சேர்ந்தனர். ஐவர்களுடன் சேர்ந்து கொள்ளுமாறு நாரதரையும் அனுப்பி வைத்தார் திருமால். அறுவரும் அசுரர்கள் பட்டணத்தில் புகுந்தனர்.

நாரதர் வித்யுன் மாலியைக் கண்டு மாயரூபியை அறிமுகப் படுத்திவிட, நாரதரின் கூற்றைக் கேட்ட அவன் தானும் உபதேசம் பெற விரும்பினான். உடனே மாயரூபி அவனுக்கு சில மந்திரங்களை உபதேசித்து அவன் நகர மக்களையும், தீட்சை செய்து அம்மதத்தைப் பின்பற்ற ஆணையிட்டான். மாயரூபி திரிபுரம் முழுவதும் ஒழுக்கநெறிகளை மீறி நடக்கச் செய்தான். திருமாலின் ஆணைப்படி அங்கு மூதேவி குடியேறினாள். பிரும்மாவின் ஆணைப்படி தனலட்சுமியும் நீங்கினாள். மாயரூபியும் நாரதரும் அந்நகர மக்களை மாயையால் மயக்கினர்.

திருமால் சிவபெருமானிடம் நிகழ்ந்தவற்றைக் கூறி, திரிபுரர்கள் தவநெறியை விட்டுவிட்டதையும் கூறிட, சிவபெருமான் அதர்மவழிக்கு மாறின அசுரர்களின் திரிபுரங்களை இனி சம்காரம் செய்வதாகக்கூறி மறைந்தார்.

திருமால் தேவர்களைச் சிவபூசை செய்யுமாறு கூறி, அதற்கான விதிமுறைகளையும் விளக்கிக் கூறினர். தேவர்களின் முன் சிவபெருமான் தோன்றி திரிபுரத்தை அழிப்பதாகக் கூறி, விசுவகர்மனை அழைத்து தேர், வில் பாணங்களைத் தயாரிககுமாறு கூறினார்.

சிவபெருமான், பார்வதி இருவரும் தேரில் ஏறி புறப்பட்ட நாராயணரும் அதனைச் சுமக்கிறார். இமயவர்களும் திரிபுரம் நோக்கிச் சென்றனர். சிவபெருமான் வில்லை வளைத்தார். திரிபுரங்கள் ஒன்று சேர்ந்தன. தேவர்கள் சிவபெருமானைத் துதித்தனர்.

அதுவே தக்க தருணம் என்று பிரம்மா சிவபெருமானிடம் கூறி பாணத்தை எய்யும்படி பிரார்த்தித்தார்.

சிவபெருமான் அஸ்திரத்தைவிட அது திரிபுரம் அடைந்து நாசம் செய்துவிட்டு சிவனாரிடமே வந்து சேர்ந்துவிட்டது. சீறுதற்கரிய,

மழுப்படை உடையோன் சினத்தலின் மூன்று கோட்டைகளும் திரிபுரம் அழிதலைப் பெற்று உதிர்வன போல் மலைகள் எல்லாம் வெடித்துச் சிதறிப் போவார்க்கு வழியில்லையாக வீழ்ந்து குறுகிட்டுக் கிடக்கின்றன.

தலைவியை விடுத்து தலைவன் பொருள் தேடச் சென்ற காடு கொடுமையான வழியை உடையது எனக் கூறும்போது புலவர் சிவன் திரிபுரம் எரித்ததை விளக்கி, அத்தகையதொரு காட்டு வழியை கடந்து செல்ல வேண்டாம் எனத் தோழி தடுக்குமிடத்து இக்கதை இடம்பெறுகின்றது.

இப்பாடலில் கூறப்பட்ட சிவன் முப்புரம் எரித்த நிகழ்வு சங்க இலக்கியங்களுள் ஒன்றான புறநானூற்றிலும் இடம்பெற்றுள்ளது. (புறநா.55)

**அரக்கு மாளிகை எரிதல்**

கடவுள் தொடர்புடைய கதை மட்டுமல்லாது புலவர்கள் இதிகாசக் கதைகளையும் தாம் இயற்றிய பாடலில் கூறியுள்ளனர் என்பதனை விளக்கும் வகையில் இந்நூலின் 25வது பாடல் 'மகாபாரதக்கதை' பற்றிச் சுட்டிச் செல்கிறது. பாலை பாடிய பெருங்கடுங்கோவால் எழுதப்பட்ட இப்பாடல் தலைவியை விடுத்து பிரிந்து சென்றால் அலர் ஏற்படும். எனவே பிரிந்து செல்ல வேண்டாம் என்ற நிலையில் இக்கதை உவமையாக பயன்படுத்தப்பட்டது.

***"வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற***
***முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்***
***ஐவர் என்று உலகு ஏத்தும் அரசர்கள் அகத்தரா***
***கைபுனை அரக்கு இல்லைக் கதழ்எரி சூழ்ந்தாங்கு***
***களிதிகழ் கடாஅத்த கடுங்களிறு அகத்தவா***
***முளிகழை உயர்மலை முற்றிய முழங்கு அழல்" (கலி.25)***

பாண்டவர்களை அழிப்பதற்காகத் துரியோதனன் சூழ்ச்சியால் அமைத்த அரக்கு மாளிகை நிகழ்ச்சி உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்நிகழ்வை "மகாபாரதம்"[14] இவ்வாறு விளக்குகிறது.

நாடு சிறந்து நலம் மிகுந்து யாவரும் இன்புற்றுத் தருமனைப் புகழும் போதெல்லாம் துரியோதனன் மனம் கொதிப்படைந்தான். தனது துஷ்ட மந்திரிகளுடன் கலந்து பன்முறை ஆலோசித்தான். பாண்டவர்களைத் தொலைத்தாலன்றித் தன்கைக்கு ஆட்சி வராதெனத் தீர்மானித்தான். தந்தையிடம் முறையிட்டான். தருமனுக்கு முடி சூட்டியது தக்கதே என்று திருதராஷ்டிரன் அறிந்திருந்தும் முறையீட்டை மறுக்க இயலவில்லை.

மன்னன் விதுரரையும், பீஷ்மரையும் அழைத்து துரியோதனது விருப்பத்தைக் கூறினான். அவர்கள் இருவரும் தீர ஆலோசித்தனர். இருதிறத்தாரும் பிரிந்திருத்தலே நன்று. துரியோதனன் திருந்தப் போவதில்லை; கூடியிருப்பின் கொடுமையே செய்வர். ஆதலால் அவர்கள் சொல்வதையே ஒப்புக்கொள்வோம் என்ற முடிவுக்கே வந்தனர். தங்கள் கருத்தைச் சொல்லிச் சென்றனர்.

இருவரும் சென்ற பின்னர் துரியோதனன் கர்ணனுடனும் சகுனியுடனும் ஆலோசித்தான். தந்தையைத்தன் வசமாக்கிக் கொண்டான். பாண்டவர்களை வாரணாவதம் போய் வசிக்கும்படி கூறச் செய்தான். இருவருக்கும் உயிர் போன்றவனான  புரோசனன் என்ற அமைச்சனால் நகர் புதுப்பிக்கப்பட்டது.

திருதராஷ்டிரன் தருமனை அழைத்து, துரியோதனன் துஷ்ட புத்தி உடையவன். ஆதலால் உங்களுடன் கூடி வாழ இசைந்திலன்; நீங்கள் யாதொரு இடையூறும் இன்றி வாரணாவதத்தில்அமைக்கப்பெற்ற அரண்மனையில் தங்கியிருந்து, புரோசனனை மந்திரியாகக் கொண்டு இனிது வாழ்ந்திருங்கள் எனப் போதித்து அவர்களுக்கு வரிசைகளும் கொடுத்துக் குடியேற்றிவிட்டான்.

தந்தையின் சொல்லைச் சிரமேற்கொண்டு பாண்டவர்கள் குந்தியுடன் வாரணாவதம் போய்ச் சேர்ந்தார்கள். சிவபெருமானைத் தரிசித்து மனையேறி வாழ்ந்து வந்தனர். அரசாட்சி செலுத்தினர். விதுரர் எப்போதும் பாண்டவர் பக்கம் அனுதாபம் கொண்டவர். மன்னன் அவர்களை வாரணாவதம் அனுப்பியதற்கு ஏதோ காரணம் இருக்க வேண்டுமென்று யூகித்தார். சிற்பிகளோடு சிற்பியாய் பணியாற்ற ஓர் ஒற்றனை அனுப்பி வைத்தார்.

அம்மாளிகை அரக்கினால் ஆனதென்றும், மேற்பூச்சிலும் அலங்காரத்திலும் அரண்மனையாக்கப்பட்டிருக்கிறதென்றும் தெரிந்து, இந்த நிகழ்ச்சி மாளிகைக்குத் தீயிட்டுப் பாண்டவரைக் கொல்லும் வழியேயாகும் என்று தெரிந்து கொண்டார். இதில் மன்னனும் ஈடுபட்டிருப்பதால் இதை இரகசியமாகவே வைத்திருக்க எண்ணினார்.

ஒற்றனாக அனுப்பிய சிற்பியைக் கொண்டு ஒரு சுரங்கப் பாதையை அமைக்கச் செய்தார். எவரும் அறியா வண்ணம் இச்செய்தியை பீமனிடம் அறிவிக்கச் செய்தார். நிலவறையின் வழி ஒரு குகை போல் நீண்ட காடு வரை சென்று முடியும்படி ஒரு மண்டபத்தை அமைத்தேன். உங்கள் நலம் நோக்கிக் கூறினேன். எனது கூற்றை நம்புவதோடு இரகசியமாகவும் வைத்துக் கொண்டு, தீங்கு நேர்ந்தபோது வெளியேறுக என்று கூறினான் சிற்பி.

புரோசனன் மீது சந்தேகங்கொண்டு பாண்டவர் இரவில் தூங்காமலே காத்து வந்தனர். ஒருநாள் இரவு யாவரும் உறங்கும் போது, பீமன் குறித்த தூணினை விலக்கி, வழி போவதறிந்து, உடன பிறந்தாரையும், தாயையும் வெளியேற்றி, தான் வெளியேறும் போது அந்த அரக்கு மாளிகைக்குத் தீ வைத்துவிட்டு வெளியேறினான்.

மாளிகை தீப்பற்றி எரிந்தது. மந்திரியும் மாண்டான். இச்செய்தி அஸ்தினாபுரிக்கு எட்டியது. குந்தியும் மைந்தரும் மாண்டனர் எனப் புலம்பினர். துரியோதனன் மகிழ்ந்திருந்தான். பாண்டவர்கள் தப்பிப் பிழைத்திருப்பார்கள் என்று விதுரர் அமைதியாய் இருந்தார்.

தலைவன் தலைவியை விடுத்து பிரிந்து செல்லும் காடு தானே தீப்பற்றி எரியும் அழல் சூழ்ந்த வெஞ்சுரம் மூங்கிற்காடு தீப்பற்றி எரிந்தது துரியோதனன் பாண்டவர்களுக்கு எதிராக எழுப்பிய அரக்கு மாளிகை எரிந்ததற்கு ஒப்பாகும். வானம் துளி மாறினால் உலகம் கெடும். அதுபோல நீ அளி மாறினால் தலைவி கெடுவன் என்பது இதன்மூலம் உணர்த்தப்பட்டது.

**இராவணன் ஆணவம் அழிதல்**

*கலித்தொகையின் "38" ஆவது பாடல் "சிவபெருமான்" குறித்த கதையைத் தருகின்றது. கபிலரால் எழுதப்பட்ட இக்குறிஞ்சிக் கலிப்பாடல் தலைவியை மணம் செய்து கொள்ள காலம் தாழ்த்திய தலைவனைக் கண்டு, தலைவியது நிலைமை பற்றிக் கூறி விரைவில் மணம் புரிந்துகொள் எனக் கூறுவாள். அவன் திருமணம் செய்து கொள்ள வருகின்றமை அறிந்த தோழி தலைவிக்குத் தலைவன் வரைவு மலிந்தமை கூறியது, அப்போது தலைவனது மலைநாட்டை சார்ந்த யானையின் செயலைச் சொல்லுகின்ற போது உவமையாக இக்கதையைக் கூறுகிறாள்.*

**இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக**
**ஐஇரு தலையின் அரக்கர் கோமான்**
**தொடிப்பொலி தடக்கையின்கீழ் புகுத்து அம்மலை**
**எடுக்கல் செல்லாது உழப்பவன் போல (கலித்.38)**

*இராவணன் குறித்து வரும் இக்கதை "பதினெண் புராணங்கள்"[15] என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.*

*இராவணன் சிவபெருமானைக் குறித்து கோரதவம் செய்தான். ஒவ்வொரு தலையாக வெட்டியும் அய்யன் காட்சிதராததால் பத்தாவது தலையைத் துண்டிக்க வாளை உருவ சிவன் தோன்றினார். அப்போது அவன், மகாதேவா! பகைவருக்குப் பணியாத வலிமையைத் தருவீர். வெட்டிய தலைகள் மீண்டும் உண்டாக அருள் புரிவீர்! என்று வேண்டிட, சிவனும் அவ்வாறே வரமளித்து மறைந்தார். இதனால் தேவர்கள் மிகவும் அஞ்சினர்.*

*தேவர்கள் நாரத முனிவரை வணங்கி இராவணன் பெற்ற வலிமையைக் கூறி என்ன செய்வது என்று கேட்க, தான் ஓர் வழி செய்வதாகக்கூறி நாரதர் நேரே இராவணனிடம் சென்றார்.*

அவரிடம் இராவணன் சிவ வழிபாடு செய்து அவர் அருளால் பெரும் வல்லமை பெற்றிருப்பதாகக்கூறி மகிழ்ந்தான். மேலும் தான் தலைகளை ஓமம் செய்து உயிரைவிடத் துணிந்ததால் சிவபெருமான் காட்சி தந்து வரம் அருளியதாகக் கூறினார். பின்னர் அந்த இடத்தில் கோயில் கொள்ள வேண்டிட அவரும் அங்கே எழுந்தருள்வதாக கூறினார்.

நாரதர் புன்சிரிப்போடு சிவன் கொடுத்த வரம் உண்மையானது தானா என்று சோதித்துப்பார். ஏனென்றால் அவர் நஞ்சை உண்டு தன்னை மறந்தவர் என்றார். மேலும் அவர், இராவணனிடம் வரத்தைச் சோதித்துப் பார்க்க கைலாய மலையைக் கைகளால் தூக்க வேண்டும். தடையின்றி எடுத்துவிட்டால் வரம் கைகூடியதென்று அறியலாம் என்றார்.

நாரதர் கூற்றை உண்மை என்று நம்பிய இராவணன் தன் கரங்களால் மலையை அசைத்து எடுத்தான். மலை மீதிருந்த அனைத்தும் நிலை குலைந்து வீழ்ந்தன. அப்போது சிவபெருமான் என்ன என்று சிந்திக்க, பார்வதி தரக்கூடாத வரத்தை இராவணனுக்கு நீங்கள் அளித்ததால், அவனது வல்லமை, கொடுத்த உங்களையே பதம் பார்க்கிறது என்றாள்.

ஞானப் பார்வையால் எம்பெருமான் நடப்பதென்ன என்று அறிந்து கொண்டார் இராவணன் ஆணவத்தால் அறிவை இழந்து என்னிடமே நான் அளித்த வரத்தைச் சோதித்துப் பார்க்கிறான். பார் அவன் கதியை என்று தேவியிடம் கூறியவாறே கால் கட்டை விரலை அழுத்த மலை அசைவு நீங்கி நேராக நின்றுவிட்டது.

மலையின் அடியில் இராவணன் கைகள் சிக்கிக்கொள்ள அவன் சக்தி வீணாகி ஆணவம் அழிந்தது. இராவணன் கண் கலங்கினான். அப்போது அங்கு வந்த நாரதரிடம் தன் அவல நிலையைக்கூறி, அதிலிருந்து மீளும் வழியைக் கூறுமாறு வேண்ட, பின்னர் நாரதர் வீணையை மீட்டி சாம வேதத்தை இசையுடன் பாட, அந்த உருக்கமான இனிய இசையில் மயங்கிய சிவபெருமான் அழுத்தியிருந்த கட்டை விரலை நகர்த்த இராவணன் கைகள் விடுபட ஈசன் அவன் முன்பு தோன்றினார்.

இலங்கை வேந்தே! என்னிடமே உன் ஆணவத்தைக் காட்டத் துணிந்தாய். போர்க்களத்தில் உனது பத்துத் தலைகளையும் அறுத்துத்தள்ளி உன்னை வதைக்கப் போகும் புருஷன் அவதரிப்பான் என்று கூறி மறைந்தார்.

தலைவனது மலையைச் சார்ந்த யானையானது வேங்கை பூக்களை புலி என நினைத்து தன் கொம்பை பாறையில் குத்தி எடுக்க முடியாமல் துன்பப்பட்ட நிலை இராவணன் தன் ஆணவத்தால் கைலாய மலை தூக்க முயன்று சிவனால் தலை நசுக்கப்பட்டு துன்பநிலை அடைந்த கதை யானையின் செயலுக்கு உவமையாக கூறினாள் தோழி. இக்கதையானது தக்க இடத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**பீமசேனன் வலிமை**

கலித்தொகையின் "52" ஆவது பாடல் பாரதக் கதையில் வரும் பீமனின் வலிமையை சுட்டுகிறது. கபிலரால் எழுதப்பட்ட இப்பாடல்

தலைவன் தலைவியைச் சந்திக்க இரவுக் குறியிடம் நோக்கி வந்த பொழுது, தோழி அவனை எதிர்பட்டனள். இரவுக்குறி வருதலினால் ஏற்படும் குற்றமும், அக்குற்றத்தால் வரும் துன்பமும், தன் உள்ளத்து விருப்பமும் எடுத்துரைத்து திருமணம் செய்து கொள்ள வற்புறுத்தும் நிலையில் தலைவனது மலையின் சிறப்பினையும், மலையில் வாழும் யானை வலிமையைக் கூறும்போது பயன்படுத்தப்பட்டது.

**"முறஞ்செவி மறைப்பாப்பு முரண் செய்த புலிசெற்று**
**மறம் தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்**
**குறங்கு அறுத்திடுவான் போல், கூர்நுதி மடுத்து அதன்**
**நிறம் வாடிமுரண் தீர்ந்த நீள் மருப்பு எழில் யானை" (கலித்.52)**

துரியோதனனைத் தொடையிலே அடித்து உயிரைப் போக்கினன் பீமசேனன் என்ற கதையை புலவர் இங்கு உவமையாகப் பயன்படுத்தியுள்ளார். இக்கதையை "மகாபாரதம்"[16] விரிவாக கூறுகிறது. கர்ணன் யுத்தத்தில்

கொல்லப்பட்டது அறிந்ததும் துரியோதனன் தீராத சோகத்தில் மூழ்கினான். துரியோதனனுடைய நிலமையைப் பார்த்துப் பரிதாபப்பட்ட கிருபர் சொல்லலானார்.

அரசாட்சி மீது ஆசை வைத்து, அதற்காகச் செய்ய வேண்டிய காரியங்களின் பெரும் பாரத்தை யார் மேல் வைத்தோமோ அவர்கள் அதைச் சந்தோஷமாகவே வகித்து போரில் தங்கள் உயிர்களைத் தியாகம் செய்து மேலுலகம் அடைந்துவிட்டார்கள். இப்போது நீ செய்ய வேண்டியது ஒன்றே. பாண்டவர்களோடு சமாதானம் செய்து கொள்வதே உன்னுடைய கடமை, அரசனே வேண்டாம் இனிப் போராட்டம் என்றார்.

நிராசையான நிலையிலிருந்தாலும் துரியோதனனுக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை.

அதன்மேல் எல்லோரும் யோசித்துச் சல்லியனைச் சேனாதிபதியாக அழைத்தார்கள். சல்லியன் மகாபலசாலி அவன் பராக்கிரமம் உயிரிழந்த தலைவர்களுக்குக் குறைந்ததல்ல. அவன் தலைமையின் கீழ் பலத்த யுத்தம் மறுபடியும் துவங்கியது.

பாண்டவர் பட்சத்தில் இப்போது தருமன் முழு பாரமும் வகித்தான். அவன் நேரில் சல்லியனை தாக்கினான். அதுவரையில் சாந்தமே உருக்கொண்டவனாக விளங்கிய தருமன் இப்போது சினஞ்கொண்டு கோரயுத்தம் நடத்தியது வியப்பாக இருந்தது. இருவருக்குமிடையே நடந்த போரில் சல்லியனும் இறந்து போனான். இனி ஒருவித பலமும் இல்லை என்று கௌரவப்படை மனக்கலக்கம் அடைந்தது. ஆயினும் எஞ்சிய திருதராஷ்டிர புத்திரர்கள் ஒன்று சேர்ந்து பீமனை நான்கு பக்கத்திலிருந்தும் தாக்கினார்கள். அனைவரையும் கொன்றான். பதின்மூன்று வருஷம் கோபத்தால் உள்ளம் வெந்த வாயு புத்திரன் இன்று தான் வாழ்க்கைப் பயனை அடைந்தேன் என்று எண்ணி மகிழ்ச்சி அடைந்தான்.

அதன்பின் சகுனி சகாதேவனைத் தாக்கினான். கூரிய எஃகு அம்பு ஒன்றைச் சகாதேவன் குறித்து, 'மூடனே' நீ செய்த பாபத்தின் பலனை

இப்போது அடைவாய் என்று சொல்லிச் சகுனியின் தலை அறுபட்டுக் கீழே விழும்படி எய்தான். கௌரவர்களின் பாபங்களுக்கெல்லாம் மூலமாயிருந்த தலையானது அறுபட்டு வீழ்ந்தது என்றார் முனிவர்.

துரியோதனன் ஒருவன் தவிர எல்லோரும் மாண்டுவிட்டார்கள். சேனையின்றி, ரதமின்றிப் பரிதாப நிலையிலிருந்த அந்த வீரன், கதாயுதத்தை எடுத்துக் கொண்டு பாதசாரியாகத் தன்னந்தனியாக ஒரு தண்ணீர் மடுவை நோக்கிச் சென்றான். ஒரு மடுவைக் கணடான். குளிர்ந்த தண்ணீரில் இறங்கினால் உடலில் வெப்பம் தணியும் என்று மடுவில் இறங்கி நின்றான்.

மகாபுத்திசாலியான விதுரர் என்ன நடக்கும் என்பதை முந்தியே கண்டு சொன்னார் என்று தனக்குள் சொல்லிக் கொண்டு, அந்த மடுவில் இறங்கினான். காலம் தவறிய பிறகு அறிவு தோன்றினால் ஒரு பயனும் இல்லை. செய்த கருமங்களின் விளைவை அனுபவித்தே தீரவேண்டும்.

துரியோதனனைத் துரத்திக் கொண்டே அங்கே யுதிஷ்டிரனும் அவன் தம்பிகளும் வந்து சேர்ந்தார்கள்.

துரியோதனா! குலத்தையும் குடும்பத்தையும் நாசம் செய்துவிட்டுத் தண்ணீரில் மறைந்து ஒளிந்து கொண்டு உயிர் தப்பப் பார்க்கிறாயா? உன்னுடைய மானமும் நன்மதிப்பும் எங்கே போயிற்று வெளியே வந்து யுத்தம் செய். வீரனாய் பிறந்த நீ யுத்தத்தினின்று தப்பிப் பிழைக்கப் பார்க்காதே! என்றான் தருமன்.

அப்போது துரியோதனன் மிகவும் வருத்தப்பட்டு 'என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்கல்ல, நான் இவ்விடம் வந்தது. பயத்தால் நான் இவ்விடம் வந்தேன் என்று எண்ணாதீர்கள். என் உடலின் சிரமத்தைத் தீர்த்துக் கொள்ளத்தான் இங்கே வந்து குளிர்ந்த தண்ணீரில் இறங்கி நின்றேன். என்னைச் சார்ந்தவர்கள் அனைவரும் மாண்டார்கள். அரச பதவியில் எனக்கிருந்த விருப்பம் தீர்ந்தது. இந்த உலகம் உனதே. கவலையின்றி நீயே அனுபவிப்பாயாக' என்றான்.

ஊசிமுனை நிலமும் இல்லையென்று அந்த நாளில் நீ சொன்னாயல்லவா! சமாதானத்தை விரும்பி நாங்கள் கெஞ்சிக்கேட்ட காலத்தில் இல்லை என்று சொன்ன நீ எல்லாம் எடுத்துக்கொள் என்கிறாய். நீ செய்த பாவங்களை எல்லாம் எடுத்துச் சொல்ல வேண்டுமா, நீ எங்களுக்கு இழைத்த தீங்குகளும் திரௌபதிக்கு இழைத்த அவமானமும் உன் உயிரைக் கொண்டு தான் தீரும் என்றான் தருமபுத்திரன்.

சஞ்சயன் திருதராஷ்டிரனுக்குச் சொல்லுகிறான். இந்தக் கொடிய வார்த்தைகளை தருமன் வாயால் கேட்டதும், உன் மகன் துரியோதனன் கதாயுதத்தைத் தூக்கிக் கொண்டு தண்ணீரில் எழுந்து நின்றான்.

எழுந்து நின்ற துரியோதனன் வாருங்கள் ஒருவர் பின் ஒருவராக வாருங்கள். நான் தனியாக இருக்கிறேன். நீங்கள் ஐவரும் ஒன்றுகூடி என்னைத் தாக்குவது நியாயமன்று. என் தேகத்துக்கு கவசமில்லை. ஓய்ந்து போயிருக்கிறேன். உடம்பில் பல இடங்களில் காயமடைந்திருக்கிறேன் என்றான்.

இதற்கு தருமன் ஒருவனைப் பலர் சேர்ந்து எதிர்ப்பது தவறானால் அபிமன்யு எவ்வாறு இறந்தான். உன் சம்மதம் பெற்றல்லவோ பலரும் சேர்ந்து அவனை அநியாயமாகக் கொன்றார்கள். தங்களுக்கு கஷ்டம் நேரிட்டபோது எல்லோரும் தரும சாஸ்திரம் எடுத்து ஓதுவார்கள். மடுவைவிட்டு வெளியே வந்து கவசம் தரித்துக்கொள். எங்களுக்குள் யாரையேனும் ஒருவனைத் தேர்ந்து அவனுடன் யுத்தம் செய் இறந்து சுவர்க்கம் செல் அல்லது வென்று அரசனாய் இருப்பாய் என்றான்.

அதன்மேல் பீமனுக்கும் துரியோதனனுக்கும் யுத்தம் நடந்தது. அவர்களுடைய இரு கதாயுதங்களும் ஒன்றையொன்று தாக்கிய போது நெருப்புப் பொறிகள் பறந்தன. வெகுநேரம் யுத்தம் நடந்தது.

பார்த்துக் கொண்டிருந்தவர்கள் அந்த இருவரில் யார் வெல்வார்கள் என்று பேசிக் கொண்டிருந்தார்கள். துரியோதனனுடைய தொடைகளைப் பிளந்து பீமன் தன் சபதத்தைப் பூர்த்தி செய்வான் என்று கண்ணன் கூறியது

பீமனுக்குக் கேட்டது. சிம்மம் பாய்வதுபோல் பீமன் துரியோதனன் மேல் பாய்ந்தான். பாய்ந்து கதையை ஓங்கித் துரியோதனனுடைய தொடையின்மேல் அடித்தான். துரியோதனன் வீழ்ந்தான். வீழ்ந்து கிடந்த துரியோதனனுடைய தலையை காலால் துவைத்து பீமன் கூத்தாடினான். இவ்வாறு ஆணவம் கொண்ட துரியோதனன் தொடையை பீமன் அழித்தது போல் தன்னை தாக்கிய புலியை யானை கோபமாக தாக்கி புலியை அழித்தது. இங்கு புலியாக துரியோதனனும் யானையாக வீமனையும் புலவர் உவமைப்படுத்தியுள்ள பாங்கு பாராட்டுவதற்குரியது.

கலித்தொகை 101 ஆவது பாடல் "மகாபாரதத்தில்"[17] வரும் கதையைத் தருகிறது. மருதத்திணையில் அமைந்த இப்பாடலைப் பாடியவர் மருதனிளநாகனார். இப்பாடல் தலைவன் ஏறுதழுவி தலைவியை மணந்து கொள்வான் எனத்தோழி கூறும்போது இக்கதைகள் உவமையாக பயன்படுத்தப்படுகிறது.

**பாஞ்சாலியின் சபதம்**

**"அம்சீர் அசைஇயல் கூந்தற்கை நீட்டியான்**
**நெஞ்சம் பிளந்து இட்டு நேரார் நடுவண், தன்**
**வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்....."** ***(கலித்.18–20)***

**"..........**
**ஆர் இருள் என்னான் அருங்கஞ்குல் வந்து, தன்**
**தாளின் கடந்து அட்டு, தந்தையைக் கொன்றானைத்**
**தோளின் திருகுவான் போன்ம்."** ***(கலித்.30–32)***

முதலாவதாகச் சொல்லப்பட்டது பாஞ்சாலியின் கூந்தலைத்தொட்ட துச்சாதனனைக் கொல்வேன் என்று வீமன் வஞ்சினம் கூறியதை "மகாபாரதம்"[17] கதை தெரிவிக்கிது.

தருமன் சூதாட்டத்தில் எல்லாவற்றையும்வைத்து சூதாடி இழந்தபின் இறுதியாக மனைவி பாஞ்சாலியையும் வைத்து சூதாடினான். அதிலும் தோல்வி அடைந்ததால் கௌரவர்கள் பாஞ்சாலியை அழைத்துவரக் கட்டளை இட்டனர்.

எஜமான் உத்தரவின்படி தேரோட்டி பிரதிகாமி பாஞ்சாலியிடம் சென்றான். அம்மணி துருபத புத்திரியே, தருமர் சூதாட்டம் என்னும் மயக்கத்தில் விழுந்து சிக்கிக் கொண்டு உன்னைத் துரியோதனனுக்கு இழந்துவிட்டார். திருதராஷ்டிரன் வீட்டில் வேலை செய்வதற்காக உன்னை அழைத்துப்போக வந்திருக்கிறேன். இது அவருடைய கட்டளை என்றான்.

பிரதிகாமி! என்ன சொல் சொன்னாய்? எந்த ராஜபுத்திரன் தன் மனைவியை ஆட்டத்தில் பந்தயம் வைப்பான். பந்தயம் வைக்க வேறு ஒரு பொருளும் இருக்கவில்லையா! என்றாள்.

ஆமாம் தாயே! வேறு ஒரு பொருள் இல்லாதபடியால் தான் உன்னை வைத்து ஆடினார் என்று தருமன் பொருளெல்லாம் இழந்ததும் தம்பிகளை இழந்ததும், பிறகு தன்னையும் மனைவியையும் பந்தயமாக வைத்ததும் ஆகிய விவரங்கள் முழுவதும் சொன்னான்.

அதற்கு பாஞ்சாலி சபையோர் முன் போய் சூதாடியவரை பார்த்து முதலில் உம்மை இழந்தீரா, மனைவியை இழந்தீரா கேள். விடை தெரிந்த பின் வருகிறேன் என்றாள். பிரதிகாமி அவ்வாறே போய்ச் சபையின்முன் தர்மபுத்திரனைப் பார்த்து பாஞ்சாலி சொன்னபடி கேட்டான்.

தருமர் உயிரிழந்த பிணம் போல் காணப்பட்டார். மறுமொழி சொல்லாமல் நின்றார்.

துரியோதனன் கோபங்கொண்டு, தம்பி துச்சாதனனைப் பார்த்து, இந்தத் தேரோட்டி பெரும்மடையன். பீமனைக் கண்டு பயப்படுகிறான். நீ போய் அவளை இழுத்துவா! என்று உத்தரவிட்டான்.

இதைக் கேட்டதும் துச்சாதனன் மகிழ்ச்சியடைந்து துரிதமாகவே சென்றான். பாஞ்சாலி இருக்குமிடம் செனறு, வா வீணில் தாமதம் செய்ய வேண்டாம். நீ ஜெயிக்கப்பட்டாய், வெட்கம் ஏன்? என்று சொன்னதோடு அவளைப் பிடித்து இழுக்கப்போனான்.

பாஞ்சாலி எழுந்து துயரம் தாங்க முடியாமல் கதறிக்கொண்டு, திருதராஷ்டிரனுடைய அந்தப்புரத்துக்குள் சென்றாள். துச்சாதனன் அவளைத் துரத்திக் கொண்டு போய் அவளை தலை மயிரைப் பிடித்திழுத்து அலங்கோலம் செய்து சபைக்கு அவளைப் பலாத்காரமாக இழுத்துக் கொண்டு வந்தான்.

சபையைச் சேர்ந்ததும், பாஞ்சாலி தன் கோபத்தை அடக்கிக் கொண்டு கூடியிருந்தவர்களைப் பார்த்து, கம்பீரமாகப் பேச ஆரம்பித்தாள்.

சூதில் கைதேர்ந்தவர்களும் அயோக்கியர்களும் ஒன்று சேர்ந்து மோசமாகச் சூழ்ச்சி செய்து, அரசனை ஏமாற்றி, என்னை பந்தயமாக வைக்கச் செய்வதை எவ்வாறு நீங்கள் ஒப்புக் கொண்டீர்கள்? சுதந்திரம் இழந்த ஒருவன் எப்படித் தன் மனைவியைப் பந்தயம் வைத்து இழக்க முடியும்! மனைவிகள், பெண்கள் மருமகளிர் படைத்த கௌரவ குலத்தோர் பலர் சபையில் இருக்கிறீர்கள் என் கேள்விக்குச் சமாதானம் சொல்லுங்கள் என்றாள்.

இவ்வாறு பாஞ்சாலி ஓர் அநாதைப் பெண் போல் சங்கடப் படுவதைப் பார்த்துக் கொண்டிருக்கப் பீமனுக்குப் பொறுக்க முடியவில்லை. தருமரே! சூதாட்டமே தொழிலாக வைத்திருக்கும் நீசர்களும் தங்களோடு வாழும் தாசிகளைக் கூடப் பந்தயம் வைக்கமாட்டார்கள். துருபத புத்திரியை இந்த அற்பர்கள் துன்பப்படுத்தும்படி செய்துவிட்டீர்கள். இந்த அக்கிரமத்தை நான் பொறுக்க முடியாது. இந்த மகாபாவத்திற்கு நீரே காரணமாவீர்! ஏ! தம்பி சகாதேவா நெருப்பு எடுத்துவா, எந்தக் கைகளைக் கொண்டு இந்தச் சூதாட்டம் இவர் ஆடினாரோ அந்தக் கைகளை நான் நெருப்பு வைத்துக் கொளுத்தப் போகிறேன் என்று கர்ஜித்தான்.

அருச்சுனன் பீமனைத் தடுத்தான். அப்பனே! இதற்கு முன் எப்போதும் நீ இவ்வாறு பேசினது கிடையாது. நம்முடைய பகைவர்களால் செய்யப்பட்ட இந்த சூழ்ச்சி நம்மைக்கூட பாவம் செய்யத் தூண்டுகிறது. நாம் அந்த வலையில் விழக்கூடாது. பகைவர்களின் எண்ணம் நிறைவேறிப்போகும். ஜாக்கிரதை! என்று மெதுவாகச் சொன்னான். பீமன் கோபத்தை அடக்கிக் கொண்டான். பின்பு பாண்டவர்கள் சார்பாக விகர்ணன் பேச கர்ணன் அதற்கு

எதிர்ப்பு தெரிவித்தான். அடிமைகளுக்கு மேல் ஆடை கூடாது கழற்றி எறியுங்கள் என்றான்.

பாண்டவர்கள், கர்ணன் சொன்ன குரூரப்பேச்சைக் கேட்டதும், தருமத்தின் சோதனை இறுதிவரையில் இருக்கும் போல், எதற்கும் தயார் என்று பேச்சின்றி உடனே தங்கள் அங்கவஸ்திரங்களை எடுத்துச் சபையில் வீசி எறிந்தார்கள்.

இதைக்கண்ட துச்சாதனன் பாஞ்சாலியிடம் சென்று அவள் ஆடையைப் பிடித்திழுக்க ஆரம்பித்தான். பாஞ்சாலி இறைவனை நோக்கி அபயக்குரல் எழுப்பி மயங்கி விழுந்தாள்.

அப்பொழுது ஒரு பெரிய ஆச்சர்யம் நடந்தது. துச்சாதனன் இழுக்க இழுக்க திரௌபதியின் ஆடைகள் புதிது புதிதாக உண்டாகி கொண்டு வந்தன. பெருங்குவியலாகத் திவ்ய ஆடைகள் சபையில் குவிந்தன.

துச்சாதனன் களைத்துப் போய்த் தரையில் உட்கார்ந்தான். இந்த ஆச்சரிய நிகழ்ச்சியைக் கண்டு சபை பயந்து நடுங்கியது. கோபத்தினால் உதடுகள் துடிக்க பீமன் எழுந்து பேராலியுடன் பயங்கரமான ஒரு உறுதிமொழி செய்தான்.

பாரத வம்சத்திற்குத் தகாத இந்தப்பாவி துச்சாதனனுடைய மார்பைக் கிழித்து, இவன் ரத்தத்தை நான் உறிஞ்சி குடித்துவிட்டுத் தான் என் முன்னோர்கள் இருக்கும் உலகத்திற்குப் போவேன்! இது சத்தியம் என்று பீமசேனன் கோர சபதம் செய்தான்.

இக்கதையைத் தோழி ஒரு இளைஞனைத் தன் கொம்பால் சாவக்குத்தி அவனுடலைக் குலைக்கின்ற எருதினது தோற்றத்திற்கு உவமையாக கூறும்போது கூறினாள்.

கலித்தொகையின் 103 ஆவது பாடல் சிவன், திருமால் குறித்த கதையைத் தருகிறது. சோழன் நல்லுருத்திரனால் பாடப்பெற்ற இம்முல்லைக்கலி பாடலில் ஆயர்கள் ஏறு தழுவிய அழகினைத்தோழி தலைவிக்கு கூறும்போது இக்கதைகள் உவமையாக சுட்டப்படுகின்றன.

**கூற்றுவனைக் காலால் உதைத்த சிவன்**

***ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடந்து இட்டு***

***சீற்றமோடு ஆர்உயிர் கொண்ட ஞான்று, இன்னல்கொல்***

***கூற்று என (கலித்.103:43–45)***

*தோழி ஏறு தழுவுவோரின் வீரத்தைச் சொல்லும் போது உவமையாக முதலில் சிவபெருமான் குறித்த தொன்மைக் கதையைக் கூறுகிறாள். அது சுவேதன் என்ற மறையோன் தன் வாழ்நாள் மிகக்குறைவே என்று அறிந்து ஈசன் அடி பற்றி சிவலிங்கம் ஒன்றைப் பிரதிஷ்டை செய்து பயபக்தியுடன் வழிபட்டு வந்தான். எந்த நேரமும் அவன் செயல் நினைப்பு அனைத்தும் ஈசனைப் பற்றியதாகவே இருந்தது.*

*அவன் ஆயுள் முடியும் நேரம் காலனே நேரில் வந்தான். காலனைக் கண்டு அவன் சிறிதும் அஞ்சவில்லை. மேலும் ஈசன் திருவடிகளைப் பற்றினார்க்கு யாராலும் எவ்விதமும் துன்பம் நேராது என்று காலனிடம் சொன்னான். உன்னால் எனக்கு என்ன பயம் என்றான்.*

*அதைக்கேட்ட காலன் கடுஞ்சினம் கொண்டு பாசக் கயிற்றை சுவேதன் மீது வீசினான். கயிறு இறுகத் தொடங்கியது. ஆனால் சுவேதன் என்னைக் காப்பது நீயே அல்லவா? என்று எண்ணியவாறு தான் பூசித்து வந்த லிங்கத்தைக் கட்டிப்பிடித்துக் கொண்டான்.*

*அடுத்த கணம் லிங்கத்திலிருந்து தோன்றிய பரமன் கோபத்துடன் காலனை எட்டி உதைத்தார். அவன் தன் வாகனத்திலிருந்து கீழே விழுந்து உயிர் நீத்தான்”*[18] *என்று இக்கதை ஈண்டு எடுத்துரைக்கப்பட்டுள்ளது.*

**கேசியை வதம் செய்த கண்ணன்**

***காயாம்பூங் கண்ணிப் பொதுவன்தகை கண்டை***

***மேவார் விடுத்தந்த கூந்தற்குதிரையை***

***வாய்பகுத்து இட்டு, புடைத்த ஞான்று, இன்னன்கொல்***

***மாயோன் என்று உட்கிற்று; (கலித்.103)***

அதைப்போலவே தோழி கண்ணன் குதிரை வடிவில் வந்து அரக்கரை அழித்த கதையைக் கூறுகிறாள். அக்கதையானது "பாகவதக் கதைகள்"[19] மூலம் விளக்கமாக கூறப்பட்டுள்ளது.

கம்சன், கண்ணனை வதஞ்செய்வதற்காக "கேசி" என்ற அசுரனைக் கோகுலத்துக்கு அனுப்பி வைத்தான். அவன் பெரியதொரு குதிரையின் வடிவத்துடன், தன் உருவத்தை மாற்றிக்கொண்டு கோகுலத்தை நோக்கி விரைந்து சென்றான்.

அந்தக் குதிரையின் கனைப்புகளைக் கேட்டு கோகுலமே நடுங்கியது. அதன் உயர்ந்த பருத்த உருவத்தையும், கண்களையும், வாயையும், கழுத்தையும், வேகத்தையும், கோபத்தையும் கண்ட கோகுல வாசிகள் மிகவும் பயந்து நடுங்கினார்கள். அந்தக் குதிரை, கண்ணனைக் கொல்வதற்காக அவரைத் தேடத் தொடங்கியது. கண்ணன் அவனைப் போருக்கு அழைத்தார். குதிரை வடிவுள்ள அந்த அசுரன், மிகவும் வேகமாகவும், கோபத்துடனும் பகவானை எதிர்த்துப் போர் செய்ய ஓடி வந்தான். பயங்கரமாகக் கனைத்துக் கொண்டு தன்னுடைய பின்னங்கால்களினால், பகவானைத் தனது பலங்கொண்ட மட்டும் எட்டியுதைத்தான். அந்த உதைகள் தன் மீது படாதவாறு கண்ணன் நகர்ந்து கொண்டு அந்தக் குதிரையின் பின்னங்கால்களைப் பிடித்து இழுத்துச் சுழற்றி சீறி வந்த பாம்பைக் கருடன் தூக்கியெறிவதைப் போல, அந்த அசுரனை நூறு நாண்களில் அம்புகளைப் பாய்ச்சி எய்யும் தூரத்திற்கு அப்பால் வீசியெறிந்தார்.

நெடுந்தூரம் போய் விழுந்த அந்த அசுரன் மீண்டும், மிக்க கோபத்துடன் பகவானைத் தாக்குவதற்கு தன் வாயைத் திறந்து கொண்டு ஓடிவந்தான்.

கண்ணன் தன் கையை நீட்டி, அந்தக் குதிரை அசுரனின் வாயினுள் நுழைந்தார். பழுக்கக் காய்ச்சிய இரும்புத் தடியை வாய்க்குள்ளாகத் திணித்ததைப் போல இருந்ததால் அந்த அசுரனின் பற்கள் அனைத்தும் நொறுங்கி விழுந்தன. அவன் மூச்சுத் திணறி அந்த இடத்திலேயே இறந்துவிட்டான். தேவர்கள் மலர்மாரி பொழிந்தார்கள்.

இக்கதைகளைத் தோழி தலைவனின் வீரச் சிறப்பை எடுத்துரைக்கும் விதமாக உவமையாக கூறியுள்ளாள்.

**மல்லரின் மறம் சாய்த்த மால்**

கலித்தொகையின் 134 ஆவது பாடல் "திருமால்" குறித்த கதையைத் தருகின்றது. நல்லந்துவனரால் பாடப்பெற்ற இந்நெய்தல் கலிப்பாடலில் தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவி மாலை நேர ஆற்றாமையைக் கூறும்போது இக்கதையை உவமையாகக் கூறுகிறாள்.

**"மல்லரை மறம் சாய்த்த மலர்தண்தார் அகலத் தோன்**
**ஒல்லாதார் உடன்றுஓட உருத்து உன் எறிதலின்**
**கொல்யானை அணிநுதல் அழுத்திய ஆழி போல்" (கலித்.134)**

கண்ணன் கம்சனால் ஏவப்பட்ட மல்லரை அழித்த கதை இங்கு கூறப்பட்டுள்ளது. கண்ணன் குறித்த இக்கதையை "பாகவதக்கதைகள்"[20] என்னும் நூல் எடுத்தியம்புகிறது.

மதுரை நகரத்து இராஜ வீதியில் பலராமனும் கிருஷ்ணனும் இணைந்து சென்றனர். அவர்கள் இருவரும் சேர்ந்து செல்வதைக் கண்ட மதுரை நகர மக்கள் அளவற்ற மகிழ்ச்சி கொண்டனர். அவர்களுடைய திருமுகங்களைக் கண்டு ஆனந்தப் பரவசமடைந்தனர்.

அவர்கள் இருவரும், காண்போர் உள்ளத்தை ஈர்க்கும் வகையில் வீதிகளில் நடந்து சென்றனர். அவ்வாறு அவர்கள் செல்லும்போது அரண்மனைத் துணிகளை வெளுத்து மூட்டை கட்டித் தூக்கிக் கொண்டு செல்லும் வண்ணான் எதிர்ப்பட்டான்.

கிருஷ்ணன் அவ்வண்ணானைக் கண்டதும் அவனை அருகில் அழைத்து, மூட்டையில் வைத்திருக்கும் துணிகளில் நல்லவையாக இரண்டு துணிகளைத் தங்களுக்குக் கொடுக்குமாறு கேட்டார்.

அவ்வண்ணான், அவர்கள் இருவரையும் இன்னார் என்று அறியாதவன். கம்சனுடைய அன்புக்குப் பாத்திரமானவன். அதனால் அகந்தையுடன் அவர்களை ஏசினான்.

வண்ணானுடைய வார்த்தைகளைக் கேட்டதும் கிருஷ்ணனுக்குத் தாங்க முடியாத கோபம் வந்துவிட்டது. அதனால் கிருஷ்ணன் உடனே ஒரு கையால் அவனுடைய துணி மூட்டையைப் பிடித்து இழுத்து, மற்றொரு கையில் அவனது கழுத்திலே ஓங்கி அடித்தார்.

வண்ணான் அந்த அடியைத் தாங்க முடியாதவனாகி, ஐயோ! என்று அலறிக் கொண்டு வீதி நடுவே விழுந்தான்.

பலராமனும் கிருஷ்ணனும் அந்த மூட்டையிலே இருந்த பட்டுப் பீதாம்பரங்கள் இரண்டை எடுத்து அணிந்து கொண்டு உற்சாகமாகப் புறப்பட்டனர்.

அவ்வாறு புறப்பட்டுச் சென்ற அவர்கள் நாள்தோறும் அரண்மனைக்கு மலர் கொண்டு செல்லும் பூக்காரனுடைய இல்லத்தை அடைந்தனர். அழகிய உருவத்தோடு சென்று நின்ற அவர்கள் இருவரையும் கண்ட பூக்காரன் வியப்படைந்தான். இவர்கள் யார், மனிதர்கள் அல்லர் தேவர்களோ என்று எண்ணி வியந்தான்.

அப்போது கிருஷ்ணன் எங்களுக்கு நல்ல மாலைகள் வேண்டும் என்று கூறினார். உடனே உள்ளே ஓடிச் சென்று மணம் வீசும் மாலைகளை எடுத்து வந்து கிருஷ்ணபகவானுடைய திருவடிகளில் வைத்து, இதோ எடுத்துக் கொள்ளுங்கள் என்று வணக்கத்துடன் கூறினான். மீண்டும் உள்ளே சென்று வேறு சில மாலைகளை எடுத்து வந்து, இவை மேலும் விசேசமானது, இவற்றையும் எடுத்துக் கொள்ளுங்கள் என்று கூறி வேண்டினான்.

கிருஷ்ணன் அவனை ஆசிர்வதித்து அங்கிருந்து புறப்பட்டார். அவர்கள் இருவரும் சென்று கொண்டிருக்கும் போது கூனி ஒருத்தி கையில் சந்தனக் கிண்ணத்துடன் வந்தாள். அவள் இளம் வயதினளாக இருந்த போதிலும் முதுகு கூனி இருந்ததால் அவளது அழகு விகாரப்பட்டிருந்தது. கிண்ணத்தில் இருந்த சந்தனத்தின மணம், அவள் நெடுந்தொலைவில் வந்து கொண்டிருக்கும் போதே காற்றில் பரவியது.

கிருஷ்ணன் அவளை நெருங்கி, பெண்ணே இந்த வாசனை மிகுந்த சந்தனத்தை யாருக்கு எடுத்துச் செல்கின்றாய் என்று கேட்டார்.

அவள், அதற்கு சுந்தரா நான் கம்சனுடைய அன்புக்குப் பாத்திரமானவள். என் பெயர் நைகவக்கிரை என்பது. நான் கரைத்துக் கொடுக்கும் சந்தனத்தையே கம்சன் விரும்புவான். நாள்தோறும் அவனுக்கு நான் தான் சந்தனம் அரைத்துக் கொண்டு போய் கொடுத்து வருவேன். இப்போது அரண்மனைக்குத் தான் சந்தனம் எடுத்துச் செல்கிறேன் என்று பதில் கூறினாள். கிருஷ்ணன் உடனே, பெண்ணே! இந்த வாசனை மிகுந்த சந்தனத்தை நாங்கள் விரும்புகிறோம். எங்களுக்குக் கொடு என்று கேட்டார்.

அவளும் எதுவும் பேசாது சந்தனக் கிண்ணத்தைக் கிருஷ்ணனுடைய கையிலே வைத்து எடுத்துக் கொள்ளுங்கள் என்று கூறினாள். கிருஷ்ணன் அந்தக் கிண்ணத்திலிருந்த வாரித் தம் மார்பிலும் கைகளிலும் பூசிக் கொண்டார். பிறகு தம் சகோதரனுக்கு எடுத்துக் கொடுத்தார். நைகவக்கிரை அக்காட்சியைக் கண்டு மகிழ்ந்த வண்ணம் நின்றாள்.

கிருஷ்ணன் அதன்பிறகு அவளை நெருங்கி அவளது மோவாய்க் கட்டையைப் பிடித்துக் கொண்டு, தம் பாதங்களால் அவளது பாதங்களை அழுத்தி மிதித்தவாறு நிமிர்த்தினார். அதேசமயம் அவளது கூன் முதுகு நிமிர்ந்துவிட்டது. அவளது தோற்றத்திலே இருந்த விகாரம் நீங்கிவிடவே மிகுந்த அழகுடன் காட்சியளித்தாள்.

அவ்வாறு காட்சியளித்த அவள் கிருஷ்ணனுடைய பாதங்களைத் தொட்டுத் தன் கண்களில் ஒற்றிக்கொண்டு, என் இல்லத்துக்கு வந்தருள வேண்டும் என்று வேண்டினாள்.

கிருஷ்ணன் அதைக் கேட்டதும் இப்போது நாங்கள் ஒரு முக்கிய காரியம் காரணமாகச் செல்வதால் இன்னொரு சமயம் வருகின்றோம் என்று சொல்லிவிட்டு அவ்விடத்திலிருந்து புறப்பட்டார். புறப்பட்டுச் சென்ற அவர்கள் இருவரும் பின்னர் ஒரு யாகசாலையை அடைந்தனர். அங்கே இருந்த

காவலரை அழைத்து யாகத்துக்கான வில் எங்கே இருக்கின்றது என்று கேட்டார்.

காவலரும் அந்த வில்லை அவர்களுக்குக் காட்டினர். கிருஷ்ணன் அந்த வில்லை நெருங்கினார். கையில் அந்த வில்லை எடுத்து வளைத்து நாண் ஏற்றினார். அந்த வில் பெரும் ஓசையுடன் முறிந்து இரு துண்டுகளாக விழுந்தது.

அப்பேரோசையைக் கேட்ட அளவில் காவலர்கள் ஓடி வந்து பலராமனையும், கிருஷ்ணனையும் அடிக்க முற்பட்டனர். அவர்கள் இருவரும் முறிந்த வில் துண்டுகளைக் கையில் எடுத்துக் கொண்டு, அக்காவலர்களை எதிர்த்துத் தாக்கினர். அதன்பிறகு அங்கிருந்த புறப்பட்டுச் சென்றனர்.

அவர்கள் இருவரும் செல்லும்போது கதிரவன் மறைந்துவிடவே, இரவு தங்கியிருந்து பொழுது விடிந்ததும் அரண்மனை சென்றடைந்தனர்.

அக்ரூரன் மூலம் பலராமனும், கிருஷ்ணனும் மதுரைக்கு வந்துவிட்டதை அறிந்ததும்கம்சன் பரபரப்படைநதான். அதற்குள் தனுர் யாகம் நடக்கும் யாக சாலையில் இருந்த வில்லை முறித்து, இருவரும் அந்த வில் துண்டுகளால் காவலர்களை அடித்துக் கொன்ற செய்தி வரவே அதைக் கேட்டதும் தாங்க முடியாத கோபம் கொண்டான்.

அவ்வாறு கோபம் கொண்ட கம்சன் உடனே சானுரரன், முஷ்டிகள் என்னும் இரு மல்லர்களையும் அழைத்தான். அம்மல்லர்களை நோக்கி, நாம் எதிர்பார்த்த இடைச்சிறுவர்கள் வந்துவிட்டார்கள். காலையில் அரண்மனைக்கு வருவார்கள். என் உயிரை வாங்கப் பிறந்திருக்கும் அவர்களிடம் கொஞ்சமும் இரக்கம் காட்ட வேண்டாம். அவர்கள் இருவரையும் எவ்வளவு விரைவில் கொல்ல முடியுமோ? அவ்வளவு விரைவில் கொன்று காரியத்தை முடித்து விடுங்கள். எனக்கு திருப்தி தரும் வகையில் நீங்கள் காரியத்தை முடித்துவிட்டால் உங்களுக்கு ஏராளமான பொன்னும் மணியும் வாரிக் கொடுப்பேன் என்று கூறினான்.

அவ்வாறு கூறிய கம்சன் அம்மல்லர்களை அனுப்பிவிட்டுப் பின்னர் யானைப் பாகனை அழைத்தான். யானைப் பாகனை நோக்கி, குவலயாபீடம் என்னும் நம் யானைக்கு மதத்தை உண்டாக்கி, நம் அரண்மனை வாயிலில் நிறுத்திவை. அவ்விடைச் சிறுவர்கள் வரும்போது அவர்கள் மீது ஏவி, அவர்களைக் கொல்லச் செய்து விடு! என்று கட்டளையிட்டான்.

கம்சன் கடந்து செல்லும் ஒவ்வொரு நிமிடமும் தன்னை மரணம் நெருங்கி வருகிறது என்பதை உணராமல், தன உயிரை வாங்க வந்திருக்கும் எதிரியினுடைய அழிவு நிச்சயம் என்று எண்ணி மகிழ்ந்தவாறு, பொழுது விடிவதை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்.

பொழுது விடிந்தது. அரண்மனையில் நடக்க இருக்கும் மற்போரைக் காண்பதற்காக மக்கள் வந்து கூடினார்கள். கம்சனும் சபை நடுவே உயர்ந்த ஆசனத்தில் வந்து அமர்ந்திருந்தான். கோகுலத்திலிருந்து வந்திருந்த நந்தகோபன் முதலியோர்களும் அச்சபையில் அமர்ந்திருந்தனர்.

அக்ரூரனும், வாசுதேவனும் தனித்து அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். மகனைக் காணவேண்டும் என்னும் ஆவலுடன் தேவகியும் வந்து பெண்களுடன் சேர்ந்து அமர்ந்திருந்தாள்.

சானூரனும், முஷ்டிகனும் தோள்களைத் தட்டிக் குதித்துக் கொண்டு ஆரவாரம் செய்து வந்தனர்.

கிருஷ்ணனும், பலராமனும் சிரித்துப் பேசிக் கொண்டே அரண்மனை வாயிலை அடைந்தனர். அப்போது யானைப்பாகன் ஏவிவிட, குவலாயாபீடம் என்னும் அந்த யானை, பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு அவர்களை நோக்கி வந்தது. அதைக்கண்ட பலராமன் ‘கிருஷ்ணா எதிரி நம் மீது யானையை ஏவிவிட்டிருக்கின்றான்’ என்று கூறினார்.

கிருஷ்ணனோ சிரித்துக் கொண்டே தம்மை நோக்கி வந்த யானையின் துதிக்கையைப் பிடித்து இழுத்து கரகரவென்று வீதியிலே சுற்றி வந்தார். அந்த யானையோ திமிறிக் கொண்டு அவர்மீது பாய்வதற்கு முயன்றது.

கிருஷ்ணன் அதன் கால்களுக்கிடையே புகுந்து சிறிது நேரம் விளையாட்டுக் காட்டிவிட்டு, அதன் தந்தங்களில் ஒன்றைப் பிடித்து ஒடித்து எடுத்து அதைக் கொண்டு யானைப் பாகனைத் தாக்கினார். அந்த அடியினால் யானைப் பாகனது தலை பல துகள்களாகச் சிதறியது. பலராமனோ மற்றொரு தந்தத்தை ஒடித்து எடுத்து, அதைக்கொண்டு யானைக்குக் காவலாக வந்த வீரர்களைத் தாக்கி விரட்டினார். அதன் பின்னர் தமது இடது காலால் யானையின் முகத்தில் ஓங்கி உதைத்தனர். அந்நிலையில் யானை கதறிக் கொண்டு வீதியிலே விழுந்து உயிரைவிட்டது.

கிருஷ்ணனும், பலராமனும் தம் உடலெங்கும் யானையின் மலசலமும், இரத்தமும் வாரி அடிக்கப்பட்டவர்களாகி, அந்தந்தங்களையே, ஆயுதமாக ஏந்திக் கொண்டு அரண்மனையினுள்ளே நுழைந்தனர்.

அவர்களிருவரையும் கண்டதுமே சபையில் இருந்தவர்கள் வியந்து ஆரவாரம் செய்தனர்.

சபையில் கூடியிருந்தவர், இதோ! இச்சிறுவன் தான் கிருஷ்ணன். பூதனையையும், அரிஷ்டன், தேனுகாசுரன், கேசி முதலிய அசுரர்களையும் கொன்றவன். கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தவன். இவனது முக விலாசத்தைப் பாருங்கள். ஒடுங்கிப்போன யாதவ குலத்தை ஒரு கோபாலன் தலையெடுக்கச் செய்வான் என்று சொன்னார்களே, அந்தக் கோபாலகிருஷ்ணன் இவன்தான் பலராமனைப் பாருங்கள், என்ன கம்பீரம், இவர்களைப் பெற்ற வாசுதேவனும் தேவகியும் பெரும் பாக்கியம் செய்தவர்கள் என்பதில் ஐயமில்லை என்று பலவாறு பேசிக்கொண்டனர்.

வாசுதேவன் தன்மைந்தனைக் கண்டு பரவசமடைந்த வண்ணம் அமர்ந்திருந்தான். தேவகியின் மார்பிலே பால் சுரந்தது. கிருஷ்ணனும், பலராமனும்தம் உடைகளை இறுக்கிக் கட்டிக்கொண்டு, பூமி அதிரும்படியாகக கர்சனை செய்தவாறு சபாமண்டபத்தின் நடுவே நுழைந்தனர்.

கம்சன் கைகாட்டவே, மல்லர்கள் இருவரும் அவர்களை நோக்கி வந்தனர். கிருஷ்ணன் சானூரனோடும், பலராமன் முஷ்டிகளோடும் மோதினர்.

ஒருவருக்கொருவர் அண்டம் அதிரும்படியாகச் சண்டை செய்தனர். நேரம் செல்லச்செல்ல சானூரன் வலிமை குறைந்து களைப்புற்றான்.

அதைக்கண்ட கம்சன் உடனே முகம் சிவக்க, மல்லர்களை உற்சாகப்படுத்தும் வாத்திய ஒலிகளை நிறுத்தச் செய்தான். அவ்வாத்திய ஒலிகளால் கிருஷ்ணன் வேகம் அடைகின்றான் என்று அவன் நினைத்தான் போலும்.

அப்போது தேவர்கள் வானிலே ஒன்றுகூடி கிருஷ்ணா, சானூரனை விரைவில் வதம் செய்வாயாக என்று வேண்டினர். அதைக்கண்ட தோசலகன் என்பவன் கோபாவேசத்துடன் அவர்கள் எதிரில் வந்து குதித்தான். கிருஷ்ணன் தம் இடக்கை முட்டியாலேயே அவனை அடித்துக் கொன்றார். சபையிலே பரபரப்பு அதிகரித்தது. எல்லோரும் கிருஷ்ணனையும் பலராமனையும் வியந்து பாராட்டினார்கள்.

கம்சனுக்கு ஆத்திரம் அளவு கடந்தது. உடனே காவலரை அழைத்து, இவ்விடைச் சிறுவர்களை இழுத்துச் சென்று விலங்கிடுங்கள், வாசுதேவனையும் சிறையில் அடையுங்கள். அவர்களுடைய மாடு கன்றுகளையும், மற்ற பொருள்களையும் பறித்துக் கொள்ளுங்கள் என்று கட்டளையிட்டான்.

அப்போது கிருஷ்ணன், ‘கலகல’ வென்று சிரித்த வண்ணம் படிகளில் தாவி ஏறி, கம்சனுடைய தலை மயிரைப் பிடித்து இழுத்துச் சபை நடுவே தள்ளினார். அவனுடைய கிரீடம் ஒருபுறம் உருண்டது. கிருஷ்ணன் அதன்பின்னர் அவன்மீது பாய்ந்து, அவனுடைய மார்பிலே குதித்து, கழுத்திலே கைவைத்துத் தலையைத் தரையிலே அழுத்தினார். கிருஷ்ணன் குதித்த வேகத்தில் கம்சனுடைய உயிர் நீங்கிவிட்டது. கிருஷ்ணன் அவனுடைய தலைமயிரைப் பிடித்து, உடலைச் சபாமண்டபம் முழுவதும் எல்லோரும் காணும்படி இழுத்து எறிந்தார்.

கம்சனுடைய தம்பியாகிய சுனாமா என்பவன், தன் அண்ணன் கொல்லப்பட்டதை கண்டதும் துள்ளிப் பாய்ந்து வந்தான். பலராமன் அவனைத் தடுத்து நிறுத்தி அவனுடன் விளையாடுவதுபோல விளையாடியே அவனைக் கொன்றார். கம்சனுடைய மரணத்தை எல்லோரும் வரவேற்றனர்.

கிருஷ்ணன், பலராமனும் தங்கள் பெற்றோராகிய வாசுதேவன், தேவகியிடம் சென்று அவர்களை வணங்கினர். வாசுதேவன் தன் மைந்தனை வாரியெடுத்து அணைத்து மகிழ்ந்தான்.

இக்கதையை புலவர் தலைவனை பிரிந்து வாடிய தலைவி மாலைப்பொழுதினைக் கண்டு வருந்தியபோது, மாலைப்பொழுது எவ்வாறு இருந்தது எனக் கூறும்போது உவமையாகக் கூறியுள்ளார்.

அதாவது அலர்ந்த தண்ணிய மாலையை அணிந்த திருமார்பை உடைய மாயோன் பகையாய மல்லர்களின் வலிமையை அழித்தான். பகைவர் ஒருசேர வந்து சினந்து போரிட்ட காலத்தே அவர் ஓடும்படியாக அவர் தம் கொல் யானையின் அழகிய மத்தகத்திலே ஆழ்த்திய சக்கரப்படைபோல, கதிரவன் தான் பரப்பிய ஒளிக்கற்றைகளைத் தன்னிடத்தே வாங்கிக்கொண்டு மேற்றிசை மலையை அடைந்து மறைந்தனன். கரிய பெரிய கடல் ஒலித்து, இராக்காலத்தைப் படைப்பது போன்றிருந்தது என்று புலவர் இக்கதையை உவமையாக பயன்படுத்தியுள்ள சிறப்பு போற்றக்குரியதாகும்.

கலித்தொகையின் 150வது பாடல் நெய்தல் திணையில் அமைந்தது, இப்பாடலில் சிவன் முப்புரம் எரித்த நிகழ்வும், கங்கையை தலையில் சூடிய நிகழ்வும் உவமையாக கூறப்பட்டுள்ளது.

பயன்படுத்திய விதம் : பொருள் ஈட்டுவான் தலைவன் பிரிந்துள்ளான். தலைவனை நினைந்து ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.

கதை அடிகள் : பிறங்குநீர் சடைக்கரந்தான் அணி அன்ன நின்நிறம்.

இப்பாடலில் சிவனார் திரிபுரம் எரித்த செய்தியும், கங்கையையும், பிறையையும் தலையில் சூடியுள்ள நிகழ்வும் சுட்டப்பட்டுள்ளது.

இவ்வாறு அகத்துறை சார்ந்த பாட ல்களாய் இருந்தாலும் புலவர்கள் தெய்வக் கதைகளையும், புராணச் செய்திகளையும் பாடல்களில் புகுத்தியிருப்பது புலவர்களின் புலமைத் திறத்தை நன்கு எடுத்தியம்புகிறது.

**புறநானூறு**

புறத்திணை பற்றிப் பேசும் நானூறு பாடல்களின் தொகுப்பு. புறம், புறப்பாட்டு, புறம்பு நானூறு எனவும் இது அழைக்கப்படுவதுண்டு. தமிழர் வரலாற்றுக் களஞ்சியமாக, பழந்தமிழ் வேந்தர்கள், குறுநில மன்னர்களின் வரலாற்றை அறிவிக்கும் ஆவணமாக விளங்குகிறது. *2, 13, 21, 37, 55, 74, 91, 95, 141, 150, 152, 162, 164, 181, 209, 212, 213, 220, 222* போன்ற பாடல்களில் கதைக் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

**பெருஞ்சோற்று உதியன்**

பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் புலவர் பாடாண்திணை, செவியறிவுறூஉ என்னும் துறையில் பாடியுள்ளார். இப்பாடலில் புலவர் பாரதப் போரில் மன்னன் படைகளுக்கு உணவு அளித்த கதையைக்கூறி மன்னனை சிறப்பித்துள்ளார்.

**அலங்கு உளைப்புரளி ஐவரோடு சினைஇ**
**நிலம் தலைக்கொண்ட பொலம்பூந்தும்பை**
**ஈர் ஐம்பின் மரும்பொருது, களத்துஒழிய**
**பெருஞ்சோற்று மிகுபதம்வரையாது கொடுத்தோய் (புறம்.2)**

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சேரநாட்டிலே சேரமன்னன் ஒருவன் சிறந்திருந்தான். அவனுடைய பெயர் உதியஞ்சேரல் என்றும், உதியஞ்சேரலன் என்றும் வழங்கி நின்றது. அம்மன்னன் பெரிய போர் மறவன், போர் மறவனாயினும் ஆருயிர்களிடத்தில் பேரருள் உடையவன்.

பல கலைகளையும் நிலையுறப் பயின்றவன். அம்மன்னன் முறையுடன் இறைபுரிந்து கொண்டிருந்தான்.

அப்பொழுது வடநாட்டிலே பாண்டவர்களும் துரியோதனன் முதலானவர்களும் ஆட்சி புரிந்து கொண்டிருந்தனர். பாண்டவர்கள் உடன் பிறந்தார்களாக இருந்தும் அவர்களிடத்திலே துரியோதனனுக்குப் பகைமைக் குணம் இயற்கையாகவே படிந்து நின்றது. அண்ணன் தம்பி தான் பிறவிப் பகையாளி என்பது அவனுடைய திண்ணமான எண்ணம். எத்தகைய காரணமும் இல்லாமலே அவன் பாண்டவர்களுக்குத் தீமையைப் புரிந்து கொண்டிருந்தனர். பெரியோர்கள் கூறிய அறிவுரை துரியோதனன் இடத்தில் பலன் அளிக்கவில்லை. பாண்டவர்கள் செய்யும் நன்மைகள் கூடத் துரியோதனனுக்குத் தீமையாகத் தெரிந்தது.

பாண்டவர்களையும் துரியோதனன் முதலானவர்களையும் தொலைவான இடங்களில் நெருங்கிய தொடர்பில்லாதபடி வைத்தாலாவது துரியோதனன் பகைமைக் குணத்தை மாற்றுகின்றானா என்று பார்த்தால் அதனாலும் பயனில்லை. நாளடைவில் துரியோதனனுக்கும் பாண்டவர்களுக்கும் போர் மூண்டுவிட்டது.

வடநாட்டிலே துரியோதனனுக்கும் பாண்டவர்களுக்கும் போர் மூண்டதை உதியஞ்சேரலன் உணர்ந்தான். உயிர்கள் பல வீணாக ஒழிந்து போகுமே என்று உள்ளம் இரங்கினான். விரைந்து வடநாட்டிற்குச் சென்றான். துரியோதனனைக் கண்டான். உயிர்கள் பல இறந்து போகும் போர் வேண்டா என்று உறுதியுரைகள் பல கூறினான். துரியோதனன் போரை நிறுத்திவிட விரும்பினாலும் அதற்குச் சகுனி இடம் கொடுக்கவில்லை.

போர் முறுகி எழுந்தது. மன்னர்களிற் பலர் துரியோதனனுக்குத் துணை சேர்ந்தனர். பலர் பாண்டவர்களுக்குத் துணை சேர்ந்தனர். சேரன் எந்தப் பக்கத்திலுஞ் சேர்ந்து போரில் ஈடுபடவில்லை. அவன் மிகுதியான உணவுப் பொருள்களைத் திரட்டிக் கொண்டு வடநாட்டிற்குச் சென்றான்.

இருபக்கத்துப் போர் மறவர்களுக்கும் உணவளித்தான். சேரன் உணவளித்த சீரிய செயலால் அவனுடைய பெயர், சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் என நீண்டு நின்றது.

இக்கதையை புலவர் மக்களுக்கு சேரனின் பெருமை தொன்மை வாய்ந்தது. அவன் நீர் போன்ற குளிர்ச்சி பொருந்திய அருள் தன்மை உடையவன் என்பதை உணர்த்தும் விதமாக எடுத்தாளப்பட்டுள்ளது.

**சேரனும் சோழனும்**

**இவன்யார்? என்குவை ஆயின், இவனே**

**..........................................................**

**விழுநீர் வேலி நாடு கிழவோனே (புறம்.13)**

இப்பாடல் பாடாண் திணையில் அமைந்தது. சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறை குறித்த கதையைக் கூறுகிறது.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்பவர் ஓர் புலவர். அரசர்கள் பலருக்கும் அவர் நண்பராக அமைந்து நின்றார். அவர் ஒரு நாள் சேர நாட்டிலுள்ள கருவூருக்குச் சென்றார். அப்பொழுது அந்நாட்டைச் சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறை என்னும் அரசன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன் அறிஞர் முடமோசியாருக்கு நண்பன். முடமோசியார் அம்மன்னனுடன் பன்னாள் தங்கியிருந்தார். அவ்வரசனுக்கு நகரின் புறத்திலே, ‘‘வேண்மாடம்’’ என்னும் மாளிகை ஒன்று அமைந்திருந்தது. ஒருநாள் புலவரும் அரசனும் வேண்மாட மாளிகையிலே அமர்ந்து அளவளாவிக் கொண்டிருந்தனர்.

அக்காலத்தில் சோழநாட்டு உறையூரிலே முடித்தலை கோப்பெரு நற்கிள்ளி என்னும் சோழ மன்னன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன் ஒரு நாள் யானையின் மேல் ஏறிச் சென்று கொண்டிருந்தான். அவன் யானை தீனியை நன்கு தின்று கொளுத்திருந்தது. அது மதம் பிடிக்கத்தக்க நிலையில் உள்ளதை பாகர்கள் உணர்ந்து அதற்கு வாழைத் தண்டைக் கொடுத்து அதன் ஆற்றலை அடக்க முற்பட்டனர் மதம் அடங்கவில்லை.

கோப்பெருநற்கிள்ளி யானையின்மேல் சென்று கொண்டிருக்கும் போதே அதற்கு மதம் பிடித்துவிட்டது. பாகர்கள் அதனை அடக்குவதற்கு மிகவும் முயன்றனர். அதனை விரைந்த செலவும் கட்டுக் கடங்காத செயலும் மட்டுப்படவில்லை. பாகர்கள் அங்குசத்தால் குத்திய குத்துக்கள் எல்லாம் வீணாகப் போய்விட்டன. அது சேர நாட்டிலே புகுந்துவிட்டது. யானை மீது வந்த சோழனுக்கும் வேண்மாடத்திற் புலவரோடு உரையாடிக் கொண்டிருந்த சேரனுக்கும் முன்னரே பகை. ஒருவரோடு ஒருவர் போர் செய்து தோற்கடிக்க வேண்டும் என்று காலம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மதம் பிடித்த யானையைச் சூழ்ந்து குத்துக்கோல்காரர்கள் பலர் யானையை அடக்க முயற்சி செய்து ஓடி வந்தார்கள். முடமோசியாரும் சேர மன்னனும் உரையாடிக் கொண்டிருந்த வேண் மாடத்திற்கு தெரியும்படியான தொலைவிலே யானை வந்துவிட்டது. சேரன் யானை மீதிருக்கும் சோழனையும், யானையைச் சூழ்ந்து ஓடி வந்து கொண்டிருக்கும் ஆட்களையும் பார்த்துவிட்டான். அரசர்கள், ஒருவர் நாட்டிலே மற்றொருவர் உடன்பாடு பெறாமல் நுழையமாட்டார்கள். தன் பகைவனாகிய சோழன் தன் நாட்டிலே தனக்குத் தெரிவிக்காமலே வருவதைக் கண்ட சேரனுக்கு அளவு கடந்த சினம் உண்டாகிவிட்டது.

சினத்தால் அறிவு மறைப்புரண்ட அரசனுக்கு யாதுந்தெரியவில்லை. அதைப்போல் உறவாடிக் கெடுப்பதற்காக இவ்வாறு வருகிறானா அல்லது வெளிப்படையாகவே போர் செய்வதற்கு வருகிறானா என்று எண்ணமிட்டான. அவனுக்கு யாதும் விளங்கவில்லை.

ஆகையால் சேரனுக்கு மிகுந்த அச்சம் உண்டாகிவிட்டது. அவன் தன்னுடன் இருந்த புலவரைப் பார்த்து மதயானை மீது வரும் சோழனை அவருக்குக் காட்டினான். அந்த யானை மீது வருபவன் யார்? அவன் என்னுடன் போர் புரிவதற்காக வருகின்றான் போலும். நீர் அறிவீரா? என்று கேட்டான்.

சோழ மன்னன் வந்து கொண்டிருக்கும் நிலைமை சினத்தால் மறைப்புண்ட சேரமன்னனுக்கு விளங்காமற் போனாலும் புலவருக்கு நன்கு விளங்கிவிட்டது. அப்புலவர் முடித்தலை கோப்பெருநற்கிள்ளிக்கும் நண்பர் தாம். யானை மதங்கொண்டு பாகர்க்கு அடங்காது வரும் நிலையை அவர் தமது நுண்ணுணர்வால் உணர்ந்து கொண்டார். நமக்கு நண்பர்களாகிய இவ்விருவர்க்குள்ளும் போர் மூண்டுவிடக் கூடாதே என்று எண்ணினார். பெரிதும் கலங்கினார். அவர் சேரனைப் பார்த்தார்.

புலித்தோற்கவசம் அணியப்பெற்றும், மூட்டுவாய் சிதையும்படி பகைவர்கள் எய்த அம்பு விளந்தமையான் விழுப்புண்பட்டும் உள்ள மார்பினை உடையவனாக் கூற்றம் போன்ற இந்த யானையின் மீது வரும் இவன் யார் என்று கேட்பாயானால், வயலில் மயில்கள் உதிர்த்த பீலியை அங்குள்ள உழவர்கள் நெல்லரிகளோடு திரட்டும் நீர்வளம் மிக்க சோழ நாட்டிற்கு உரியவன். இவ்வாறு வருகின்ற இவன் நின்னோடு போர் செய்தற்கு வருகின்றான் அல்லன. போர் செய்ய வருகின்றான் என நீ எண்ண வேண்டாம். இவன் தன் நாட்டு எல்லையில் யானையூர்ந்து வந்து கொண்டிருந்தான். அப்போது யானைக்கு மதம் பிடித்துவிட்டது. ஆகவே அது கடலின் கண்ணே விரைந்து செல்லும் மரக்கலம் போலவும், விண்மீனுக்கு நடுவே செல்லும் பாகர்க்கு அடங்காது இவ்வாறு வருகின்றது. இவ்வாறு வந்துவிட்ட அவன் எத்தகைய துன்பமும் இல்லாமல் தன்னுடைய நாட்டை அடைய வேண்டும் என்று கூறினார். புலவர் உரையால் அரசன் சினந்தணிந்தான். போருக்குப் புறப்பட எண்ணிய மன்னன் அந்த எண்ணத்தை ஒழித்தான். போர் நிகழாமல் காத்த புலவரின் மாண்பு இக்கதையின் மூலம் உணர்த்தப்படுகிறது.

**அஞ்சா நெஞ்சன் வேங்கை மார்பன்**

**புலவரை இறந்த புகழ்கால் தோன்றல்**
**புகழொடு விளங்கிப் பூக்க நனவேலே (புறம்.21)**

புறநானூற்றின் 21வது பாடல் வாகைத் திணையில் அமைந்தது, குறுநில மன்னனான வேங்கை மார்பன் குறித்த கதையைத் தருகிறது.

வேங்கை மார்பன் என்பவன் ஒரு குறுநில மன்னன். பாண்டிநாட்டில் உள்ள கானப்பேர் என்னும் நகரிலே அவன் அந்நாளில் அரசு செலுத்திக் கொண்டிருந்தான். அந்நகர் அந்நாளில் நிலவரண், நீர்வரண், காட்டரண் முதலிய அரண்களால் பாதுகாப்புப் பெற்றிருந்தது. அந்நகரின் அரணை அந்நாள் மன்னர்கள் அனைவரும் கண்டு, வியப்பும், திகைப்பும் அடைந்திருந்தனர். வேங்கை மார்பன் சிறந்த கல்வியறிவில்லாதவன், எனினும் எதற்கும் அஞ்சாதவன், எக்காரணத்தை முன்னிட்டும் தம் கொள்கையைச் சிறிதும் விட்டுக் கொடுக்காதவன்.

அக்காலத்தில் மதுரையை உக்கிரப் பெருவழுதி என்னும் பாண்டிய மன்னன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். வேங்கை மார்பன் உக்கிரப் பெருவழுதிக்கடங்கிய சிற்றரசனாக திறை செலுத்திக் கொண்டிருந்தான். முறைப்படி திறைப்பொருளைச் செலுத்தாமல் மாறனொடு மாறுபட்டு நின்றான். வேங்கை மார்பன் வேறுபட்டு நிற்றலை உக்கிரப் பெருவழுதி உணர்ந்தான். இவனது ஆணவத்தை அடக்க வேண்டும் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். உடனே போருக்கு எழுந்துவிடவில்லை. தூதுவன் ஒருவனை வேங்கை மார்பன் பால் அனுப்பினான். ஒழுங்கு முறைப்படி நடந்து கொள்ளுமாறு உணர்த்தினான்.

வேங்கை மார்பன் அதனைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. மாரிவெண்கோ என்னும் சேரமன்னனும், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்னும் சோழ மன்னனும் உக்கிர பெருவழுதிக்கு நண்பர்கள். வேங்கை மார்பன் ஆணவத்தைத் தொலைத்துவிட வேண்டும் என்று அவ்விருவரும் உக்கிரபெருவழுதியை ஊக்கிவிட்டுக் கொண்டிருந்தனர். மூவர் பகைத்து நிற்றலை உணர்ந்தும் வேங்கை மார்பன் பணிந்துவிடவில்லை. அவன் பெருமிதத்துடன் தலையெடுத்து நின்றான்.

உக்கிரப்பெருவழுதி தருக்கித் துணைவேந்தர்களுடன் போருக்கு எழுந்தான். மூவேந்தரின் படை பலத்தின் முன் வேங்கை மார்பன் பலம் இழந்து, படை இழந்து ஓட்டாண்டியானான்.

இக்கதையை புலவர் பாண்டிய மன்னனின் வீரச் சிறப்பை மக்கள் உணரும் விதமாக எடுத்து இயம்பியுள்ளார்.

### புறாவின் துயர் தீர்த்தவன்

புறநானூறறின் 37வது பாடலில் மாறோக்கத்து நப்பசலையார் வாகைத்திணை, அரசவாகைத் துறையில் சிபி சக்கரவர்த்தி புறாவிற்காக தம் தசையை அறிந்து கொடுத்த கதையை கூறியுள்ளார்.

**புள் உறுபுன்கண் தீர்த்த, வெள்வேல்**
**சினம் கெழுதானை, செம்பியன் மருக (புறம்.37)**

"கழுகிடமிருந்து புறா ஒன்று தப்பி, சிபி என்னும் மன்னனிடம் அடைக்கலம் புகுந்து. அதனைத் தொடர்ந்து வந்த பருந்து, புறாவை வேண்ட, அதன் எடைக்குத்தகத் தன் தசையை அரிந்துதர முயன்றான். இறுதியில் புறாவின் எடையுடன் நேர் நில்லாததால் தானே துலாத்தட்டில் ஏறினான். இத்தகைய அருள் உள்ளமுடையவன் சிபிச்சக்கரவர்த்தி என்னும் சோழமன்னன்."[21]

மன்னர்கள் மக்களை மட்டுமல்ல தம்மை நாடி வரும் அனைவருக்கும் அடைக்கலம் அளித்து அவர்களுக்கு ஆபத்து வரும் நேரத்தில் உயிரை கொடுக்க முன் வருவர் என்பது உணர்த்தப்பட்டது.

### முப்புரம் எரித்தவன்

புறநானூற்றின் 55 பாடலை பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை மதுரை மருதன் இளநாகனார் பாடாண்திணை, செவியறிவுறூஉ துறையில் அமைத்துப் பாடியுள்ளார். மன்னனின் பெருமையை மக்களுக்கு உணர்த்த சிவன் திரிபுரம் எரித்த கதையை உவமையாக்கியுள்ளார்.

**ஓங்கு மலைப்பெருவில் பாம்பு ஞாண் கொளீஇ**
**ஒருகணை கொண்டுமூ எயில் உடற்றி**

.....................................................

**பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல**

**வேந்து மேம்பட்ட பூந்தார்மாற (புறம்.55)**

சிவபெருமானால் முப்புரம் எரித்த கதையை "சிவபுராணம்"[22] விரிவாகக் கூறுகிறது.

தாரகாசுரன் முருகனால் கொல்லப்பட்ட பிறகு அவனது புதல்வர்களான வித்யுன்மாலி, தாரகாட்சன் கமலாட்சன் ஆகிய மூவரும் கடுந்தவம் புரியலாயினர். ஒற்றைக் காலில் நின்றும், மற்றும் பல கடினமான தவங்களையும் இயற்றி வந்தனர். தாரகனின் புதல்வர்கள் அவர்கள் எனினும் அசுரவழி வந்தவர்களெனினும் அவர்கள் செய்து வந்த தவம் பெரும் மகிமை வாய்ந்ததால், அந்த தவநெருப்பால் உலகம் அழியக்கூடும் என்பதால் அவர்கள் முன் பிரம்மாவே தோன்றினார்.

தாங்கள் எந்த உயிராலும் கொல்லப்படக்கூடாது என்று கேட்க பிரம்மன் அதை அளிக்க முடியாதெனக்கூற, அவர்கள் நாங்கள் எண்ணிய இடம் செல்ல பொன், வெள்ளி, இரும்பாலான மூன்று பறக்கும் பட்டணங்களும் அவை ஆயிரம் ஆண்டுகளுக்கு சேர வேண்டும். அவ்வாறு ஒன்று சேரும் பொழுது ஒரே அம்பால் முப்புரங்களையும் அழிக்க வல்லவன் ஒருவனால் மட்டும் மடிய வேண்டும் என்று வரம் கேட்டுப் பெற்றனர்.

அதன்படி பிரம்மா மயனிடம்கூற அவன் பொன்னகரைத் தாரகாட்சனனுக்கும், வெள்ளி நகரைக் கமலாட்னனுக்கும், இரும்பு நகரை வித்யுன் மாலினிக்கும் அளித்தான். இவற்றுள் பொன்நகரைச் சொர்க்கத்திலும், இரசதபுரியை மத்யத்திலும், ஆகாயபுரியைப் பூமியிலும் சஞ்சரிக்கத்தக்க இயந்திர சூத்திரம் நிர்மாணிக்க அவர்கள் தத்தம் பறக்கும் திரிபுரங்களுடன் சேர்ந்தார்கள்.

திரிபுரர்கள் அசுரர்கள் எனினும் வேதசாஸ்திரங்கள் முப்புரங்களிலும் பூரணமாக விளங்கின. அவர்கள் நினைத்த போதெல்லாம் புரங்கள்

இடப்பெயர்ச்சி ஆகும் போது கோடிக்கணக்கான உயிரினங்கள் மாண்டு மடிந்தன. இதனால் தாங்கொணாத் துயரடைந்த தேவர்களும் முனிவர்களும், பிரம்மாவை அணுகி தமது கவலைகளைக் கூறி முறையிட்டனர்.

அப்போது பிரம்மன் தன்னால் வரமளிக்கப்பட்ட அரக்கர்களைத் தானே அழிப்பது முறையல்ல என்று கூறி, சிவன் உதவியை நாடுமாறு ஆலோசனை கூறினார். சிவபெருமான் அவர்கள் அசுரர்கள் ஆயினும் புண்ணிய சீலர்கள் அதனால் அவர்களைச் சங்காரம் செய்ய இயலாது என்று கூறி அவர்களைத் திருமாலைக் கண்டு தான் கூறியவாறு சொல்லி முறையிடச் சொன்னார்.

அவர்கள் முறையீட்டைக் கேட்ட திருமால் சிவபெருமானைத் தொழுது யாகங்கள் செய்ததால் மந்திர மகிமையினாலேயே அவர்கள் இறப்பர் என்று கூறியதுடன், சிவமூல மந்திரத்தை உபதேசித்து இலட்சலிங்க அர்ச்சனை செய்வித்தார். திரிபுராதிகள் சிவபூஜை ஒழுக்க நெறியை மாயாசக்தியால் தான் எதுவும் செய்யமுடியும். அதற்கான உபாயம் தேட திருமால் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

திருமால் தன்னிடமிருந்து ஒரு மாய புருஷனை உருவாக்கி, அவனுக்குக் கீழ்கண்டவாறு கட்டளையிட்டார். நீ பல சக்திகளையும் மாயங்களையும் என்னிடமே பெற்றுத் திரிபுரம் சென்று உன் மாயாசக்தியால் அந்த மூன்று அசுரர்களையும் மயக்கி, அவர்களுக்கு நான் கூறிய சாஸ்திரங்களைக் கற்பித்து, அவர்களுடைய ஆசாரங்கள், நெறிகளை உன் வலிமையால் அகற்றி திரிபுரம் நாசமாகும்படி செய்ய வேண்டும் என்று கூறினார்.

‘மேலும், அவர்கள் உன் வயப்பட்டு உனது சாஸ்திரங்களைப் மோகித்த பிறகு, உனது சீடர்களும் மோகித்த பிறகு அவற்றைப் பரப்பிவிடு’ என்றும் கூறினர். மாயாரூபி பூஜ்யன், ருஷி, பதி, ஆசாரியன் என்ற சீடர்களைப் படைத்து, வித்தைகளைக் கற்பித்து பண்டிதர்களாக்கி திருமாலிடம் அழைத்துச் செல்ல அவர்களை ஆசீர்வதித்து மாயரூபனிடம் ஒப்படைத்து ஆசிர்வதிக்க அவர்கள் ஐவரும் திரிபுரத்திற்கு அருகில் உள்ள வனத்தை அடைந்து மயக்கும் மாயவித்தைகளைப் புரியலாயினர்.

இவர்கள் மதத்தில் பல அசுரர்கள் சேர்ந்தனர். ஐவர்களுடன் சேர்ந்து கொள்ளுமாறு நாரதரையும் அனுப்பி வைத்தார். திருமால் அறுவரும் அசுரர்கள் பட்டணத்தில் புகுந்தனர்.

நாரதர் வித்யுன்மாலியைக் கண்டு மாயரூபியை அறிமுகப்படுத்திவிட நாரதரின் கூற்றைக் கேட்ட அவன் தானும் உபதேசம் பெற விரும்பினான். உடனே மாயரூபி அவனுக்கு சில மந்திரங்கள் உபதேசித்து அவன் நகர மக்களையும் தீட்சை செய்து அம்மதத்தைப் பின்பற்ற ஆணையிட்டான்.

மாயரூபி திரிபுரம் முழுவதும் ஒழுக்க நெறிகளை மீறி நடக்கச் செய்தான். திருமாலின் ஆணைப்படி அங்கு மூதேவி குடியேறினாள். பிரும்மாவின் ஆணைப்படி தனலட்சுமியும் நீங்கினாள். மாயரூபியும், நாரதரும் அந்நகர மக்களை மாயையால் மயக்கினர்.

திருமால் சிவபெருமானிடம் நிகழ்ந்தவற்றை கூறி, திரிபுரர்கள் தவநெறியை விட்டுவிட்டதையும் கூறிட, சிவபெருமான் அதர்ம வழிக்கு மாறின அசுரர்களின் திரிபரங்களை இனி சங்காரம் செய்வதாகக்கூறி மறைந்தார்.

திருமால் தேவர்களைச் சிவபூஜை செய்யுமாறு கூறி, அதற்கான விதிமுறைகளையும் விளக்கிக் கூறினர். தேவர்களின் முன் சிவபெருமான் தோன்றி திரிபுரத்தை அழிப்பதாகக்கூறி, விசுவகர்மனை அழைத்து தேர், வில், பாணங்களைத் தயாரிக்குமாறு கூறினார்.

சிவபெருமான், பார்வதி இருவரும் தேரில் ஏறி புறப்பட நாராயணரும் அதனைச் சுமக்கிறார். இமயவர்களும் திரிபுரம் நோக்கிச் சென்றனர். சிவபெருமான் வில்லை வளைத்தார். திரிபுரங்கள் ஒன்று சேர்ந்தன. தேவர்களும் சிவபெருமானைத் துதித்தனர். அதுவே தக்க தருணம் என்று பிரம்மா, சிவபெருமானிடம் கூறி பாணத்தை எய்யும்படி பிரார்த்தித்தார்.

சிவபெருமான், பார்வதி இருவரும் தேரில் ஏறி புறப்பட நாராயணரும் அதனைச் சுமக்கிறார். இமயவர்களும் திரிபுரம் நோக்கிச்சென்றனர். சிவபெருமான் வில்லை வளைத்தார். திரிபுரங்கள் ஒன்று

சேர்ந்தன. தேவர்களும் சிவபெருமானைத் துதித்தனர். அதுவே தக்க தருணம் என்று பிரம்மா, சிவபெருமானிடம் கூறி பாணத்தை எய்யும்படி பிரார்த்தித்தார்.

சிவபெருமான் அஸ்திரத்தைவிட அது திரிபுரம் அடைந்து நாசம் செய்துவிட்டு உடனே சிவனாரிடமே வந்து சேர்ந்துவிட்டது.

இக்கதையை புலவர் மன்னன் பெருமையை உணர்த்தும் விதமாக கூறியுள்ளார். முக்கண்ணானின் மூன்று கண்களைப் போன்று தமிழ் மூவேந்தரும் விளங்கினர். அவர் தம்முன் பாண்டியன் பிறை பொருந்திய நெற்றியடத்து விளங்கிய கண் போன்றவன் என்றதால் அவர் உயர்வு விளங்கும். மேலும் இக்கதைக்குறிப்பு பத்துப்பாட்டில் ஒன்றான திருமுரகாற்றுப்படையில் "உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண் மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்" (திருமுருகு.154–155) என்று இடம்பெற்றுள்ளது. (திருமுருகு.154–155)

**உயிரினும் மானமே பெரிது**

**குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பிலும்**

**........................................................**

**ஈன்மரோ, இவ் உலகத்தானே? (புறம்.74)**

அறிவுடையார் ஆய்ந்து கூறும் உலக இயல்பு கூறுதலாகிய பொதுவியல் துறை இலக்கணத்தின்படி அரசர்க்கு மானத்தினும் சிறந்த அறமும் பொருளும் இன்பமும் இல்லை என்று வலியுறுத்தும் முறையில் சேரமான் கணைக்கால் இரும்பொறை பாடிய இப்பாடல் முதுமொழிக்காஞ்சி என்னும் துறையில் அமைந்தது.

சேரமான் கணைக்கால் இரும்பொறை என்பவன் புகழ்பெற்ற சேரமன்னன். தொண்டி, மகோதை என்னும் இரு பெரு நகரங்களும் இவனுக்குத் தலைநகரங்களாக அமைந்திருந்தன. இவன் சிறந்த பேரறிவு படைத்தவன். சிறந்த வண்மையும் உயர்ந்த உண்மையும் அமைந்தவன். தன்னோடு பகைத்து போர்

புரிந்த 'மூவன்' என்பவனைக் கொன்று அவன் வாயில் இருந்த பல்லைப் பிடுங்கிக் கோட்டை வாயிற் கதவிற் பதித்து வைத்தான்.

சோழன் செங்கணானுக்கும், இவருக்கும் பெரும்பகை உண்டாயிற்று. இருவரும் பெரும் படையுடன் "கழுமலம்" என்னும் இடத்தில் போர் புரிந்தனர். இவன் பாசறைக் கண் இருக்கும் போது மதம் கொண்ட யானையை அடக்கி பலரையும் காப்பாற்றினார்.

இரு திறத்தினருக்கும் பெரும்போர் நிகழ்ந்தது. முடிவிற் சேரமான் படை தோற்றோடியது. சேரமான் கணைக்காலை சோழ வீரர்கள் சிறைப்பிடித்து கடுங்காவலில் அடைத்தனர். பெரும்புகளுடன் விளங்கியிருந்த நமக்கு இக்கதி ஏற்பட்டதே என்று சேரன் பெரிதும் வருந்தினான். உணவு முதலியவற்றை நன்றாக உண்ணவில்லை. நாள்கள் பல கழிந்தன. ஒரு நாள் சேரமானுக்கு நீர் வேட்கை மிகுதியாக இருந்தது. தன்னைக் காத்திருக்கும் காவலனைப் பார்த்துச் சிறிது தண்ணீர் கொண்டு வா என்று கட்டளையிட்டான். தன்னைப் போன்ற மற்றோர் காவலாளனுடன் உரையாடிக் கொண்டிருந்த காவலாளன் சேரமான் கட்டளையை உடனே நிறைவேற்றவில்லை. உரையாடலை விருப்பம் போல் முடித்துக் கொண்டு மெதுவாகச் சென்று தண்ணீர் கொண்டு வந்தான். கொண்டு வந்த தண்ணீரைப் பணிவுடன் கொடுக்கவில்லை. வலக்கையில் வேறெதையோ வைத்துக் கொண்டிருந்த அக்காவலன் தண்ணீர் கலயத்தை இடது கையில் வைத்தபடியே 'இந்தா தண்ணீர்' என்று அதிகாரத்துடன் அரசன் முன் நீட்டினான். வலையிடைப்பட்ட மடங்கலைப் போன்று சிறையிடைப்பட்டுச் சீரழிந்து நின்ற வேந்தன். அவாவுடன் அத்தண்ணீரை வாங்கினான். ஆயினும் அவனுடைய மனம் உடனே மாறிவிட்டது. காவலாளன் தன்னை அவமதித்து மெதுவாகச் சென்று நீர் கொணர்ந்து இடக்கையால் கொடுத்தானே! இதனை உண்டும் உயிர் வாழவேண்டுமோ என்று அவன் எண்ணினான்.

அரச குடும்பத்தில் பிள்ளை இறந்து பிறந்தாலும் தசைப் பிண்டமாகப் பிறந்தாலும் ஆள் என்று கருதி வாளால் வெட்டி புதைப்பர். அவ்வாறு பகைவர்

வாளாற்படாது சங்கிலியாலே பிணிக்கப்பட்ட நாய் போலப் பிணித்துத் துன்பத்தைச் செய்து வைத்த கேளல்லாத கேளிருடைய உதவியினாலே வந்த தண்ணீரை இரந்துண்ணக் கடவேம் அல்ல என்னும் மனவலி இல்லாமல் வயிற்றுத் தீயை ஆற்ற வேண்டித் தாமே இரந்துண்ணும் அளவினையுடையாரை இவ்வுலகத்தில் உள்ள அரசர்கள் பெறுவார்களோ? என்று வருந்திப் பாடி, தண்ணீரை தூக்கி வீசி உண்ணா நோன்பிருந்து உயிரைவிட்டார்.

மன்னனாக, மக்களாக இருந்தாலும் மானம் மிக அவசியம் என்பது இக்கதை நமக்கு உணர்த்தும் பாடம் ஆகும். "மயிர் நீப்பின் வாழா கவரிமான் அன்ன" என்பது போல் மானம் போனால் உயிர் வாழ்வதே வீண் என மக்கள் ஒவ்வொருவரும் வாழ வேண்டும்.

**அரிய நெல்லியை ஔவைக்கு ஈந்தோன்**

அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் பாடாண் திணை வாழ்த்தியல் துறையில் அமைத்துப் பாடுகிறார். யாருக்கும் எளிதில் கிடைக்காத அமிழ்தத்தை ஒத்த நெல்லிக்கனியை ஔவைக்கு கொடுத்த வள்ளல் தன்மையை கூறுகிறார்.

**பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட**
**சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது**
**ஆதல் நின் அகத்து அடக்கி,**
**சாதல் நீங்க, எமக்கு ஈத்தனையே (புறம்.91)**

"எழினி என்றும், அஞ்சி என்றும் வழங்கப்பட்டச் சங்க காலத்தில் வாழ்ந்த வள்ளலும் ஒரு வீரனுமாவான். கடையேழு வள்ளல்களுள் ஒருவன். இவன் மழவர்கள் என்னும் வீரர்களுக்குத் தலைவனாக விளங்கினான். அதியர்குடியில் தோன்றிச் சிறந்தவனாக இவன் விளங்கியமையால் அதியர்கோமான் எனப்பட்டான்.

இவன் சேரர் குடியினைச் சார்நதவனாதலின் பனந்தோட்டினாகி மாலையினை அணிவான். குதிரைமலை இவனுக்குரியதாகும்."[23]

உலகத்திலே உடல் எடுத்தவர்கள் எல்லோரும் நீண்ட காலத்திற்கு உயிர் வாழ்ந்திருக்க விரும்புவார்கள். உலகத்தில் நீண்ட காலம் வாழ்ந்திருக்க வேண்டும் என்னும் எண்ணம் அதிகமானுக்கு உண்டாயிற்று. தன் அவைக்கு வருவோர் போவோர் எல்லோரிடத்திலும் நீண்ட காலம் உயிர் வாழ்ந்திருத்தற்கு நல்ல மருந்து யாது? என்று உசாவிக் கொண்டே இருந்தான்.

ஒருநாள் அதிகமான் அவைக்கு அருந்தவ முனிவர் ஒருவர் வந்தார். அவர் பெருந்தவம் புரிந்து திருந்திய சித்திகள் பல கைவரப்பெற்றவர். அதிகமான் அம்முனிவரை மிகுதியாகப் போற்றி வழிபாடுகள் செய்தான். பிறகு தன்னுடைய எண்ணத்தை அம்முனிவருக்குத் தெரியப்படுத்தினான். உலகிற்கு உதவியாக இருக்கும் அதியமான் நீண்ட காலம் உயிர் வாழ்ந்திருத்தல் தகுதியானது தான் என்று அம்முனிவர் தம்முடைய உள்ளத்தில் எண்ணினார். பிறகு அவர் அதியமானைப் பார்த்து, உன் போன்ற அரசர்கள் உலகில் நீண்டகாலம் உயிருடன் இருக்க வேண்டியது இன்றியமையாதது தான். அதற்கு ஒரு சிறந்த நன்மருந்து இருக்கின்றது. அதனைக் கூறுகிறேன் கருத்துடன் கேள் என்று கூறலானார்.

உன்னுடைய குதிரைமலையின் மேல் ஒரு பெரிய பிளவு இருக்கின்றது.அப்பிளவின் கண் நெல்லிமரம் ஒன்று உள்ளது. அது பல ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் காய்க்கும். காய்களும் ஒன்று அல்லது இரண்டு தான் உண்டாகும். அவை பழுப்பதற்கும் நீண்டநாள் செல்லும். அம்மரத்தினிடத்தில் எவரும் எளிதிற்போக முடியாது. பெருமுயற்சி செய்து தான் அக்கனியை அடைதல் கூடும். அக்கனியைப் பெறுதற்குச் செய்யும் முயற்சியில் உயிரை இழத்தலும் கூடும். அக்கனியை உண்போர் உடல் மிகுந்த திண்மை பெற்று விளங்கும். எத்தகைய நோய்களும் அவ்வுடலைச் சேரா. உடல் நீண்ட நாள் உலகில் வாழும். நீ தகுந்தபடி முயற்சி செய்து அக்கனிகளை உண்பாயாக என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டார்.

அதியமான் அன்று முதல் அப்பிளவு இருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதற்குப் பெருமுயற்சி செய்தான். மரஞ்செடி கொடிகளும் முட்புதர்களும் நிறைந்து எவரும் அந்நாள் வரை செல்லாத ஓரிடத்தில் பிளவு இருப்பதைக்

கண்டு பிடித்தான். பிளவில் தவறி வீழ்ந்தால் வீழ்பவனுடைய உடல் ஊன் பிண்டமாகக் கீழ் உலகத்தை அடையும். உயிரோ விண்ணுலகத்தை அடைந்துவிடும். அஞ்சத்தக்க அத்தகைய இடத்திலே பிளவின் சரிவிலே கரு நெல்லிமரம் இருந்தது. முட்புதர் முதலியவற்றை வெட்டிக் களைந்து பிளவுக்குச் செல்லுவதற்கு முதலில் வழி உண்டாக்கினான். பிளவின் அண்மையிற் சென்று கரு நெல்லி மரத்தைப் பார்த்தவர்கள் அஞ்சி நடுங்கினார்கள்.

எவரும் நெல்லி மரத்திற்குச் செல்ல துணிந்தனர் அல்லர். இறுதியில் அதியமான் தானே பிளவில் இறங்கி நெல்லி மரத்தைப் பார்ப்பதற்குத் துணிந்தான். மிகுந்த விழிப்புடன் தகுந்த ஏற்பாடுகள் செய்து கரு நெல்லி மரத்தை அடைந்தான். அதன்மீது ஏறினான். எங்கயாவது பழம் அல்லது காய் இருக்கிறதா என்று தேடிப்பார்த்தான். ஒன்றும் காணப்படவில்லை. நமது முயற்சிகள் யாவும் வீணாகிவிட்டனவே என்னும் வருத்தத்துடன் திரும்ப எண்ணினான். மேலும் ஒருமுறை மரத்திலே தேடிப்பார்த்தான். தேடிப்பார்த்தவன் உள்ளம் பேரின்பத்தை அடைந்தது. ஒரு கிளையில் இலைகளின் மறைவில் ஒரே ஒரு நெல்லிக்கனி தொங்கிக் கொண்டிருந்தது. அதியமான் அக்கனியைப் பறித்துக் கொண்டு கீழே இறங்கினான்.

அதியமான் காட்டைக் கடந்து நாட்டை அடைந்து வீட்டை நோக்கிச் சென்றான். அடிக்கடி அதியனிடம் வரும் ஔவையார் அப்பொழுது அவனுடைய மாளிகைக்கு வந்திருந்தார். ஔவையாரைக் கண்டவுடன் அதியமானுடைய உள்ளம் மாறிவிட்டது. நெல்லிக்கனியை நாம் உண்டு உலகில் நீண்ட காலம் வாழ்ந்திருந்தாலும் உலகிற்கு உதவியாக இருக்கும் எனறு எண்ணியவனாய் தான் அரிதில் முயன்று பறித்து வந்த கனியை ஔவையாரிடம் கொடுத்து உண்ணுமாறு வேண்டினான்.

அதியமானுடைய செயலைக் கண்டு அவனைச் சூழ்ந்திருந்தோர் யாதும் உரைக்க முடியாமல் திடுக்குற்றார்கள். அதியமான் அக்கனியை அடைதற்கு ஆருயிரையும் துரும்பாக மதித்துச் செய்த முயற்சிகள் அவர்கள் அறியாதனவல்லவே.

கருநெல்லிக்கனியின் தன்மையினையும் அதனைப் பெறுதற்கு அதியமான் அடைந்த தொல்லைகளையும் உணராத ஔவையார் அக்கனியை மற்றைய நெல்லிக்கனிகளைப் போன்ற ஒரு கனி தான் என்று எண்ணியவராய் அதனை உண்டுவிட்டார். அக்கனியின் சுவை ஔவையாருடைய உயிரையும் ஊனையும் உருக்கிற்று. அவருடைய பசி, தாகம், களைப்பு முதலியவை யெல்லாம் எங்கோ பறந்துவிட்டன. அக்கனியின் வரலாற்றைப் பற்றி அதிகமானை வினாவினார். அதியமான் அக்கனியின் வரலாற்றை விளக்கமாகக் கூறினான். அதனைக் கேட்ட ஔவையார் வியப்பும் திகைப்பும் அடைந்தார். அதியமானுடைய செயல் அவருக்கு மட்டில்லாத மகிழ்ச்சியை அளித்தது. இப்படியும் ஒரு மனிதன் இவ்வுலகில் இருப்பானோ என்று எண்ணினார்.

இக்கதை தமிழ் சமுதாயத்தில் மக்கள் மன்னரை உயிராகப் போற்றுவர், மன்னனும் தம் மக்களை கண்ணின் மணிபோல் காப்பான் என்பதற்கு உதாரணமாக இப்பாடலில் ஔவையார் அதியமானின் பெருமை உலகு அறிய செய்வதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இன்றும் இதுபோல் தலைமை அமைந்தால் நாடு சிறக்கும்.

பாற்கடலைக் கடையும் போது தோன்றிய ஆலகால விஷத்தை பிறரின் நன்மை கருதி சிவபெருமான் உண்டார். அதுபோல் தமிழின் நீண்ட ஆயுளைக் கருதி அதியமான ஔவைக்கு நெல்லிக்கனியை ஈந்தான் என்பதால் அவனைப் புலவர் “நீலமணி மிடற்று ஒருவன் போல மன்னுக பெரும்” என வாழ்த்திக் கூறுவதால் இது வாழ்த்தியல் ஆகும்.

**அதியனின் வீரச்சிறப்பு**

***இவ்வே பீலி அணிந்து, மாலை சூட்டி***

***..................................................***

***அண்ணல் எம்கூகாமான், வைந் நுதிவேலே (புறம்.95)***

இப்பாடலும் அதியனின் வீரச்சிறப்பை பாடாண் திணையில் அமைத்து ஔவையார் பாடியுள்ளார்.

பெறுதற்கரிய நெல்லிக்கனியை அதியமான் ஔவையாருக்கு அளித்த செய்தி செந்தமிழ் நாடெங்கும் பரவியது. மக்கள் அனைவரும் அதியமானுடைய நல்லியல்பைப் புகழ்ந்து போற்றினார்கள். அதிகமானுடைய கீர்த்தி சேர, சோழ, பாண்டியர்களாகிய மூவேந்தர்களுக்கும் எட்டியது. அவர்கட்டு மிகுந்த பொறாமை உண்டாயிற்று. பொறாமையின் மிகுதியால் வயிறு எரிந்தார்கள். பிறர் அடையும் பெருமைக்குப் பொறாமைப்படும் மனிதர்கள் இந்த உலகத்தில் எந்தக் காலத்திலும் இருப்பார்கள்.

அதியமானிடத்தில் பொறாமை கொண்ட அரசர்கள் ஒன்றாகக் கூடினார்கள். பேரரசர்களாகிய தங்களுக்கு முன்ஒரு சிற்றரசர் பெரும்புகழ் அடைவதைத் தடுக்க வேண்டும் என்று முடிவு செய்தார்கள். அதற்காகப் போர் புரிவதற்கும் அவர்கள் திட்டமிட்டார்கள்.

பொறாமை பெருநில மன்னர்களை மட்டுமின்றிக் குறுநில மன்னர்கள் சிலருக்கும் உண்டாகியது. மலையமான் திருமுடிக்காரி என்பவன் பொறாமைத்தீயால் கொளுத்தப்பட்டு அதியமானுக்கு மாறாகக் குழப்பங்களைப் பல விடங்களிலும் உண்டாக்கிக் கொண்டிருந்தான். அதியமான் தன்னுடைய படைகளை அனுப்பித் திருமுடிக்காரியின் ஆணவத்தை அடக்கினான்.

அந்நாளில் காஞ்சியில் அரசு புரிந்திருந்த தொண்டைமான் என்னும் அரசனும் பொறாமைக்காரர்களில் ஒருவன். அவன் அதியமானோடு போர் புரிந்து அவனைத் தோற்கடிக்க வேண்டும் என்று திட்டமிட்டான். அதன் பொருட்டுப் பலவகையான படைக்கலங்களையும் மிகுதியாகச் செய்வித்ததோடு போர் வீரர்களையும் திரட்டிக் கொண்டிருந்தான். இச்செய்தி அதியமானுக்குத் தெரிந்தது. போர் நிகழ்ந்தால் வீணாகப் பலர் மாண்டு தொலைய நேருமே. போர் நிகழாமல் தொண்டைமான் செருக்கை முருக்க வேண்டும் என்று எண்ணினான். தொண்டையர் கோனுக்கு அறிவுச் சுடர் கொளுத்துமாறு ஔவையாரை அனுப்பினான்.

ஔவையார் கச்சிவளநாட்டை அடைந்தார். ஔவையாரைக் கண்டதும் தொண்டைமானுக்கு மிகுந்த மகிழ்ச்சியுண்டாயிற்று. அவன் ஔவையாரோடு அளவாளாவினான். பிறகு தன்னுடைய படைக்கலச் சாலையில் அளவற்ற படைக்கலங்கள் குவிந்திருப்பதை ஔவையாருக்குக் காட்டவேண்டும் என்று எண்ணினான். ஔவையாரை அழைத்துக் கொண்டு ஆயுத சாலைக்குப் பெருமிதத்தோடு தனது படைக்கலங்களை காட்டினான். அவை நெய் பூசப்பட்டு அழகாக அடுக்கி வைக்கப் பெற்றிருந்தன. அவனுக்கு அறிவு புகட்ட எண்ணினார்.

அரசனே! உன்னுடைய படைக்கலங்கள் பீலியணியப்பட்டும் மாலைகள் சூட்டப்பெற்றதும் நெய்பூசப்பெற்றும், உடல் திரண்டிருக்க அழகுடன் செய்யப்பட்ட வலிமையான காம்புகள் சேர்க்கப்பட்டும், பாதுகாவலையுடைய அகன்ற மாளிகையில் இருக்கின்றன. எந்நாளும் செல்வம் உண்டாயின் வறியவர்க்கு உணவு கொடுத்தும், இல்லையாயின உள்ளதனைப் பலரோடு கூட உண்ணும் வறியோருடைய சுற்றத்திற்குத் தலைவனாகிய தலைமையை உடைய எம் வேந்தன் அதியமானுடைய கூரிய நுனியை உடைய வேல்களோ என்றால் பகைவரைக் குத்துதலால் நுனியிலும் விளிம்பிலும் உள்ள கூரிய பாகம் முறிந்து கொல்லன் உலைக்களத்தில் உள்ள சிறிய கொட்டிலில் இருக்கின்றன என்னும் பொருளை அமைத்துப் பாடினார். ஔவையார் உரைகளைக் கேட்ட தொண்டைமான் அச்சமடைந்தான். அதியமானோடு போர் ஏற்படாதவாறு அறிவுடன் நடந்து கொண்டான்.

**கானமஞ்ஞைக்கு கலிங்கம் நல்கியோன்**

“சங்ககாலக் கடையெழு வள்ளல்களுள் பேகன் ஒருவன் ஆவான். வையாவிக்கோப்பெரும் பேகன் என்பது இவனது முழுப்பெயர். இவனுக்கு “வையாவி” என்ற பட்டப்பெயர் அடைமொழியாக வழங்கப்பட்டுள்ளது. அது இவனுடைய தந்தையாரின் பெயர் என்றும், பட்டப் பெயரென்றும், ஊர்ப் பெயரென்றும் குடி முன்னோர் பெயரென்றும் பலவாறாகக் கூறப்படுகிறது.

பேகன் ‘‘ஆவியர்கோ’’ எனவும் அழைக்கப்படுகிறான். ஆவியர் பெருமகன் பெருங்கல் நாடன் (சிறு.86–87) ஆவியர்கோ (புறம்.147:9) என்ற பெயர்கள் சங்க இலக்கியத்துள் காணப்படுகின்றன. ஆவியார் என்பார் ஒரு தனிக்குடியினர் அல்லது கிளைக்குடியினர் எனக் கொள்ளலாம். இவ்வாவியர் குடியினர் சேரப் பேரரசர்களுடன் நெருங்கிய தொடர்பு பூண்டவர்கள்.

‘‘பொதினி’’ என்னும் ஊர் இவனது தலைநகராக விளங்கிற்று. இது தெய்வத்தின் பாதுகாப்புடையதாய் மலையின் மேல் அமைந்திருந்தது. இவ்வூர் ‘‘ஆவினன்குடி’’ என்றும், பழனி என்றும் வழங்கப்படுகிறது. பழனியில் உள்ள ஒரு குளம் ‘‘வையாபுரிக்குளம்’’ என்று குறிப்பிடப்படுவதும் இதனை வலியுறுத்தும்.’’[24]

**‘‘படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ**
**கடாஅ யானைக் கலிமான் பேகன்’’ (புறம்.141)**

முன்னர் இடைக்கழி நாடு என்று ஒன்று இருந்தது. அதனைப் பொதினி நாடு என்றும் அறைவர். அந்த நாட்டில் நல்லூர் என்னும் ஊரில் ஆவியர் குடியில் ‘பேகன்’ என்னும் பெயரை உடையவன் ஒருவன் இருந்தான். அறிவு, ஆற்றல், குணம், செயல் முதலிய எல்லாவாற்றானும் சிறந்து திகழ்ந்த அவன் ஆவியர் குடியில் தலைவன் ஆவான்.

அவன் மக்களிடம் அன்றி மாக்களிடமும் அருளுடன் ஒழுகினான். அவன் தன் நிலங்களில் அகப்படும் வைக்கோலையும் விலைக்கு அகப்படும் வைக்கோலையும் ஒன்று தொகுத்து, ஆக்கள் மேய்ச்சலின் பொருட்டுக் கூடும் மந்தை வெளிகளில் போராகப் போட்டு வைப்பான். அங்கு மேயவரும் ஆக்கள் அந்த வைக்கோலை வயிறார உண்டு செல்லும். இதனால் அவனுடைய பெயர் நாளடைவில் ‘வையாவிக்கோ’ என்றும் ‘வையாவிக்கோப்பெரும் பேகன்’ என்றும் நீண்டு வழங்கி நின்றது.

பேகன் ஒருநாள் பொழில் ஒன்றுக்குச் சென்றான். அது மிகுந்த குளிர்காலம். அப்பொழுது அவன் விலை உயர்ந்த பட்டு ஒன்றைப் போர்த்திக்

கொண்டிருந்தான். குளிர்ந்த காற்று மிகுதியாக வீசிக் கொண்டிருந்தது. வானில் மேகம் மிகுதியாக ஓடிக்கொண்டிருந்தன. பேகன் பல விடங்களையும் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான். ஓரிடத்தில் ஒரு மயில் தோகையை விரித்து அழகாக ஆடிக் கொண்டிருந்தது.

மயில் குளிர் தாங்காமல் ஆடுகிறது போலும் வாயில்லா இந்த உயிருக்கு யாவர் போர்வையளிப்பர். ஆடியும், பாடியும் வருவார்க்கு எதனையும் அளிக்க வேண்டியது என்னுடைய கடமையன்றோ என்று உள்ளத்தில் எண்ணமிட்டான். தான் போர்த்திக் கொண்டிருந்த பேர்வையை எடுத்து அம்மயிலுக்குப் போர்த்திவிட்டுத் தன்னுடைய இருப்பிடத்திற்குத் திரும்பினான்.

அவன் போர்யைளித்த செய்தி எங்கும் பரவியது. அதனைக் கேட்டு பரணர் என்பவர் வந்து பேகனை புகழ்ந்து பாடி பரிசில் பெற்றுச் சென்றார். அவர் செல்லும் வழியில் வந்த பாணனை ஆற்றுப்படுத்தும் விதமாக பேகன் பற்றிய இக்கதையைக் கூறி, அவனை அடைந்தால் வறுமையைப் போக்கும் பேகன் மறுமைப் பயனை எதிர்பாராமல் கொடுக்கிறான் என்று பேகனைப் பரணர் புகழ்ந்து பாடுகிறார்.

**பரணரின் பசித்துயர்போக்கிய நள்ளி**

**“கூதிர்ப் பருந்தின் இருஞ்சிறகு அன்ன**

**..................................................**

**நளிமலைநடன நள்ளி”   (புறம்.150)**

இப்பாடல் பாடாண் திணையில் அமைந்துள்ளது. கடையேழு வள்ளல்களில் ஒருவனான நள்ளி குறித்த கதையைத் தருகின்றது.

“இவன் கடையேழு வள்ளல்ளில் ஒருவன். இரப்போர்க்கு இழையணி நெடுந்தோர் களிறொடும் ஈவோன்”[25]

வன்பரணர் என்பவர் சங்க காலத்துப் புலவர் பெருமக்களில் ஒருவர். கொங்கு நாட்டிலே செங்குந்தம் என்னும் ஊரிலே இருந்தவர். இவர்

பல நூல்களையும் பயின்று அறிவு நலத்துடன் விளங்கியிருந்தார். நிறைந்த சுவை அமைந்த பாடல்களைப் பாடுவதில் இவர் சீர்த்தி பெற்றவர். அறிஞர்கள் அனைவரையும் வருத்தும் வறுமை இவரையும் பிடித்து ஆட்டியது.

இவருடைய இல்லாளின் பெயர் மந்தாகினி இறைவன் இவருக்குப் பொருட் செல்வத்தை வழங்கா தொழியினும் மக்கட் செல்வத்தை தாராளமாக வழங்கினான். அன்பிலும் அழகிலும் சிறந்து விளங்கிய மந்தாகினி மக்கள் எழுவரைப் பெற்றாள். பொருட் செல்வர்கள் மக்கட் செல்வம் அற்றவர்களாக இருத்தலும், மக்கட் செல்வம் உடையார் பொருட்செல்வம் அற்றவர்களாக இருத்தலும் உலகில் கண்கூடன்றோ! மக்கட் செல்வம் பெருக்கினாலும் வறுமையினாலும் கலங்கிய புலவர் துன்பக் கடனுக்குக் கரை காணாது அல்லற்பட்டார். நெருப்பினுள் துஞ்சனும் ஆகும், நிரப்பினுள் யாதொன்றுங் கண்பாடரிது என்பது பொய்யாமொழி அன்றோ வறுமையின் கொடுமையால் அவர் மிகவும் இளைத்துப் போனார்.

உள்ளூரிலே தொல்லைப்பட்டுக் கொண்டு வாழ்வதற்கு அவருடைய உள்ளம் இடங்கொடுக்கவில்லை. ஊரைவிட்டு எங்கேனும் ஓடிப்போவதென்று முடிவு செய்தார். ஒருநாள் இரவு எவரும் அறியா வண்ணம் மனைவி மக்களை உடனழைத்துக் கொண்டு புறப்பட்டார். மனைவி மக்களுடன் பட்டினி கிடந்து வழியிலே பல அல்லல்களை அடைந்தார். பலநாள் வழிநடந்தபின் ஒருநாள் ஒரு காட்டைச் சேர்ந்தார். பசித்துன்பத்தால் களைத்து ஒரு மரத்தடியிலே தளர்ச்சியுடன் படுத்திருந்தார். அப்பொழுது அந்தக் காட்டிற்குக் குறுநில மன்னன் ஒருவன் வேட்டைக்கு வந்திருந்தான். அவனுடைய பெயர் நள்ளி. பெருங்கொடையாளி, வள்ளல்களில் ஒருவன், எல்லோரிடத்திலும் இரக்கமும் பேரருளும் உடையவன். அவன் வன்பரணர் குடும்பத்துடன் களைத்து விழுந்து கிடத்தலைக் கண்டான். அவன் ஓர் அறிஞர் என்பதையும் தன்னுடைய நுண்ணுணர்வாள் உணர்ந்து கொண்டான்.

நள்ளியைக் கண்டவுடன் புலவர் அஞ்சினார். நள்ளியின் வேட்டைக் கோலத்தைக் கண்டு இவன் இக்காட்டிற்குரிய வேட்டுவன் போலும், யாது

செய்வானோ என்று நடுங்கி எழுதற்கு முயன்றார். நள்ளி புலவரை நெருங்கினான். எழுதல் வேண்டாம் என தடுத்தான். அறிஞர் நிலை அருளாளனாகிய நள்ளியின் மனத்தை வருத்தியது. முதலில் அவருடைய பசிநோயை நீக்க முடிவு செய்தான். வேட்டையில் கொன்றிருந்த மானைச் சுட்டு உண்ணச் செய்தான். மனைவி மக்களுடன் உண்டு புலவர் பசியாறினார். அண்மையில் இருந்த சுனை நீரைக் குடித்து நீர் வேட்கையையும் போக்கினார்.

பிறகு, புலவர்க்குப் பொருள் கொடுப்பதற்கு நள்ளி விரும்பினான். அப்பொழுது கையில் பொருள் இல்லை. வேட்டைக்கு வந்தபோது பொருள் எது? சிறிது எண்ணினான். கழுத்தில் அணிந்திருந்த முத்து மாலையையும், கையில் அணிந்திருந்த பொற்காப்புகளையும் கழற்றிப் புலவர்க்குக் கொடுத்தான். அவற்றை ஏற்றுக் கொள்ளுதல் தம் தகுதிக்குத் தக்கதென்று என்று புலவர் தயங்கினார். புலவர் எண்ணத்தை நள்ளி உணர்ந்தான். நான் இப்பொழுது காட்டில் இருத்தலால் கையில் வேறு பொருள் இல்லை. ஆதலால் கொண்டு செல்லுங்கள் என்று வேண்டினான். அப்பொருள்களோ விலைமதிக்கக் கூடாதவையாக இருந்தன. நள்ளி வற்புறுத்திக் கூறவே புலவர் ஏற்றுக் கொண்டார். அவருக்கு மகிழ்ச்சி மிகுதியாக உண்டாயிற்று. தாங்கள் யார், தங்கள் ஊர் யாது என்று கேட்டார். அந்த இடத்தில் தன்னைக் கூறுதற்கு நள்ளி விரும்பவில்லை. ஆயினும் புலவர் விட்டுவிடவில்லை. வழியில் எதிர்பட்டவர்களிடம் விசாரித்து தெரிந்து கொண்டு நள்ளியின் ஊருக்குச் சென்றார்.

நள்ளியைப் பற்றி புகழ்ந்து பாடிய பின்னர் நள்ளியின் ஊரையடைந்தவன் பரணர் தமது வரவை நள்ளிக்குத் தெரியப்படுத்தினார். அவனைச் சென்று கண்டார். நள்ளி புலவரையும் அவருடைய குடும்பத்தினரையும் பல நாள் தனது மனையில் வைத்துப் பெருவிருந்து செய்தான். நள்ளியின் பண்புகள் புலவர் உள்ளத்தைப் பெரிதும் கொள்ளை கொண்டன.

இவ்வாறு பரணர் காட்டில் தமக்கு அருள் செய்த வள்ளலாகிய, தோட்டி மலைக்குரிய நள்ளியை புகழ்ந்து பாடியுள்ளார்.

**வல்வில் ஓரி**

*புறநானூற்றின் 152வது பாடல் பாடாண் திணையில் அமைந்துள்ளது. கடையேழு வள்ளலாகிய கொல்லிமலையாண்ட ஓரி குறித்த கதையைத் தருகிறது.*

**வேழம் வீழ்ந்த விழுத்தொடைப் பகழி**
**பேழ்வாய் உழுவையைப்பெரும் பிறிது உறீஇ**
**...............................................................**
**ஓங்கு இருங்கொல்லிப் பொருநன்**
**ஓம்பா ஈகை விறல் வெய்யோனே! (புறம்.152)**

*"கொல்லி என்பது தென்னக மலைகளுள் சிறந்தது. தொன்மைமிக்கது. மேற்குத் தொடர்ச்சி மலைக்கண் உள்ளது. இத்தகைய கொல்லிமலையையும், அதனைச் சூழ்ந்திருந்த சிறுநாட்டையும் ஒரு காலத்தில் வல்வில் ஓரி என்னும் பெயருடைய வள்ளற்பெருமகன் ஒருவன் ஆண்டு வந்தான்.*

*அவன் ஒரு பெரிய கொடையாளி, விற்போர் புரிவதிலும், வேட்டையாடுவதிலும் வல்லவன். குறுநில மன்னன் கடையேழு வள்ளல்களில் ஒருவன். மாரி போல் வாரி வழங்கும் மனவளம் உடையவன். ஓரி என்னும் தன் பெயர் படைத்த குதிரைமீது ஏறிச்சென்று போர் பல புரிந்து வெற்றி பல பெற்ற பெருவீரன் பழவர் என்னும் வீரர் பலரைப் பெற்றிருந்தவன்.*

*இசைத்துறையில் மிக்க ஈடுபாடு உடையவன். பெரும்புகழ் பெற்றவன் ஆயினும் ஒருவர் தன்னைப் பற்றி நேரில் புகழ்வதைக் கேட்க நாணும் உள்ளம் உடையவன். ஆற்றலும் அருளும் பொருந்தியவன். புலவர் பலரால் போற்றப் பெற்றவன். அவனுக்கு "ஆதன் ஓரி" என்னும் பெயரும் உண்டு."*[26]

*அவனிடம் புலவரும், பொருநரும், பாணரும், கூத்தரும் வருவர். பரிசில் வேண்டுவர் அவர்களுக்கு அவன் குதிரை பூட்டிய தேர் கொடுப்பான். கணக்கற்ற களிறுகளை வழங்குவான். பொன்னால் ஆகிய குவளைப் பூவை,*

நீலமணிகளை இடையிடையே பொருத்தி, வெள்ளியால் ஆகிய நாரினால் தொடுத்து. மாலையாக அணிவிப்பான். பொன் அளிப்பான், பொருள் கொடுப்பான், அவர்கள் வறுமை நீங்கி வாழ்வர். ஓரி அவர்களுடைய இன்பநிலை கண்டு மகிழ்வான்.

ஒருநாள் ஓரி தனக்குரிய மலைப்பகுதியில் உள்ள காட்டிற்கு வேட்டையாடும் பொருட்டுச் சென்றிருந்தான். நாடு பல சுற்றிக் கண்டறிந்த நல்லறிஞரும் பெரும்புலவரும் ஆகியவன் பரணர், தமது பாணர் கூட்டத்தவரோடு வந்து அவ்விடத்தில் தங்கியிருந்தார்.

அப்பொழுது அங்கே பெரிய வாயையுடைய புலி ஒன்று, கறுத்துப் பருத்த யானை ஒன்றை வீழ்த்துவதற்குச் சமயம் பார்த்து இருந்தது. அதனைக் கண்டான் கையில் வில்லேந்தி நின்று இருந்த வீரனாகிய ஓரி. உடனே தனது வலியவில்லை எடுத்தான். அதில் அம்பைத் தொடுத்தான். யானையைப் பார்த்துக் குறி வைத்து எய்தான்.

அவன் கை வில்லிருந்து புறப்பட்ட அவ்வம்பு, யானையை எய்து வீழ்த்தியது. பின்னர் அவ்யானையைக் கொல்லும் பொருட்டுப் பேழ்வாய் திறந்த வண்ணம் சமயம் பார்த்து நின்றிருந்த புலியின் வாயுள் சென்று தைத்தது. அதனை மாய்த்தது. அதன் உடம்பைத் துளைத்து வெளியே வந்தது. பிறகு வழியில் நின்றிருந்த புள்ளிமானை மடியச் செய்தது. அதன் பின்னர், உரல் போன்ற தலையையுடைய காட்டுப் பன்றி ஒன்றின் உயிரைப் பறித்தது. இறுதியில் அவ்வம்பு, பன்றிக்குப் பக்கத்தில் இருந்த புற்றொன்றில் நுழைந்தது. அதனுள் அடங்கிக் கிடந்த உடும்பொன்றின் உடலில் தைத்து, அதனையும் வீழ்த்தியது.

இக்காட்சியை வன் பரணரும், அவருடன் வந்திருந்த பாணர் கூட்டத்தாரும் பார்த்தார்கள், பெருவியப்புற்றார்கள்.

உடனே, வன் பரணர் யானை, புலி, மான், பன்றி, உடும்பு ஆகிய இத்துணை விலங்குகளையும் அடுத்தடுத்து ஒன்றன்பின் ஒன்றாய் ஒரு சேரக் கொல்லும் வலிய வில்லும், கூரிய அம்பும் உடைய இவ்வில்லாளன் யாராய்

இருக்கக்கூடும். ஆளைப் பார்த்தால் கூலிக்கு வேட்டையாடுபவனாகவும் தெரியவில்லையே. அவன் தோற்றமோ பெருஞ்செல்வம் உடையவனாகக் காட்டுகின்றதே. அழகு மிக்க பரந்த மார்பில் சந்தனம் வேறு பூசியிருக்கிறானே! முத்துமாலை வேறு சந்தனம் பூசி புலர்ந்த அம்மார்பில் கிடந்து புரண்டு கொண்டிருக்கிறதே. ஒருவேளை கொல்லிமலைத் தலைவனாகிய ஓரியாக இருப்பானோ? என எண்ணினார்.

உடனே தம்முடன் வந்திருந்த பாணர் கூட்டத்தாரை அழைத்தார். அவர்களிடம் நான் இசைப்பாட்டொன்று பாடுகிறேன். நீங்கள் முழவை முழக்குங்கள்! யாழை இசையுங்கள்! சிறுபறையைக் கொட்டுங்கள்! குழலை ஊதுங்கள் என்றார்.

உடனே பாணர் பல்லியங்களை இசைத்தனர். வன் பரணர் வண்ணப் பாட்டொன்றைப் பாடினார். அப்பாட்டில் ஓரியின் பெயரும் இடம் பெற்றிருந்தது. அதனைக் கேட்ட ஓரி, புலவர் பாட்டில் இடம் பெற்றிருந்தது தன் பெயராதல் அறிந்து மிகவும் நாணமுற்றான்.

வன் பரணர் அவனது நாணத்தைப் பொருட்படுத்தவில்லை. தாம் உண்மையாகக் கண்டவற்றை உணர்த்த விரும்பினார். நாங்கள் நாடு பல சுற்றிக் கண்டு வருகிறோம். அங்கெல்லாம் உன்னைப் போல வேட்டையாட வல்லவர் ஒருவரையும் கண்டோமில்லை என்று புகழ்ந்தார்.

ஓரி மேலும் புலவர் தன்னைப் புகழ்வதைக் கேட்க நாணினான். அதனால் அதற்குமேல் புகழ்வதற்கு அவருக்கு இடங்கொடுக்காமல் இடையிட்டுத் தடுத்தான். உடனே தான் வேட்டையாடிய போது கொன்ற மானின் ஊனைக் கொடுத்தான்.

உருக்கிய பசு நெய்யைப் போன்ற மதுவை வழங்கினான். தனது கொல்லி மலையிலே விளைந்த பொன்னைப் பல மணிகளுடன் சேர்த்துக் கொடுத்தான். இவற்றையெல்லாம் ஏற்றுக் கொள்ளுங்கள் என வேண்டினான். புலவர் வன்பரணரும், அவருடன் வந்திருந்த பாணர் கூட்டத்தவரும் ஓரி

விரும்பி அளித்தவற்றைப் பெற்று மகிழ்ந்தனர். அவனுடைய ஈகைத் தன்மையை வியந்து பாராட்டினார்.

**இளவெளிமானும் பெருஞ்சித்திரனாரும்**

புறநானூற்றின்162வது பாடல் பெருஞ்சித்திரனார் குமணன் தம்பியாகிய இளவெளிமானைப பறறிப பாடிய பாடாண்திணைப் பாடல், புலவரைஆ; போற்றா பண்பைக் கதை கூறி விளக்குகிறார்.

**"இரவலர்பரவலை நீயும் அல்லை**
**கடுமான் தோன்றல் செல்வல்யானே"   (புறம்.162)**

சோழவள நாட்டிலே வெளிமான் என்னும் சிற்றரசன் அரசாட்சி புரிந்திருந்தான். இந்த வெளிமான் அருள் மிகுந்த உள்ளத்தினன். இரவலர் விரும்பியவற்றை இல்லையென்று கூறாமல் வழங்குபவன். இவனுடைய காலத்தில் புலவர்கள் பெருமிதத்துடன் வாழ்ந்திருந்தனர். அரும்பொருள் கொடுத்துப் பெரும்புகழ் தேடிய மன்னன் திடீரென்று இறந்துபட்டான்.

இந்த வெளிமானுக்கு இளவல் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் இளவெளிமான். அவனுடைய குணம் பொருளிடத்து பற்று கொண்டவன். இரக்கம் அற்றவன். புலவர்களையோ, பிற இரவலாளர் களையோ கண்டால் புலிபோற் சீறுவான். ஐயமெடுப்பதைத் தவிர வேறெதும் செய்யத் தெரியாதா உங்களுக்கு என்று கடுஞ்சொற்களால் ஏசுவான்.

வெளிமான் இறந்ததும் இளவெளிமான் உளங்களி கூர்ந்து அரசனானான். தனக்கு அரச பதவி கிடைத்ததை முன்னிட்டுப் பெருமகிழ்ச்சி கொண்டான். இளவெளிமானுடைய தன்மையை உணர்ந்த புலவர்கள் அவனை நெருங்கவில்லை. தீய நண்பர்கள் அவனுடன் சேர்ந்தார்கள். இளவெளிமான் இவ்வாறு வாழ்ந்திருக்கும் போது பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் அங்கு வந்தார். அவர் வெளிமானையடுத்துப் பன்முறை பரிசில் பெற்றவர். வெளிமான் இறக்கும்போது பெருஞ்சித்திரனார் வந்தார். வெளிமான் விண்ணுலகடைந்ததை அறிந்து உள்ளம் வருந்தினார்.

இளவெளிமான் ஏவலாளியிடம் சிறுது பொருள் கொடுத்து பெருஞ்சித்திரனாருக்குக் கொடுக்கச் செய்தான். இளவெளிமான் செயல் புலவருக்கு வெகுளியை உண்டாக்கியது. ஏவலாளி கொண்டு வந்து கொடுத்த பொருளை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. அருமை அறியாத இவனிடம் பொருள் பெறுதல் தமது பெருமைக்கு சிறுமை என்று முடிவு செய்தார். ஒன்றையும் பெற்றுக் கொள்ளாமல் அங்கிருந்து புறப்பட்டார். இளவெளிமானோ புலவர் ஏற்றுக் கொள்ளாத பொருள் தனக்கு ஊதியம் என்று உளங்களி கூர்ந்தான். வறுமையால் வாடும் புலவர் பெரும் பொருளுக்குப் பேரவாக் கொள்கிறாரோ என்று எண்ணமிட்டான்.

புறப்பட்ட புலவர் குமணன் என்னும் குணக்கோவிடஞ் சென்றார். அம்மன்னன் அறிஞர்களின் அருமையை அறிந்தவன். அவன் புலவரைப் போற்றிப் பெரும்பொருள் வழங்கினான். அவற்றைக் கொண்டு போய்ச் சேர்த்தற்கு யானைகளையும் கொடுத்தான்.

பெருஞ்சித்திரனான் பெரும் பொருளை யானையின் மீது ஏற்றிக் கொண்டு புறப்பட்டார். இளவெளிமானுக்கு நல்ல புத்தி புகட்ட எண்ணினார். அவனுடைய ஊர் வழியாக வந்தார். தம்முடைய யானைகளைக் காவல் மரத்தில் கட்டினார். காவல் மரம் என்பது அரசர் தமது ஆட்சியின் மாட்சிக்கு அறிகுறியாகத் தமது நகர்ப்புறத்தில் வளர்ப்பது. பகைவர் அம்மரத்தைத் தீண்டினும் அதனை உடைய அரசர்க்குத் தோல்வியும் இழிவும் வந்ததாகக் கருதப்படும். அத்தகைய மரத்தில் யானைகளைக் கட்டிய பாவேந்தர் மன்னனிடம் சென்றார்.

ஓ இளவெளிமானே! இரப்பவர்க்குப் பொருள் அளித்துப் பாதுகாப்பன் நீ அல்லன். இரப்போரைப் புரப்போர் இவ்வுலகில் இல்லாமற்போகவில்லை. எப்பொழுதும் இவ்வுலகின் கண் இரப்போரும் புரப்போரும் இருந்து கொண்டு தான் இருப்பார்கள். நின்னுடைய ஊரில் உள்ள காவல் மரம் வருந்துமாறு யாம் பொருட்குவியலோடு கட்டி வைத்துள்ள யானை நான் உனக்குக் கொடுக்கும் பரிசிலாகும். இதனை நீ வைத்துக் கொண்டு

இரப்போர்க்குக் கொடுப்பாயாக! நான் போய் வருகிறேன் என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டார்.

காவல் மரத்தைக் காத்திருந்தவர்கள் யானையை அவிழ்த்துக் கொண்டு வந்து அரசனிடம் நிறுத்தினார்கள். அதனைக்கண்ட இளவெளிமான் உளம்மிக நாணினான். இப்புலவர் திரும்பி வந்து நாம் கொடுக்கும் அற்பப் பொருளையும் பெற்றுக் கொண்டு தான் செல்வார். இரப்பவர் என் பெறினும் கொள்வர் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தோமே அது பொய்யாகப் போய்விட்டதே என்று மனம் வருந்தினான்.

இக்கதையை புலவர்களுக்கும் தன்மானம் உண்டு என்பதை உணர்த்த கூறப்பட்டுள்ளது. ''எத்திசை செல்லினும் அத்திசைச்சோறே'' என்பார். படித்தவர்கள், சான்றோர்களை எள்ளி நகையாடுதல் குற்றம் ஆகும்.

**சாத்தனாருக்கு தலை கொடுத்த குமணன்**

புறநானூற்றின் 164வது பாடல் பாடாண் திணையில்அமைந்துள்ளது. குமணன் என்னும் குறுநில மன்னன் குறித்த கதையைத் தருகிறது.

**''ஆடு நனிமறந்த கோடுஉயர் அடுக்கிபின்**
**இன்மை தீர்க்கும் குடிப்பிறந்தோயே''   (புறம்.164)**

பெருந்தலைச் சாத்தனார் என்னும் பெயருடைய புலவர் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார். புலவர்களைப் பற்றும் வறுமை அவரையும் பற்றியது. அவர் பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டார்.

''அந்நாளில் குமணன் என்னும் பெயருடைய குறுநில மன்னன் ஒருவன் இருந்தான். முதிர மலையைச் சார்ந்த நாட்டை ஆண்ட சிற்றரசனாவான். இன்றைய பழனி வட்டத்தில் தென்மேற்குப் பகுதியும், உடுமேலைப்பேட்டை வட்டத்தின் தென்கிழக்குப் பகுதியும் அடங்கிய நிலப்பரப்பே அன்றைய முதிரமலையாக இருந்ததென்பர். குமணன் கடையெழு வள்ளல்களாகிய பாரி, ஓரி, காரி, எழினி, பேகன், ஆய், நள்ளி என்பவர்க்குக்

காலத்தால் பிற்பட்டவன். வரையாது வழங்கும் கொடைத் தன்மையால் மேற்பட்டவன்.''[27] அவன் புலவர்களைப் போற்றுவதில் சிறந்தவன். புலவர் குமணனின் பெருமைகளைக் கேட்டு உணர்ந்தார். அவனிடம் சென்று பரிசில் பெற்று வருதல் வேண்டும் என்று முடிவு செய்தார். புறப்பட்டுக் குமணனுடைய நாட்டையடைந்தார்.

குமணனுக்கு ஓர் இளவல் இருந்தான். அவன் நற்பண்புகள் சிறிதும் இல்லாதவன். அவன் பெயர் இளங்குமணன் எனவும், அமணன் எனவும் வழங்குவர். அறிவிலிகள் சிலர் அமணன் மனதைக் கலைத்துவிட்டார்கள். உன்முன்னோன் பொருள்களையெல்லாம் இரவலர்கட்குக் கொடுத்து பாழாக்குகின்றான். இதனால் உண்டாகும் பொருள் இழப்பு முடிவில் உன்னையே சாரும். நீ இப்பொழுதே பொருள்களைக் கைப்பற்றுவதற்கு வழி தேடுவாயாக என்று கூறி உடன் பிறந்தார்களுள் பகைமையை உண்டாக்கிவிட்டார்கள்.

அமணன் குமணனுக்குப் பகைவனாக மாறிவிட்டான். மனந்திரிந்த இளங்குமணன் தன் அண்ணனுக்கு மாறுபாடாகக் கலகம் விளைவித்தான். தம்பியின் வேறுபாட்டைக் கண்ட குமணன் நாட்டைத் துறந்தான் காட்டை அடைந்தான். மறைந்து வாழ்ந்தான். குமணன் இருப்பிடம் அறிந்த மக்கள் அவனுக்கு வேண்டுவன கொடுத்து அவனைப் போற்றினார்கள்.

சமயம் பார்த்திருந்த அமணன் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். அவன் அறிஞர் அருமைகளை சிறிதும் உணராதவன். குமணனுடைய நாட்டை அடைந்த பெருந்தலைச்சாத்தனாருக்கு இச்செய்திகள் தெரிந்தன. நற்பண்புகள் இல்லாத அமணனைச் சந்திக்க விரும்பாமல், சாத்தனார் காட்டை அடைந்தார். மறைந்திருந்த குமண வள்ளலைத் தேடிப்பிடித்தார். தம்முடைய வறுமைத் துன்பங்களையெல்லாம் அவனிடம் விரித்துரைத்தார்.

சமைத்தல் தொழிலை ஒழித்தமையால் தேய்தல் இல்லாமையை அடைந்து பக்கம் உயர்ந்து தோன்றும் அடுப்பின் கண் காளான் பூத்துக் கிடக்கின்றது. உடல் மெலியும் பசியால் வருந்திப் பாலின்மையால் தோலாந்

தன்மையுடனே திரண்டு பாலூறும் துளை தூர்ந்த தனது வறண்ட மார்பைச் சுவைக்குந் தோறும் பால்வராமையால் அழுகின்ற பிள்ளையினுடைய முகத்தைப் பார்த்துத் துன்பக் கண்ணீர் ததும்பும் கண்களையுடைய என் மனைவியின் வருத்தத்தைப் பார்த்து இந்த வருத்தத்தை ஒழித்தற்குத் தக்கவன் நீதான் என நினைந்து நின்னிடத்திற்கு வந்தேன். சாத்தனார் உரையைக் கேட்ட குமணன் இப்புலவருக்கு யாது பதிலுரைப்பது என்று எண்ணினான். இளங்குமணன் தன் முன்னவனை நாட்டை விட்டுத் துரத்தியதுமன்றி அவனை அடியோடு தொலைத்துவிட வேண்டும் என்றும் தன் நண்பர்களுடைய உரையின் பேரில் ஒரு முடிவு செய்திருந்தான்.

அதாவது குமணனுடைய தலையைக் கொணர்வார்க்குப் பெரும் பரிசில் வழங்குவதாக முரசறைந்திருந்தான். அச்செய்தி குமணனுக்கும் தெரியும். அச்செய்தி இப்பொழுது நினைவுக்கு வரவே, தன்னுடைய தலையைப் புலவர்க்குப் பரிசாக அளித்துவிடலாம் என்று முடிவு செய்தான். தன் கைவாளைப் புலவரிடங் கொடுத்தான். தன் தலையை வெட்டிக்கொண்டு போய்த் தன் பின்னவனாகிய மன்னனிடங்கொடுத்து உன்னிய பரிசைப் பெற்றுக் கொள்ளுமாறு உரைத்தான். வாளை வாங்காது தாழ்ப்பின் குமணன் தன் தலையைத் தானே துணித்துக் கொள்வான் என்று அஞ்சிய புலவர் வாளைத் தமது கையிலே பெற்றுக் கொண்டார்.

குமண வள்ளலிடம் வாளைப்பெற்ற சாத்தனார் விரைந்து இளங்குமணன்பாற் சென்றார். வாளுடன் புலவர் வந்திருத்தலைக் கண்ட இளங்குமணன் இவர் யாது கூறப்போகிறாரோ என்று அவருடைய முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். உடன் பிறந்தோர் இருவரும் ஒன்றுபட்டு வாழவேண்டும் என்பதே அவருடைய உள்ளக்கிடக்கை. இரக்கத்திற் சிறந்து விளங்கும் குமண மன்னனுடன் ஒரு வயிற்றிற் பிறந்த இளங்குமணன் கொடியவனாக இரான். அவனுடைய உள்ளத்தை எளிதில் மாற்றிவிடலாம் என்று புலவர் உறுதியாக நம்பினார். அவர் எண்ணியது கைகூடுமாறு அறிவுரைகள் பல கூறலாயினார்.

எப்பொருளும் நிலைபெறாத் தன்மையை உடையது இவ்வுலகம். இவ்வுலகத்தின் கண்ணே நிலை பெறுதலை விரும்பினவர்கள் தம்முடைய கொடையினாலே புகழை இவ்வுலகத்திலே என்றும் நின்று நிலவும்படி நிலை நிறுத்திவிட்டுத் தாங்கள் இறந்து போனார்கள். பொருந்துதற்கரிய பெருஞ் செல்வராக இருந்தும் சிலர், வறுமையினாலே பழைய கொடையுடைய யார் போலப் பின்னுந் தம் பெயரை நிலைநாட்டி உலகத்தோடு இடையறாது தொடர்ந்து என்றும் விளங்குதலை அறியாமற் போனார்கள். உலகத்தில் என்றும் நிலை பெறுதலை விரும்புவோர் புகழை நிலை நிறுத்துதலும் புகழை நிலை நிறுத்தாதோர் நிலை பெறாதோராகவும் இருக்கின்றனர். மணிகள் ஒலிக்கப் பெறுகின்ற சிறந்த யானைகளைப் பரிசிலர்களுக்கு மிகுதியாகக் கொடுக்கும் அழிவில்லாத நற்புகழையுடையவனும், உனது அன்பிற்குரியவனுமாகிய குமண வள்ளலைத் தேடிக் காட்டிலேகண்டேன். எனது வறுமையைக்கூறி அவனைப் பாடி நின்றேன். பெருமை மிகுந்த இரவலன் பரிசு பெறாமல் வாடினவனாகச் செல்லுதல் நான் என் நாட்டை இழந்ததினும் துன்பந்தருவதாகும் என நினைத்து வருந்தினான். பிறகு அவன் தலையைக் கொணர்வார்க்குப் பரிசில் வழங்குவதாக நீ யாருக்கும் தெரியுமாறு பறையறைந்திருத்தல் அவனுடைய நினைவுக்கு வந்தது.

புலவரே! எனது தலையை அரிந்து கொண்டு போய் என்னுடைய இளவல் இடத்திலே கொடும். அவ்வாறு கொடுப்பீராயின், உமக்குப் பெரும்பொருள் பரிசாகக் கிடைக்கும் என்று கூறித் தலையை அரிந்து கொள்ளுவதற்குத் தன் கையில் இருந்த வாளை என் கையில் கொடுத்தான். வாளை வாங்குவதற்கு நான் தாழ்த்தி இருப்பின் அவன் தானே தன்னுடைய தலையை அரிந்து வீழ்த்தினாலும் வீழ்த்துவான் என்று அஞ்சி, அவ்வாளைப் பெற்றுக்கொண்டு நின்பால் வந்தேன். அம்மன்னனைப் போல் அரிய பொருள் பிறிது யாதும் இவ்வுலகத்தில் இன்மையானும், அம்மன்னன் உயிருடன் வாழ்ந்திருந்தலாலும் நான் மிகுந்த மகிழ்ச்சியுடையவனாக நின்பால் வந்தேன் என்று இளங்குமணனுடைய உள்ளம் மாறித் திருந்தும் வண்ணம் கூறினார்.

புலவருடைய எண்ணம் இனிது நிறைவேறியது. அண்ணனின் பெருமையையும் தனது சிறுமையையும் உணர்ந்தான். சிலநாள் தன் முன்னவனைப் பிரிந்திருந்தபடியால் அவனுள்ளத்தில் அன்பு தோன்றியிருந்தது. உள்ளத்திலிருந்த தீமை பறந்து போய்விட்டது.

தன் முன்னவனைக் கொண்டு வந்து முன்போல் அரசனாக்குதல் வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். புலவர் மகிழ்ச்சியுடன் இணங்கினார். இளங்குமணனையும் உடனழைத்துக் கொண்டு காட்டிற்குச் சென்றான்.

குமணனைக் கண்டு இளங்குமணன் திருந்திய வகையைப் பொருந்த மொழிந்தார். நீ எனக்கு அளித்த தலை மீது தான் முடி சூட்டப் போகிறேன். நீ அத்தலையுடன் புறப்பட்டு நகருக்கு வருவாயாக என்று திறம்பெறச் செப்பினார். குமணனை அழைத்துப்போய் பழைமை போல் கிழமையுடையச் செய்து தாம் விழுவிய வளம் பெற்றுக் கெழுமிய உவகையுடன் மீண்டார்.

இக்கதை புலவர்கள் தாம் வறுமைத் துன்பம் நீங்கினால் போதும் என்று எண்ணாது, பிரிவுபட்டு கிடந்த மன்னனையும், அவன் தம்பியையும் இணைத்த மாண்பு போற்றற்குரியது, புலவர்களும் தன்நலம் போற்றாது பிறர்நலம் போற்றுபவர்களாக இருந்துள்ள விதம் இக்கதையின் மூலம் நன்கு விளங்குகிறது.

**பசிப்பிணி மருத்துவன் பண்ணன்**

புறநானூற்றின் 181வது பாடல் வாகைத் திணையில் பண்ணன் என்னும் வள்ளல் குறித்த கதையைத் தருகிறது.

> **“மன்றவிளவின் மனைவீழ் வெள்ளில்**
>
> **..................................................**
>
> **பசிப்பகைப் பரிசில் காட்டினை கொளற்கே”   (புற.181)**

முன்னாளில் பண்ணன் என்னும் பெயருடையவன் ஒருவன், சோழ வளநாட்டிலே சிறுகுடி என்னும் ஊரிலே வாழ்ந்திருந்தான். சிறுகுடி என்னும்

இவ்வூர் காவிரிக்கரையில் திருவீழி மிழலை என்னும் சிவபதிக்கு அணிமையில் அமைந்தது. பண்ணன் உயர்ந்தகுடியிற் பிறந்தவன். சிறந்த குணங்கள் அமையப்பெற்றவன். பெருந்திருவும் அவனுக்குப் பொருந்தியிருந்தது. விளைநிலம் தோட்டம் முதலியன மிகுதியாகப் பெற்றிருந்தான்.

தகுந்த ஆட்களை வைத்து விளைநிலங்களைப் பண்படுத்தி அவற்றால் மிகுந்த வருவாயை உண்டாக்கிக் கொண்டான். ஏவலாளர்களைத் தொழில்புரிவதற்கு அனுப்பிவிட்டு, அவள் இல்லத்துக்குள் பதிந்திருந்து இனிய நலங்களை நுகரவில்லை. தொழிலாளர்களுக்குத் தானே தலைமைத் தன்மை வள்ளலாக விளங்கிப் பொருளை எல்லோருக்கும் வழங்கினான். பசித்தவர்களது பசியை ஆற்றுதலையே தன்னுடைய கடமையாகக் கொண்டான். அவனுடைய செயலைக்கண்ட அறிஞர்கள் ‘பசிப்பிணி மருத்துவன்’ என்று அவனுக்குப் பெயர் வழங்கினார்கள்.

கொற்றங் கொற்றனார் என்னும் புலவர் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் என்று புலவர்கள் புகழ்வார்கள்.

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்னும் சோழமன்னன் சிறுகுடி கிழான் பண்ணனிடத்தில் பெருமதிப்பும் பேரன்பும் வைத்திருந்தான். சிறுகுடிகிழான் பண்ணன் பல சமயங்களில் சோழ மன்னனுக்குத்துணை நின்று உதவி புரிந்தான். பண்ணனும் கிள்ளி மன்னனும் ஆருயிர் நண்பர்களாக அமைந்திருந்தார்கள். கிள்ளி மன்னன் நல்ல அறிவாளி. செய்யுள் செய்யும் திறமையுடையவன்”[28] அவன் பண்ணனைப் பாராட்டி, யான் உயிர் வாழும் நாளையும் பெற்றுப் பண்ணன் வாழ்வானாக, பாணரே இந்தப் பரிசிலனது சுற்றத்தின் வறுமையைக் காண்பீராக.

புதுவருவாயை உடையதாகிய பழுத்த மரத்தின் கண் பறவைக் கூட்டம் ஒலிக்கின்றாற்போல் உணவு கொள்வார் ஆரவாரமும், முட்டை கொண்டு திட்டையேறும் எறும்பின் வரிசையைப் போல உண்டுவிட்டு வரிசையாகச் செல்லும் பெரிய சுற்றத்தோடும் கூடிய பிள்ளைகளைக்

காண்போம். பசி நோயைத் தீர்க்கும் மருத்துவனது மனை அண்மையோ சேய்மையோ எமக்குக் கூறுவீர்களாக என்று பாணன் கூற்றாக ஒரு செய்யுளைப் பாடிப் பாராட்டினான்.

மற்றும் மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார் என்னும் அறிஞர் பண்ணனது பெருமைகளையெல்லாம் கேள்வியுற்றுப் பண்ணனைப் பார்த்தற்கு வந்தார். அப்போது வெள்ளியாகிய மீன் தென்திசையில் நிற்க விளைவயல்களும் நீர் நிலைகளும் வற்றிய பயன் இல்லாத காலமாகிய வற்கடத்தில் பெரிய பறையாகிய தடாரியை இசைக்கும் பொருநன் சென்று பெரிய புகழையுடைய சிறுகுடிக்குரியவனாகிய பண்ணனையடைந்து தனது வறுமை நிலையைத் தெரியப்படுத்தினான்.

அப்பொழுதே அவனுடைய பசித்துன்பம் நீங்குமாறு தன்னுடைய பொருளைக் கொடுத்தான். எங்கள் தலைவனும் கொடையால் மேம்பட்ட தோன்றலுமாகிய பண்ணன். நுண்ணிய நூற்கொருளே பெரிய கையாகவும் வாயே மருப்பாகவும் வெல்லுகின்ற வாய்மொழியாகிய களிற்றையுடைய புலவர்களுக்கு நெல்லாகிய புல்லையுடைய விளைவயல்களைக் கொடுக்கும் அவனை நான் கூறக் கேட்டீர்களாக! அவனுடைய உழவுத் தொழிலுக்குரிய எருதுகளையும் ஏற்றத்தையும் யாழில் இட்டு இசைத்துக் கிணைப் பறையைக் கொட்டி நாள்தோறும் பாடா தொழிவேனாயின் நீங்காத ஆராய்ச்சி மணி கட்டியிருக்கும் முற்றத்தையுடைய பாண்டியன் வழித்தோன்றலான வழுதி என் பெரிய சுற்றத்தாரைக் காத்தற்கு வேண்டும் அருளைச் செய்யா தொழிவானாக என்று புகழ்ந்து பாடினார். இவ்வாறு அரசர்களாலும் புலவர்களாலும் ஒருங்கே பாராட்டப்பெற்றவன்.

**எயிறு இழந்த மூவன்**

புறநானூற்றின் 209வது பாடல் பாடாண் திணையில் அமைந்துள்ளது. ‘‘மூவன்’’ என்னும் குறுநில மன்னன் குறித்த கதையைத் தருகிறது.

**“பொய்கை நாரை போர்வில் சேக்கும்**

**......................................................**

**செருவெஞ்சேஎய்! நின்மகிழ் இருககையே!” (புறம்.209)**

*மூவன் என்பவன் அந்த நாளில் இருந்த ஒரு சிற்றரசன். இவனுடைய நாடு கடற்கரையிற் சிறந்து விளங்கியிருந்தது. பெருஞ்செல்வமும் கொடை நலமும் உடையவன் என இவனைப் பலரும் புகழ்ந்து பேசினர். பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் பெருமான் மூவனுடைய புகழைக்கேட்டார். பரிசிலை நாடி அந்த மூவனிடம் சென்றார். அவனுடைய சீர்த்தியாண்டும் பரவியிருத்தலைப் புகழ்ந்து பாடினார்.*

*“மூவன் இயற்கையில் நல்லியல்புகள் பலவும் அமையப் பெற்றவன் தான். ஆயினும் அவனுக்கு இப்போது நாளும் கோளும் நன்மையாக அமையவில்லை. புலவரைப் போற்றிப் பரிசில் கொடாமல் காலம் போக்கினான். நாளைக்குத் தருகிறேன் அப்புறம் தருகிறேன் ஏன் விரைந்து பறக்கிறீர்! என்று பலவாறு பகர்ந்து கடத்தி வந்தான். மூவன் செயல் சாத்தனாருக்கு வெறுப்பை விளைவித்தது”[29] இவன் பரிசில் கொடுக்கமாட்டான் போல் தெரிகிறது.*

*பொய்கையின் கண்ணே மேய்ந்த நாரைகள் நெற்போரின் கண்ணே கண்படுக்கும். நெய்தற் பூக்களை உடையவனிடத்தில் விளைந்த நெல்லையறுக்கும் உழவர்கள் ஆம்பல் இலையில் கள்ளை வார்த்துக் குடித்துவிட்டு அண்மையில் உள்ள கடலின் அலை ஒலியையே தானமாகக் கொண்டு ஆடுகின்ற நல்ல நீர்வளம் பொருந்திய ஊர்களையுடைய நாட்டிற்கு அரசனே! பல கனிகளையும் உண்ணுதற்கு விரும்பி விசும்பின் கண்ணே உயரப்பறந்து, மலை குகைகள் எதிரொலி குழங்கச் சென்று பார்த்து, ஆங்கிருந்த பழமுடைய பெரிய மரங்கள் பழுத்து ஒய்ந்த தனை அறிந்து வருந்திப் பழம் பெறாது மீளும் பறவைகளைப் போலப் பிறரால் விரும்புதற்குரிய உன் நற்குணங்கள் என்னையழைத்துக் கொண்டு வர வந்து, உன் புகழைப் பார்த்து பாடிய புலவனாகிய யான் வெறுங்கையுடன் திரும்பிச் செல்லக் கடவேனோ? வாட்போரில் சிறந்தவனே! நீ ஒன்றையுங் கொடுக்கவில்லை யாயினும் அதன்*

பொருட்டு நான் வருந்துவேன் அல்லேன். நீ செய்யும் இத்தீமையினால் என்பது குறித்துத் தான் யான் வருந்துகிறேன். நீ என்னிடத்திலே செய்த இந்த அன்பினால் உன் அவையினரன்றிப் பிறர் அறியாது ஒழிவாராக! என்று சினத்துடன் கூறிவிட்டு அவ்விடம் விட்டு அகன்றார்.

புலவர்வாக்கால் குறிப்பாக இகழப்பெற்ற மூவன் சிறிதும் அஞ்சவில்லை. நாள்கள் பல சென்றன சேரமான் கணைக்கால் இரும்பொறை என்னும் சேரமன்னன் மூவனை எதிர்த்தான். அவன் மிகுந்த படையாற்றலும் கொடையாற்றலும் உடையவன். கடும்போர் நிகழ்ந்தது. மூவன் படு தோல்வி அடைந்தான். சேரமன்னன் மூவன் பல்லைப்பிடுங்கித் தனது தலைநகராகிய தொண்டி நகரத்துக் கோட்டை வாயிற்கதவில் அழுத்திவைத்தான். பெருந்தலைச் சாத்தனாரின் சாபம் தான் இதற்கு காரணம் என பலரும் நம்பினர்.

**தந்தையை மிஞ்சிய தனயர்கள்**

புறநானூற்றின் **213**வது பாடல் வஞ்சி திணையில் அமைந்துள்ளது. கோப்பெருஞ்சோழன் குறித்த கதையை தருகிறது.

எயிற்றியனார் என்னும் புலவர் ஒருவர் சோழவளநாட்டில் புல்லாறு என்னும் ஊரிலே புலமையிலே சிறந்து தலைமை பெற்று விளங்கினார். இவர் வேளாண் மரபினர். அறங்கள் பலவற்றையும் திறம்பெற உணர்ந்தவர். கடைச்சங்கப்புலவர்களில் ஒருவர்.

கோப்பெருஞ்சோழன் உறையூரில் இருந்து அரசாட்சி புரிந்து கொண்டிருந்தான். அவனுடைய மக்கள் சிற்றினச் சேர்க்கையால் அறிவு திரிந்து தகப்பனிடத்திலே பகைமை கொண்டு போருக்கெழுந்தனர். அவர்கட்கு அறிஞர்கள் பலரும் கூறிய அறிவுரைகள் எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்காக முடிந்தன. அத்தீய மக்கட்கு இழிஞர்கள் பலர் துணை புரிந்து நின்றார்கள்.

தந்தையை வென்று அரசாட்சியைக் கைப்பற்ற வேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கமாக இருந்தது. தன் மக்களின் செயல் கோப்பெருஞ்

சோழனுக்குப் பெருஞ்சினத்தை உண்டாக்கியது. அவனுக்கு மறமும் மானமும் பொங்கியெழுந்தன. போர் செய்து மக்களைத் தோற்கடிக்க வேண்டுமென்று தந்தையான கோப்பெருஞ்சோழன் முடிவு செய்தான்.

இருபக்கத்தினரும் போரிடுதற்குச் செய்ய வேண்டிய முயற்சி களையெல்லாம் செய்தார்கள். இச்செயல் நல்லறிஞர்களுக்கு அல்லலை உண்டாக்கியது. தந்தையும் மக்களும் போரிடுவது சிரிப்புக்குரிய இடமாயிற்று. இதற்கு என்ன செய்வது என்று அவர்கள் கலங்கினார்கள்.

அறிவற்ற மக்கட்கு அறிவு கூறுவதைவிடத் தந்தைக்கு அறிவு கூறுவதே தக்கது என்று அவர்கள் முடிவு செய்தார்கள். தந்தையும் மக்களும் போரிட்டால் ஏற்படக்கூடிய தீங்குகளையெல்லாம் எடுத்துக் கூறினார்கள். கோப்பெருஞ்சோழன் கூட அறிஞர்களின் அறிவுரையை கேட்கவில்லை. அவன் தன் மக்களோடு போர் புரிதற்குப் புறப்பட்டான்.

எயிற்றியனாரும் கோப்பெருஞ்சோழனும் நெருங்கிப் பழகியவர்கள். மன்னன் வேண்டுகோளின்படி அவ்வரசனுடைய அவைக்களப் புலவராக விளங்கியிருந்தார். அவர் இந்தச் சமயத்தில் அளவு கடந்த மன வருத்தங் கொண்டார். பொல்லா மக்களால் அல்லல் நேர்ந்ததே என்று புலம்பித்தவித்தார். போர் நிகழுமாறு விட்டுவிடின் பெரும்பழி உணடாகுமென்பதை குறித்து வருந்தி எயிற்றியனார் அரசனிடஞ்சென்றார்.

போரின் கண் பகைவரைக் கொன்ற மிகுதி பொருந்திய வலிய முயற்சியை உடைய அரசனே! கடலால் சூழப்பட்ட இந்த உலகத்தின் கண் நின்னோடு எதிர்த்துப் போர் செய்ய வந்த இருவரையும் எண்ணிக் காணுமிடத்தில் அவர்கள் உன் பகையரசர்களாகிய சேர பாண்டியரும் அல்லர். போரின் கண் விரும்பிய காட்சியுடைய நின்னோடு பகையாய் வேறுபட்டெழுந்தவர்கள் உன்னுடைய மக்களே ஆவார்கள். நீ தேவருலகத்தை அடையின் உன்னுடைய அரசாட்சி உரிமை அவர்களுக்கே உரியதாகும். மேலும் நான் கூறுவதைக் கேட்பாயாக! நிலைபெற்ற வலியோடு நின்னுடன்

போருக்கெழுந்த சூழ்ச்சியில்லாத அறிவையுடைய நின் மக்கள் தோற்பின் நினது பெரிய செல்வத்தை வேறு எவருக்குக் கொடுப்பாய்? நீ அவர்க்குத் தோற்பின் நின் பகைவர் மகிழுமாறு பழியை உலகத்திலே நிலை நிறுத்துவாய். ஆகவே நின்னுடைய போர்ச் செயல் ஒழிவதாக! நீ மறுமையைக் காண முயற்சியினை விரைந்தெழுந்து உடனே தொடங்குவாயாக! என்று அறிவுரைகள் பல கூறினார்.

கோப்பெருஞ்சோழன் புலவரின் அறிவுரையை மதித்து, சினத்தின் மிகுதியினால் அறிவுக்கண் மறைபட்டு இழி தொழிலைச் செய்ய எண்ணினோமே என்று உள்ளம் நாணினான். உடனே புறப்பட்டுச் சென்று வடக்கிருத்தல் என்னும் தவத்தினை மேற்கொண்டிருந்து உயிரைவிட்டான்.

**கோப்பெருஞ்சோழனும் பொத்தியாரும்**

புறநானூற்றின் 212, 220, 222 பாடல்கள் பொதுவியல் திணையில் அமைந்துள்ளது. கோப்பெருஞ்சோழன் குறித்த கதையைத் தருகிறது.

பொத்தியார் என்னும் முத்தமிழ் அறிஞர் ஒருவர் அந்தக் காலத்திலே சோழவள நாட்டிலே உறையூரிலே வாழ்ந்திருந்தார். அவர் கல்வியறிவிற் சிறந்தவர். நுண்ணறிவு மிக்கவர். உண்மையும், நேர்மையும் உடையவர். அவருடைய வாழ்க்கைத் துணைவியின் பெயர் விநயசிலை. அப்பெண்ணுடன் இவர் இல்லறத்தை இனிமைபெற நடத்தி வந்தார். அந்நாளில் கோப்பெருஞ்சோழன் என்பவன் உறையூரில் அரசு புரிந்து கொண்டிருந்தான். அம்மன்னன் திருந்திய கல்வியறிவும் பெருந்தன்மையும் பொருந்தப் பெற்றவன்.

கோப்பெருஞ்சோழனும் பொத்தியாரும் ஆருயிர் நண்பர்களாக அமைந்தார்கள். பொத்தியார் நாள்தோறும் கோப்பெருஞ்சோழனது கோ மன்றத்திற்குச் சென்று அழகுபடுத்தினார். அறநெறிகள் பலவற்றை அரசனுக்கு உணர்த்தினார். அறிஞனாக விளங்கிய அரசன் அறிஞர் உரையைக் கேட்டு மேலும் திருந்திய பண்புடையவனாக விளங்கினான். தக்க சமயங்களில் பொத்தியார் கூறிய அறிவுரைகளால் அரசன் பழிச்செயல்கள் பலவற்றிற்கு ஆளாகாமல் தப்பினான்.

அரசன் பல காரணங்களை முன்னிட்டு வடக்கிருந்து உயிர் துறத்தற்கு முடிவு செய்து அவ்வாறே வடக்கிருந்தான். கோப்பெருஞ்சோழனது பெரும் பிரிவைப் பொறுத்து வாழ விரும்பாத பொத்தியார் தாமும் அரசனோடு சென்று வடக்கிருத்தலாகிய தவநிலையை மேற்கொள்ளத் தொடங்கினார். அப்போது பொத்தியார் மனைவி விநயசிலை சூல் கொண்டிருந்தாள். அப்பெண் குழந்தையைப் பெற்ற பின் வரும்படி கூறி அரசன் பொத்தியாரை அனுப்பினான். அரசன் கூறிய உரை தக்க உரையாகப் பொத்தியாருக்குத் தோன்றியபடியால் பொத்தியார் அரசன் கட்டளைப்படி ஊருக்குத் திரும்பினார்.

உறையூர் பொலிவிழந்து பாழடைந்த நகரைப் போல் காணப்பட்டது. உள்ளம் வருந்திய பொத்தியர், பெரிய சோற்றை உண்டாக்கிப் பல ஆண்டுகள் பாதுகாத்த பெரிய களிற்றையிழந்த வருத்தத்தினை உடைய பாகன், அவ்யானை சேர்ந்து தங்கிய இரக்கத்தை உடைய கூடத்தின் கண், கம்பம் வறிதே நிற்கப் பார்த்துக் கலங்கின தன்மையைப் போல, பொன்னால் இயன்ற மாலையை உடைய தேர் வண்மையைச் செய்யும் கிள்ளி போகப்பட்ட பெரிய புகழினையுடைய பழைய உறையூரின் மன்றத்தைப் பார்த்துக் கலங்கினேன் அல்லனோ? என்று கூறிக் கலங்கினார்.

கருவுற்றிருந்த விநயசிலையோடு பொத்தியார் சில திங்கள் தங்கியிருந்தார். அப்பெண் மைந்தன் ஒருவனைப் பெற்றாள். அரசன் கட்டளையை நிறைவேற்றிவிட்டோம் என்று மன நிறைவு கொண்ட பொத்தியார், கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த இடத்திற்குச் சென்றார். கோப்பெருஞ்சோழன் முன்னரே இவ்வுலக வாழ்க்கையை அகன்று சென்றுவிட்டான். அதனைப் பொத்தியார் முன்னரே அறிவாராயினும் இப்பொழுது அவருக்கு வருத்தம் மிகுதியாயிற்று. கோப்பெருஞ்சோழன் பொருட்டு நாட்டம் பெற்றிருந்த நடுகல்லைப் பார்த்துப் புலம்பலானார். பாடியவர்களுக்குக் கொடுத்த பல புகழினையும் உடையவன் கூத்தர்க்குக் கொடுக்கப்பட்ட மிகுந்த அன்பினை உடையவன். அறத்திறமுடையோரால் புகழப்பட்ட நீதி நூற்குத் தக்கவாறு ஆராய்ந்து நடத்திய செங்கோலை

உடையவன். சான்றோரால் புகழப்பட்ட திண்ணிய நட்பினையுடையவன். மகளிர் இடத்திலே மென்மையை உடையவன். வலியோர்களிடத்தில் வலிமையுடையவன். குற்றமற்ற கேள்வியை உடைய அந்தணர்களுக்குப் புகலிடம். அத்தன்மைகளை உடையவன் என்று எண்ணாமல், அத்தகுதி உடையோனை அவ்வாறு கூற்றம் அவனுடைய இனிய உயிரைக் கொண்டு போய்விட்டது. அதனால் வருத்தத்தினை அடைந்த நம்முடைய சுற்றத்தார்களையும் சேர்த்துக் கொண்டு மெய்யுரையை உடைய புலவர்கள்! நல்ல இடத்தினை உடைய உலகம் துன்பத்தை உடையக் கேடில்லாத நல்ல புகழ்ச்சி மாலையைச் சூடி எம்மைப் பாதுகாப்போன் நடப்பட்ட கல்லாயினான் என்று அக்கூற்றத்தை வைவோம் வருவீர்களாக என்று கூறி அரற்றினார்.

அரற்றிய பொத்தியார் நடுகல்லைப் பார்த்து, நீ மகன் பிறந்த பிறகு வருவாயாக என்று கூறி என்னை அனுப்பினாய். என்னுடைய மனைவி புதல்வனைப் பெற்றுவிட்டாள். ஆகவே நான் நீ கூறியவாறு உன்னோடு ஒன்றுபடுதற்கு வந்துள்ளேன். எனக்கு இடம் தருவாயாக என்றார்.

பொத்தியார் வருந்திக் கொண்டிருக்கும் போது, அந்த நடுகல் படீர் என்று வெடித்தது. அசைந்து சிறிது இடங்கொடுத்தது. உடனே பொத்தியார் உள்ளம் மகிழ்ந்தார். அவ்விடைவெளியிலே இறங்கி மறைந்தார். அரசன் உலகத்தில் மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருந்த போது உடன் மகிழ்ந்திருந்த புலவர் அரசன் மறைந்த பிறகு தாம் உலகில் வாழ விரும்பாமல் மறைந்துவிட்டதைக் கண்டு அந்நாள் மக்கள் பொத்தியாரைப் பலவாறு புகழ்ந்து பேசினார்கள். புலவர் நடுகல்லின் இடையே புகுந்து மறைந்த போது பாதி உடலளவில் நின்று, அருளுடைமையினாலே பலருக்கும் நிழலையொத்து உலகத்தார் புகழ்ந்து கூற உலகத்தையாளுந் தன்மை முடியச் செலுத்துதற்கு மறுமையை நினைத்தால் முடிவு போகாமையின் வடக்கிருத்தற்கு அமைத்த சிறிய இடத்தின் கண் இருந்து, உயிர்நீத்தபடியினால் நிலைபெற நடப்பட்ட கல்லான பொழுதும், உடலும் உயிரும் போல் இவ்வுலகில் நட்புக் கொண்டிருந்தவர்கள் உறுதியாக இடங்கொடுப்பார்கள் என்னும்

பொருளமைந்த செய்யுளைப்பாடி மறைந்தார். அப்புதுமையைக் கண்ணாரக் கண்டு பக்கத்திலே நின்றவர்கள் அச்செய்யுளையும் எழுதி உலகிலே நிலைபெறச் செய்தார்கள். இக்கதை சிறந்த நட்பு இறுதிவரை உறுதியாக இருக்கும் என்பதை தெளிவுற விளக்கியது.

**பதிற்றுப்பத்து**

புறநானூறு போல் மூவேந்தர்களையும் குறுநில மன்னர்களையும் பொதுவாகப்பாடாமல் சேரமன்னர்களைப் பற்றி மட்டுமே புகழ்ந்து பாடிய தொகை நூல் இது. ஒவ்வொரு மன்னனைப் பற்றியும்பத்துப்பாடல்கள் வீதம் பத்துச் சேரமன்னர்களைப் பற்றி வெவ்வேறு புலவர்கள் பாடியிருப்பது ஒரு தனிச்சிறப்பாகும். இந்நூலின் இரண்டாம் பத்தின் 11, 14வது பாடலில் கதைக்குறிப்பு இடம்பெற்றுள்ளது.

**சேரலாதனின் வீரம்**

இந்நூலின் (இரண்டாம் பத்து) குமட்டூர்க் கண்ணனார் என்னும் புலவர் சேரலாதனைப் பாடியுள்ளார். சேரலாதனின் வீரத்தை முருகனின் வீரத்தோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

> **“வளிபாய்ந்து அட்ட துளங்கு இருங்கமஞ்சூல்**
> **நளிஇரும் பரப்பின் மாக்கடல் முன்னி**
> **அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்**
> **சூருடை முழுமுதல் தடிந்த பேர் இசை”   (பதிற்.பத்து.11)**

சேரலாதனின் வேலினை ஆசிரியர் குறிப்பிடும்போது இக்கதை கூறப்பட்டுள்ளது.

சிவபெருமானின் புதல்வனான முருகன் அசுரனான சூரபத்மனை அழித்த நிகழ்வு இங்கு கூறப்பட்டுள்ளது. இக்கதையை “கந்தபுராணம்”[30] விரிவாகக் கூறுகிறது.

சூரனுக்கும், முருகனுக்கும் பயங்கர யுத்தம் நடந்தது. அசுரன் பல வடிவங்களில் வந்து முருகன் சார்புடையவர்களைத் துன்புறுத்தினான்.

சக்கிரவாகப் பறவையின் உருவத்தில் சூரபத்மன் தன் அலகினால் பூத வீரர்கள் சேனாபதிகள் ஆகியவர்களைக் குத்தித் தின்றும் சிலரை இறக்கைகளினால் அடித்தும், சிலரை மயங்கிவிழச் செய்தும், சிலரை கோபத்தோடு அலகினால் கொத்தி, வானத்தை நோக்கி விட்டெறிந்தும், சிலரைக் காலினால் மிதித்துக் கிழித்து எறிந்தும் அட்டகாசம் செய்தான். பிறகு அவன் ஆகாயத்தில் விரைவாக வட்டமிட்டபடியே கீழ்நோக்கிப் பறந்து வந்து தேரோட்டியையும், தேரையும் சின்னாபின்னாப்படுத்தி விட்டு, தேரில் கட்டியிருந்த குதிரைகளையும் துன்பப்படுத்தி முருகனின் சக்தி வாய்ந்த அம்புகளை முறியடித்துப் பொடிப்பொடியாக்கினான்.

அவனுடைய கொடிய செய்கைகளையெல்லாம் கவனித்த முருகப்பெருமான், அவன்மீது ஏராளமான கோடிக்கணக்கான அம்புகளைப் பொழிந்தார். ஆனால் அசுரனோ, அந்த அம்புகளையெல்லாம் தன் இறக்கையினால் நன்றாக அடித்தும் மூக்கினால் முறித்தும், கால்களினால் பிளந்தும் சிதறடித்துவிட்டு, அதிவிரைவாக பாதாளம், சமுத்திரங்கள், சக்கிரவாளகிரி, பூமி, மலைகள், நதிகள் ஆகிய இடங்களிளெல்லாம் பறந்து திரிந்தும், மற்றும் ஏராளமான பூத வீரர்களையும் கொன்று குவித்த வண்ணம் முருகப்பெருமானின் தேரின் மேலாகப் பெருத்த ஒலியோடு வட்டமிட்டு பறந்தான். அப்போது தேரிலிருந்து கீழே இறங்கிய முருகன், மயில் வாகனமாக இநதிரன் மாறியிருப்பதைக் கண்டு, அந்த மயிலின் மீது ஏறியமர்ந்து கொண்டு அசுரனைத் துரத்திச் சென்றார்.

அந்த சக்கரவாளப் பறவையின் மீது ஏராளமான அம்புகளைப் எய்து, அது தன் அருகில் வரும் சமயம் பார்த்து அதைக் கத்தியால் இரண்டாக வெட்டிப் பூமியில் தள்ளினார். உடனே அசுரன் அண்டம் வரையில் பெரிதாக வளர்ந்து முருகரை அச்சுறுத்திய வண்ணமே துரத்தி வந்தான். அவன்மீது கூர்மையான ஏழு பாணங்களை முருகன் பொழிந்தவுடன் அசுரன் பெரியகடல் வடிவத்தில் உருமாறி பெரிய அலைகளோடு அவரை எதிர்த்து வந்தான்.

உடனே முருகன் அவன்மீது நூறு அம்புகளை எய்தார். அந்த பாணங்கள் அனைத்தும் அக்னி உருவங்களாக மாறி பெரிய கடலையே வற்றச் செய்துவிட்டன. அதன்பிறகு அசுரன் அக்னி உருவமாக மாற, ஆயிரம் பாணங்களினால் சண்ட மாருதத்தை ஏற்படுத்தி, முருகர் அந்த அக்னித்தீயை அணைக்கச் செய்துவிட்டார்.

அதன்பிறகு அசுரன் கொடுங்காற்றாக உருமாறினான். அந்தக் காற்றின்மீது முருகப்பெருமான் லட்சம் அம்புகளைத் தொடுக்கவும், அந்த அம்புகளெல்லாம் பெரிய பாம்புகளாக வெளிப்பட்டு, அந்தக் காற்றை விழுங்கி ஏப்பம்விட்டுவிட்டன. இப்படியாக அசுரனுக்கும், தேவசேனாபதிக்கும் நான்கு நாட்கள் வரையிலும் பயங்கரமான யுத்தம் நடைபெற்றது. கடைசியில் சுரபத்மன் பிரும்மாதி தேவர்களின் உருவத்தோடும், சமுத்திரம் மேகக்கூட்டம், மிருகக் கூட்டம், நட்சத்திரக்கூட்டம் முதலான உருவங்களோடும், தன் தம்பிகள், புதல்வர்களின் உருவங்களோடும் ஒவ்வொரு இடங்களிலிருந்தும் வெளிப்பட்டு வந்து பூத வீரர்களைப் பயமுறுத்திச் சிதறியோடச் செய்தான்.

அதைக்கண்ட முருகன் அவன்மீது ஆயிரம் கோடி பாணங்களை ஏக காலத்தில் பிரயோகித்தார். அதனால் சூரனுடைய மற்ற வடிவங்கள் அனைத்தும் நாசமாக்கப்பட்டு, அந்த இடத்தில் சூரன் மாத்திரம் தனித்து நின்றான்.

அப்போது சுப்பிரமணியர் அசுரனை நோக்கி அசுரனே, நீ எடுத்த பற்பல வடிவங்களையும் நான் கண்டேன். அதுபோல் என்னுடைய வடிவத்தையும் நீ சற்றுப் பார்க்க வேண்டாமா? என்று கூறி விசுவரூபத்தில் அவன் முன்னே காட்சியளித்தார்.

அப்போது பெரிய மலைகளெல்லாம் அவருடைய பாதத்தின் மத்தியிலும், சமுத்திரங்கள் அவருடைய நுனிக்காலிலும், நட்சத்திரங்கள், மின்னல்கள், நவக்கிரகங்கள் ஆகியவைகளெல்லாம் அவருடைய கால் விரல்களிலும் அடங்கியிருந்தன. அவருடைய ஆடு சதைகளில் முனிவர்களும் சிந்தாமணியும், முழங்கால்களில் வித்யை முதலானவைகளும் துடைகளில்

இந்திரனும் ஐயந்தனும் இருந்தார்கள். அவருடைய இடுப்பின் சந்திகளில் காலனும், யமனும் இரண்டு விலாப்புறங்களிலும் தேவர்களும் இடுப்பில் அசுரர்களும் குறைய பிரதேசங்களில் நாகர்களும் இருந்தார்கள். அவருடைய ஆண்மை அங்கத்தில் அமிர்தம் காட்சியளித்தது. தொப்புளில் உலகங்கள் அனைத்தின் உற்பத்தியும், மார்பில் சாஸ்திரங்கள் அனைத்தும் வீற்றிருந்தன. அவருடைய ஞானம் யக்ஞோப வீதமாக விளங்கிற்று.

அவருடைய மயிற்கால்களில் அநேக கோடி பிரும்மாண்டங்களும் காட்சியளித்தன. உள்ளங்கையில் சுகங்கள் அனைத்தும் இரு கைகளில் பிரும்மாவும் விஷ்ணுவும், கைவிரல்களில் தேவமாதுக்களும், கழுத்தில் வார்த்தைகள் அனைத்தும் வாக்கின் நடுவில் வேதங்களும், பற்களில் அட்சரங்களும், நாக்கில் சிவாகமங்களும் உதட்டில் ஏழு கோடி மகா மந்திரங்களும் அடங்கியிருந்தன. அவருடைய மூக்கில் வாயுதேவனும், கண்களில் சூரிய சந்திரர்களும் இருந்தார்கள்.

அவருடைய காதுகளில் திசைகளும், நெற்றியில் ஓங்காரமும் அடங்கியிருந்தன. இப்படிப்பட்ட சிவபெருமானின் ஸ்வரூபியான முருகப்பெருமான் தமது விஸ்வரூபத்தை எடுத்தும் தேவர்கள் அனைவரும் அவரைக் கைகூப்பித்தொழுது வணங்கி நமஸ்கரித்தார்கள்.

சூரபத்மன் உள்ளத்திலும் ஞானமும் விவேகமும் உண்டாயிற்று. முருகனின் விஸ்வரூப தரிசனத்தை கண்டு பெரிதும் வியந்து மகிழ்ந்த அவன், இப்படிப்பட்ட அசாதாரணமான தேவனை நான் சாதாரண குழந்தை என்று கருதிப் போரிட வந்துவிட்டேனே! இவரோடு யுத்தம் புரிவது என் அறியாமையே ஆகும். ஆனால் அதன் மூலம் எனக்கு பெரும்பேறு கிடைப்பது உறுதியாகும் என்று தனக்குள் பலவாறாகவும் யோசித்துக் கொண்டான்.

அப்போது முருகன், அவருடைய விவேகத்தையும் போக்கிவிட்டுத் தம்முடைய விசுவரூபத்தையும் சுருக்கிக்கொண்டு, முன் போன்ற உருவத்திலே காட்சியளிக்கலானார். உடனே சூரனுக்கும் பழையபடியே துர்புத்தி ஏற்பட,

அவன் அதிக அட்டகாசத்தோடு முருகனை எதிர்த்துப் போரிட முயன்றான். அவன் ஒரு மகா பயங்கரமான வடிவத்தில் உருமாறி தேவர்களைச் சின்னாபின்னப்படுத்தினான்.

உடனே முருகன் தமது வேலாயுதத்தை அவனை நோக்கிப் பிரயோகித்தார். ஆனால் சூரனோ, ஒரு பிரும்மாண்டமான மாமரத்தின் வடிவத்தில் உருமாறி, சகல உலகங்களையும் தனது கிளைகளால் உழுக்கி துன்பப்படுத்தினான். அப்போது அவன் செய்த அமர்களத்தால் பூமி நடு நடுங்கி வெடித்தது. சகல உலகங்களும் இடிந்து தரைமட்டமாகின ஆதி கூர்மமும், எட்டு திசைகளும் அனந்தன் முதலான மகா நாகங்களும் அஞ்சிக்கலங்கின. சமுத்திரங்கள் அனைத்தும் அப்போது ஒன்றாகக் கலந்துவிட்டன. மலைகளும், நட்சத்திரங்களும், நாலாபுறங்களிலும் சிதறி விழுந்தன.

சூரிய சந்திரர்களோ தங்கள் கிரகங்களோடு தேரிலிருந்து குதித்திறங்கி, பூமியில் நாலாபுறங்களிலும் அஞ்சியோடினார்கள். தேவர்களில் சிலர் மேரு மலைக்கும், கைலாச மலைக்கும் ஓடிச்சென்று பதுங்கினார்கள். அப்போது நான்முகனின் சத்தியலோகம் கூட இடிந்து கீழே பூமியில் விழுந்துவிட்டது.

அசுரனுடைய இத்தகைய மாயையைக் கண்ணுற்ற கந்தனின் வேலாயுதமானது, விர்ரென்று கிளம்பிச் சென்று மாமரத்தின வடிவத்திலிருந்த சூரனை இரண்டு கூறுகளாக்கிவிட்டது. உடனே துராத்மாவான அசுரன் மாமர வடிவத்திலிருந்து விரைந்து வெளிப்பட்டு கையில் கத்தியோடு சுயவடிவத்தில் காட்சியளித்தான்.

இத்தகைய சிறப்புமிக்க வேலை ஒத்தது சேரலாதனின் வேல் எதிரே நின்று போர் செய்யும் பகைவரின் உடம்புகளைச் சென்று தைக்கும். பிறரால் துளைத்தற்கரிய மார்பினைத் துளைக்கும் வலிமை பெற்றது என்று புலவர் இக்கதையை உவமையாகப் பயன்படுத்தியுள்ளார்.

இந்நிகழ்வை சங்கப்பாக்கள் பல எடுத்தோதுகின்றன.

***“கடுஞ்சூர் மாமுதல் தடிந்தறுந்த வேலடு போராள” (பரி.9:70–71)***

***“உரவுநீர் மாகொன்ற வென்வேலான்” (கலித்.27:15–16)***

***“இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை***
***அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி***
***அவுணர் நல்வலம் அடங்க, கவிழ் இணர்***
***மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றும்” (திருமுரு:57–59)***

**இரண்டாம் பத்து**

**சேரனின் கொடை**

பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்து பதினான்காவது பாடலில் குமட்டூர் கண்ணனார் சேரலாதனின் கொடைச் சிறப்பை மகாபாரதக் கதையை உவமையாக எடுத்தாண்டு விளக்கியுள்ளார்.

***போர் தலைமிகுத்த ஈர் ஐம்பதின் மரொடு***
***துப்புத் துறைபோகிய, துணிவுடை ஆண்மை***
***அக்குரன் அனைய கைவண்மையையே (பதிற்.14)***

சேரலாதனின் வள்ளன்மை தன்மையைக் குறிப்பிடும் போது கூறப்பட்டது துரியோதனின் நண்பனான கர்ணனின் கொடைக்கு நிகராக கூறப்பட்டது. இக்கதையை “மகாபாரதம்”[31] விரிவாகத் தருகிறது.

பாண்டவர்களும் திருதராஷ்டிர புத்திரர்களும் முதலில் கிருபாசாரியரிடமும் பிறகு துரோணரிடமும் ஆயுதப் பயிற்சி பெற்றார்கள். ஒருநாள் நகர ஜனங்களையெல்லாம் அழைத்து ஆயுதப் பயிற்சி பரீட்சையும் போட்டியும் ஏற்பாடு செய்தார்கள். விழாவில் பெருங்கூட்டம் கூடிவிட்டது. எல்லோரைக் காட்டிலும் அதிக அற்புதமாக அர்ச்சுனன் திறமையைக் காட்டி திரண்டு கூடியிருந்த மக்களைப் பிரமிக்கச் செய்தான். துரியோதனனுக்குத் தாங்க முடியாத பொறாமை பொங்கிற்று.

அச்சமயத்தில் திடீரென்று யாரோ தோள் தட்டிக் கொண்டு வரும் சத்தம் வாயிற் பக்கத்திலிருந்து வந்தது. எல்லோரும் சத்தம் வந்த திசையை நோக்கினார்கள். ஜனக்கூட்டம் வழிவிட்டு விலக ஒளி வீசும் தோற்றம் கொண்ட வாலிபன் ஒருவன் சபையில் நுழைந்தான். அவனே கர்ணன்.

சகோதரன் என்பதை அறியாமல் அர்ச்சுனனைப் பார்த்து, அர்ச்சுனா! நீ என்னவெல்லாம் செய்து காட்டினாயே, அதற்கு மேற்பட்டதாக நான் செய்கிறேன் என்றான்.

இதைக் கேட்டதும் மக்கள் கூட்டம் உடனே எழுந்து ஆரவாரித்தது. துரியோதனனுடைய பொறாமை நிறைந்த மனத்தில் மகிழ்ச்சி தோன்றியது. கர்ணனைக் கட்டித் தழுவிக் கொண்டு, என்னையும் என் அரசாட்சியையும் நீ விரும்பியபடி அமைத்துக் கொள்ளலாம் என்று மெதுவாகச் சொன்னான்.

பிரபுவே! நான் அர்ச்சுனனுடன் யுத்தம் கோரி வந்தேன். நீ காட்டிய பிரியத்துக்கு என்றென்றைக்கும் நன்றியுள்ளவனாக இருப்பேன் என்றான் கர்ணன்.

கர்ணன் அறை கூவியதைக் கேட்டு அர்ச்சுனனுக்குக் கோபம் பொங்கி, கர்ணா சபைக்கு அழைக்கப்படாமல் வந்தவர்களும் கேட்கப்படாமல் போகிறவர்களும் இகழப்படுவார்கள் என்று கொடுமையாகப் பேசினான்.

அர்ச்சுனா இந்தச் சபை எல்லோருக்கும் பொது, உனக்கே உரிமையானதல்ல. ராஜ தருமமும் பலத்தைப் பின் தொடர்ந்து செல்கிறது. வெறும் பேச்சில் என்ன பயன்? பாணங்களைக் கொண்டு பேசு என்றான் கர்ணன்.

இவ்வாறு கர்ணன் அர்ச்சுனனை யுத்தத்திற்கு அழைத்ததும் மக்கள்கூட்டம் குதூகலங்கொண்டு இரண்டு கட்சியாகப் பிரிந்தது.

கர்ணனைப் பார்த்ததும் அடையாளம் கண்டுகொண்ட குந்தி மூர்ச்சை அடைந்தாள். விதுரன் அவளை வேலைக்காரிகளைக் கொண்டு உபசரித்துத் தேற்றினான். அவள் ஒன்றும் செய்யத் தோன்றாமல் திகைத்தாள்.

பிறகு கிருபாசாரியர் கர்ணனைப் பார்த்து பாண்டு புத்திரனும் குருவம்சத்தைச் சேர்ந்தவனுமான அருச்சுனன் சொந்த யுத்தத்திற்குத் தயாராக இருக்கிறான். வீரனே! நீயும் உன் தாய் தந்தையர் யார்? நீ எந்த ராஜகுலத்தை அலங்கரிக்கிறாய் என்பதை எடுத்துச் சொல்வாயாக. குலமும் குலாசாரமும் தெரிந்து கொள்ளாமல் ராஜகுமாரர்கள் சமயுத்தம் செய்யமாட்டார்கள் என்று சொன்னார்கள்.

இந்தச் சொல்லைக் கேட்ட கர்ணன், மழையில் நனைந்து வணங்கிய தாமரை மலரைப்போல் குனிந்தான். முகம் வாடிற்று.

துரியோதனன் உடனே எழுந்து, நான் கர்ணனை அங்க தேசத்தின் ராஜாவாக இந்த கணமே முடிசூட்டச் செய்வேன் என்று சொல்லி பீஷ்மரையும், திருதராஷ்டிரனையும் அனுமதி கேட்டுச் சாமக்கிரியைகளை அங்கேயே வரவழைத்துக் கிரீடம், ஹாரம், சிங்காசனம் முதலியவைகளை எல்லாம் அமைத்துக் கர்ணனை அங்கதேச ராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்வித்தான். அந்த சமயத்தில் அவ்விடத்திலேயே கர்ணனை வளர்த்த தேரோட்டிக் கிழவன் பயத்தினால் நடுங்கிக் கொண்டும் தடி ஊன்றிக் கொண்டும் சபையில் பிரவேசித்தான்.

அவனைப் பார்த்ததும் அங்கதேசாதிபதியாக அபிஷேகம் செய்யப்பட்ட கர்ணன் பிதாவிடமுள்ள மரியாதைக்குக் கட்டுப்பட்டு, வில்லைக் கீழே வைத்துவிட்டுத் தலை வணங்கி நமஸ்கரித்தான். அவனும் புத்திரனே! என்று சொல்லி கர்ணனைக் கட்டிக் கொண்டு அபிஷேக தைலத்தினால் ஈரமாயிருந்த அவன் தலையில் ஆனந்தக் கண்ணீர் சொரிந்து மேலும் ஈரமாக்கினான்.

பீமசேனன் இதைக்கண்டு கொல்லென்று சிரித்து, தேரோட்டியின் மகனே! உன் குலத்துக்குத் தகுந்த குதிரைச் சவுக்கை எடுத்துக்கொள். நீ அருச்சுனனுடன் சமயுத்தம் செய்யத் தகுந்தவனல்லன் என்றான்.

சபையில் பெரிய குழப்பம் உண்டாயிற்று. சூரியன் அஸ்தமனமான விளக்கு வெளிச்சத்தில் எல்லோரும் கூச்சம் போட்டுக் கொண்டு கலைந்தனர். சிலர் அர்ச்சுனன் பெயரையும், சிலர் கர்ணன் பெயரையும், சிலர் துரியோதனன் பெயரையும் அவர் அவர்களுடைய பிரியத்தின்படி சொல்லிக் கொண்டு போனார்கள்.

வெகு காலத்திற்குப் பிறகு, தன் மகன் அர்ச்சுனனுக்குக் கர்ணனால் ஆபத்து வரும் என்று கண்ட இந்திரன் பிராமண வேஷம் தரித்துக் கொண்டு, கொடையாளியாகிய கர்ணனிடம் ஒருநாள் வந்து அவனுடைய கவசத்தையும் குண்டலங்களையும் தானமாகக் கேட்டான். உன்னை மோசம் செய்யவே இந்திரன் இவ்வாறு வந்து கேட்பான் என்று சூரியபகவான் கனவில் வந்து கர்ணனை எச்சரிக்கை செய்திருந்த போதிலும் யாசகனாக வந்து ஒருவன் என்ன கேட்டாலும் மறுக்க இயலாத குணத்தைப் பெற்ற கர்ணன் கத்தியைக் கொண்டு தன் காதுகளையும் விலாப் புறங்களையும் அறுத்து, உடன் பிறந்த குண்டலங்களையும் கவசத்தையும் எடுத்துப் பிராமணனுக்குக் கொடுத்துவிட்டான்.

வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்த தேவராஜன் இவற்றைப் பெற்றுக் கொண்டு யாரும் செய்யக்கூடாத அரிய செயலைச் செய்தாய் என்று புகழ்ந்து நீ விரும்புகிற வரத்தைக் கேள் என்று கூறி வரத்தையும் தந்து சென்றார்.

அக்கர்ணனுக்கு நிகரானவன் இச்சேரலாதன் என்பது புலவர் கூற்று.

இக்கதையின் பயன் சேரமன்னனின் கொடைத்திறம் மக்களுக்கு விளங்கும் வண்ணம் எடுத்துரைக்கப்பட்டது.

**பரிபாடல்**

பரிபாட்டுக்களால் எழுதப்பட்ட நூலுக்கு பரிபாடல் என்று பெயர். ஒவ்வொரு பாடலின இறுதியிலும் இசை வகுத்தது யாரென்று குறிப்பிடப்பட்டுள்ளது. பரிபாடலுக்குச் சிற்றெல்லை 25 அடி பேரெல்லை 40 அடிகள் என்றும் கூறுவர். எட்டுத்தொகை நூல்களுள் அகமும் புறமும் என

இருபொருள்களையும் பற்றிப் பாடப்பெற்றுள்ள நூல் பரிபாடல் மட்டுமே. பரிபாடலில் திருமால், முருகன் குறித்த கதைகள இடம்பெற்றுள்ளன.

**வராக அவதாரம்**

பரிபாடலின் இரண்டாவது பாடல் திருமாலின் வராக அவதாரச் செய்தியைத் தருகிறது.

**''கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய**
***ஊழி ஒருவினை உணர்த்தலின், முதுமைக்கு***
***ஊழி யாவரும் உணரா***
***ஆழி முதல்வ! நிற்பேணுதும், தொழுது'' (பரி.2)***

''பெருமான் எண்ணற்ற பிறப்புகள் எடுத்திருந்தாலும் அவற்றுள் பத்துச் சிறப்பானவை. மீன், ஆமை, பன்றி, ஆளரி குறளன், பரசுராமன், இராமன், பலராமன், கிருஷ்ணன், கல்கி என்பன அப்பத்துப் பிறப்புகள். இவற்றுள் பன்றி, ஆளரி, பலராமன், கிருஷ்ணன் ஆகிய குறிப்புகள் பரிபாடலில் உள்ளன.''[32]

இக்கதையை ''பதினெண் புராணங்கள்''[33] என்னும் நூல் விரிவாக சுட்டுகிறது. திருமாலின் திருவிளையாடல்களுள் ஒன்று மகாவிஷ்ணு வராக வடிவில் அவதாரம் எடுத்து பாதாளத்திலிருந்து தன்னை வெளிக்குக் கொண்டு வந்து காப்பாற்றிய பகவான் விஷ்ணுவை பூதேவி துதி செய்து அவள் கேட்ட கேள்விகளுக்கு அளிக்கப்பட்ட விடைகள் என்பதால் இது வராக அவதாரம் எனப்படுகிறது.

வர+அஹ=வராஹ 'வர' என்றால் மூடுபவர் என்றும் 'அஹ' என்றால் எல்லை இல்லாததற்கு எல்லை நிர்ணயித்தல் என்றும் பொருள். எனவே 'வராஹ' என்றால் உருவற்ற ஒன்றுக்கு எல்லை காண்பவர் என்றும், அதற்கு உறை இடுபவர் என்றும் பொருள்.

ஊழி முடிவில் இருட்டில் மூழ்கி இருந்த உலகை வராகம் உயர்த்தி வெளிக்கொண்டு வந்தது.

பூதேவியின் முறையீட்டைக் கேட்ட பகவான் விஷ்ணு மிகப்பெரிய வராக உருவமெடுத்தார். வராக அவதார எடுத்த பகவான் பூமியைக் காத்திட கடலுக்குள் பிரவேசித்தார்.

பிரஜாபதிகளில் காசியப முனிவரும் ஒருவர். அவருடைய மனைவியரில் ஒருத்தி திதி. அவள் அரக்கர்களின் தாய். ஜயவிஜயர்கள் அவள் வயிற்றில் ஹிரண்யாஷன், ஹிரண்ய கசிபு என்ற இருவர்களாய் உதித்தனர். அவர்களில் இளையவன் ஹிரண்யாஷன்.

அவன் பிரம்மாவைக் குறித்து கோர தவம் செய்தான். அதன் வெப்பம் மூன்று உலகத்தையும் தகிக்கச் செய்தது. அச்சம் கொண்ட தேவர்கள் சத்தியலோகம் சென்று பிரம்மாவைக் கண்டு இரண்யாசன் தவம் பற்றிக் கூறித் தங்களுக்கு அருள் புரிய வேண்டினர். அப்போது பிரம்மா தான் சென்று இரணியாசன் தவத்தை முடிக்கச் செய்வதாகவும் தேவர்களை காப்பாற்றுபவனாகவும் இருப்பதாகக்கூறி அவர்களை அனுப்பி வைத்தார். பின்னர் இரணியாசன் தவம் செய்யுமிடம் அடைந்து அவனுக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்டார்.

அதற்கு அவன் பிறப்பில் தோன்றிய யாரானும், எதானும், எந்த ஆயுதத்தாலும் மரணம் ஏற்படக்கூடாது. தனக்கு மூவுலகத்திற்கும் அதிபதியாகும் வரங்கள் இரண்டும் வேண்டினான். அப்போது பிரம்மா விஷ்ணுவைத் தியானித்து எல்லாம் அவன் செயலே என்று நினைத்து அரக்கன் கேட்ட வரங்களைக் கொடுத்தார்.

வரம் பெற்ற இரணியாசன் மூவுலகங்களையும் வென்று தனக்கு எதிரியாருமின்றி ஆளத் தொடங்கினான். அடுத்து அவன் சத்தியலோகம் அடைந்து பிரம்மனை வெல்ல முயன்றபோது யுக்தியுடன் அவனைச் சமாதானப்படுத்தி உலகநாயகனாகிய விஷ்ணுவை வென்றால் உனக்குச் சமமாக யாரும் இருக்கமாட்டார் என்று கூற விஷ்ணுவின் இருப்பிடம் அடைந்தான் இரணியாட்சன்.

அங்குத் துவாரபாலகர்கள் அவனைத் தடுக்கவில்லை. அவன் வருகை அறிந்து விஷ்ணு பாதாளலோகம் சென்றுவிட்டார். இரணியாட்சன் வைகுந்தத்தில் அனைவரும் விஷ்ணு ஸ்வரூபியாகக் காணப்பட்டனர். செய்வதறியாமல் விஷ்ணுவைத்தேடி பாதாளலோகம் செல்ல முனைந்தவன் வழித் தெரியாமல் தவித்து இறுதியில் தனக்குத் தடையாயிருக்கும் பூமியைப் பாயாகச் சுருட்ட மறைந்தது. அது கண்டு எல்லோரும் ஸ்ரீஹரியிடம் முறையிட்டனர். பூமாதேவி கண்ணீர் மல்கப் பிராத்தனை செய்தாள்.

உடனே பகவான் விஷ்ணு வராகமாக உருவெடுத்தார். குர்குர் என்று சப்தம் செய்தது வராகம் பூமியைப் பாயாகச் சுருட்டிய இரணியாட்சன் மீது பாய்ந்தது. தன் தந்தத்தால் (கோரைப்பல்லால்) குத்தினார். அவன் அதைத் தாங்கமுடியாமல் சமுத்திரத்திலே குதித்து மறைந்தான். அவனை வராகம் தனது கால்களால் பற்றிக்கொண்டு மறுபடியும் தந்தத்தால் குத்தியது. அதனால் அவன் உடனே மரணமடைந்தான்.

அவனால் சுருட்டப்பட்ட பூமியை வராக மூர்த்தி வெளிக் கொணர்ந்து அதனை நிலைப்படுத்தி வைகுண்டம் அடைந்தார்.

வராக அவதாரம் என்னும் இந்த ஓர் ஊழி, திருமாலின் திருவிளையாடலில் ஒரு திருவிளையாடலை மட்டுமே உணர்த்தி நின்றது. ஆதலின் இத்தகைய திருவிளையாடல்களுக்குரிய திருமாலின் தொன்மைக்குரிய ஊழிகள் யாவராலும் அறியப்படாதன என்பதால் அவனது சிறப்புக்களைக் கூறி, முதல்வனாகிய அவனைப் போற்றி வணங்குவோம் என ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**அமிழ்தம் வழங்கிய திருமால்**

இப்பாடலில் இக்கதையைத் தொடர்ந்து திருமால் தேவர்களுக்கு அமிழ்தம் வழங்கிய கதையும் இடம்பெற்றுள்ளது.

**வாயடை அமிர்தம் நின்மனத்தகத்து அடைத்தர,**
**மூவா மரபும் ஓவா நோன்மையும்**

**சாவா மரபின் அமரர்க்காச் சென்றநின்**

**.............................. மரபினோய் நின்அடி (பரி.2)**

இக்கதையை "பதினெண் புராணங்களுள்"[34] ஒன்றாகிய கூர்மபுராணத்தில் இருந்து தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

அமரர்க்கு உணவாகிய அமிழ்தத்தைப் பாற்கடலிலிருந்து கடைந்து அவர்களுக்கு வழங்க வேண்டும் என்று திருமால் தம் திருவுள்ளத்தால் நினைத்து அதனை நிறைவேற்றிய திறம்.

பிரம்மா படைப்பை ஆரம்பித்த பிறகு தேவேந்திரன், ஒருநாள் கொலுவில் வீற்றிருக்க தேவர்கள், கந்தர்வர்கள், மும்மூர்த்திகள், கிம்புருடர்கள் நடனமாடி தேவதைகளின் ஆடல் பாடல் நடைபெற்றது. சிவதாண்டவமும் கூடியது.

அச்சமயம் குபேரன் எழுந்து, எனக்கு நவநிதிகள், இரத்தினங்கள் யாவும் கொடுக்கப்பட்டிருந்தன. இந்திரன் பதவி ஏற்றிட அவையாவும் செலவழிந்துவிட்டன. சிவன் இந்திராதி தேவர்களுக்கும், சூரியன், சந்திரன் ஆகியோருக்கும் என்னிடமிருந்து நிதியை எல்லாம் எடுத்துச் செலவழித்தார் என்று கூறினான்.

அப்போது விஷ்ணு, குபேரனின் கூற்றை ஆமோதித்து, இனி பாற்கடலைக் கடைந்தால் அகண்ட ரத்தினங்களும் மற்றும் அபூர்வ பொருள்களும் கிடைக்கும். எனவே அதற்கான முயற்சியில் ஈடுபடுங்கள் என்று கூறினார். உடனே அனைவரும் பாற்கடல் உள்ள இடத்தில் ஒன்று கூடினர். அரக்கர் கூட்டத்தையும் அனுப்பி வைக்குமாறு பாதாளலோக பலிச் சக்கரவர்த்திக்கு செய்தி அனுப்பினார்.

அப்போது அசரீரி கூறியவாறு மந்திர மலைக்கெதிரில் விசித்திர நிறங்களுடைய ஆமை உள்ளது. அதனைக் கொண்டு வந்து கடலில் விட்டனர். உடனே அது மிகப் பெரிய உருவெடுத்து மந்திர மலையைத் தன் முதுகில் தாங்கிற்று. பின்னர் வாசுகியை நாணாக மலையைச் சுற்றிக் கொள்ளுமாறு

விஷ்ணு கூற, அது தான் தூள் தூளாகி விடுவேன் என அஞ்சிக் கூறிட பகவான் உலகையே தாங்கும் உனக்கு இது ஒரு பொருட்டல்ல என்று கூறினார். ‘உனக்கோர் ஆபத்துமின்றி நான் பார்த்துக் கொள்கிறேன்’ என்றார்.

இவ்வாறு பாற்கடல் கடைவதற்கான எல்லா ஏற்பாடுகளும் நடைபெற, வாசுகி மந்திர மாலையைச் சுற்றிக் கொள்ள அதன் தலை பக்கம் ராட்சசர்களும், வால் பக்கம் தேவர்களும் இருந்து கடைய ஆரம்பித்தனர்.

தேவர்கள், முனிவர்கள், கந்தர்வர்கள் ஆகியோர் விண்ணிலிருந்து பாற்கடலைக் கடைவதைக் காணலுற்றனர். இடையில் கடைவதில் ஈடுபட்டவர்கள் களைப்புற்றனர். அவர்களுக்கு இயலாமை ஏற்பட்டது. எல்லோரும் தேவையான பலம் தந்து இந்தக் கடைவதை வெற்றிகரமாக்குமாறு ஸ்ரீ ஹரியை வேண்டினர்.

அப்போது தேவர்களே இதற்குப் போய் அலுத்துக் கொள்ளலாமா, இது மிக அற்பப்பணி கடல் உள்ளது. மத்து உள்ளது, கயிறு உள்ளது நானிருக்கிறேன். மேலும் முயற்சி செய்யுங்கள் என்றார்.

அவர்கள் மறுபடியும் புது உற்சாகம் பலம் கொண்டு கடைய ஆரம்பித்தனர். அப்போது மலை பலவிதமாக அசைய ஆரம்பித்தது. அப்போது மகாவிஷ்ணு மலையைக் காலால் அழுத்தினார். பின்னர் முழு மனதுடன் முழுமூச்சாய் வேலை நடைபெற்றது.

சிலநேரம் வரை ஒன்றுமே பலன் கிடைக்காததால் பிரம்மா ஜாம்பவானை ஒஷதிகளைக் கடலில் சேர்க்குமாறு கூறினார். பிறகு கடலிலிருந்து ஒரு வெள்ளை ரசம் வெளிவர அதனை பிரம்மா ஒரு தங்கக் கலசத்தில் போட்டு வைத்துக் கொண்டார்.

மேலும் கடைந்திட அதிலிருந்து “ஐராவதம்” என்னும் யானை தோன்றியது. பிறகு மதுரசம் தோன்றியது. அதன் நாற்றம் பொறுக்க முடியாமல் அதனை வெறுத்தனர். அடுத்து சந்திரன் தோன்றினான். உடனே மகாலட்சுமி பிறந்தாள். அவளுக்குப் பின்னால் ரம்பை, மேனகா, திலோத்தமை, கிருதாசி,

ஸகேசி, மஞ்சுகோஷ், சித்திரலேகை முதலிய தேவலோக நடன மாதர்கள் தோன்றினர். பிறகு நிதிகள் தோன்றின.

தினமும் ரத்தினங்கள் சிந்தும் உடலுள் இரண்டு திவ்விய புருஷர்கள் வெளிப்பட்டனர். பிரம்மா அவர்களிருவரையும் லட்சுமி சந்நிதியில் இருக்கச் செய்தார். அவர்கள் குபேரனுக்கு நவநிதிகள் முழுவதும் கிடைக்கச் செய்தனர். பின்னர் உச்சைச் சிரவம் என்னும் வெண் குதிரை தோன்றியது.

அதன்பின் ஒரு தாமரை மொட்டு குடை போல் தோன்றியது. அதிலிருந்து ரத்தினங்கள் கொட்ட ஆரம்பித்தன. அது தான் பிரம்மதண்டம். அடுத்து பிரம்மாவுக்கேற்ற கமண்டலம் வெளிப்பட்டது.

பின்னர் கற்பகதரு, காமதேனு, சூரியமணி சமந்தகமணி, கௌஸ்துபமணி, தேவதத்த சங்கு, புஷ்ப விமானம், நந்திகோஷரதம் ஆகியவை தோன்றின. வெளிப்பட்ட பொருள்கள் மீது ஒவ்வொருவரும் உரிமை கொண்டாட வாதம் செய்யலாயினர். அப்போது சிவபெருமான் இவற்றை எல்லாம் ஓரிடத்தில் பத்திரப்படுத்தி மேலும் கடையுங்கள் என்று கூறினார். கடைசியில் பங்கு போட்டுக் கொள்ளலாம் என்றார்.

இதுபேட்ட அனைவரும் செயல் வீரர்களாகி வேகவேகமாகக் கடைய ஆரம்பித்தனர். அப்போது பயங்கரமான தாளமுடியாத, அதிக வெப்பம் பரவிற்று. அதிலிருந்து விண்ணை முட்டுமளவு சுவாலை எழும்பியது. எவராலும் அதைச் சமாளிக்க இயலவில்லை. அவ்வாறு ஆலகால விசம் தோன்ற அதன் கொடுமையைத் தவிர்க்கும் வழி பற்றி யோசிக்கலாயினர். இந்த விசத்தைச் சமாளிப்பது எப்படி, பணியை நிறுத்தி விடலாமா? என சிவபெருமானிடம் முறையிட்டனர். தேவாசுரர்களின் தீன நிலை கண்டு மகா விஷ்ணு இரக்கம் கொண்டு பெருமழை பொழியச் செய்து வெப்பத்தைத் தணித்தார். விஷ்ணு வெப்பத்தைத் தாங்கி நிற்க அவர் உடல் நீலநிறம் ஆகியது.

இனி என்ன செய்வதென்று அறியாத அனைவரும் பிரம்மனிடம் சென்று வேண்ட அவரும் அவர்களுடன் திருமாலிருப்பிடம் சேர்ந்தார்கள்.

விஷ்ணு அவர்களிடம் இப்போது அனைவரையும் காப்பாற்றக் கூடியவர் சிவபெருமானே என்று கூறி அவர்களைச் சிவனிடம் அனுப்பி வைத்தார்.

அனைவரும் கைலாயம் அடைந்து உமாமகேசுவரர்களிடம் வந்துள்ள ஆபத்தைப் பற்றி, அதாவது ஆலகால விசத்தைப் பற்றிக் கூறித் தங்களைக் காத்தருளுமாறு வேண்டித் துதி செய்தனர்.

என் பக்தர்களுக்கு அபாயமென்றால் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியுமா, எவ்வளவு கஷ்டமானாலும் ஆபத்து ஏற்படுவதானாலும் சரி! என்று கூறி ஆலகால விசத்தை ஏந்தி உட்கொண்டார். அவ்வாறு உட்கொள்ளும் முன் பார்வதியிடம் கூற அவள் பரமன் உட்கொள்வது விசமல்ல, அமுதமாகும் என்று கூறினாள். அருந்திய ஆலகால விசத்தை வயிற்றில் போகவிடாமல் நெஞ்சிலேயே நிறுத்த அது அவர் கழுத்தை நீலமாக்கிவிட்டது. அவரும் அதனால் நீலகண்டன் எனப் பெயர் பெற்றார்.

எனினும் சிவனார் உடல் முழுவதும் பயங்கர வெப்பம் வீசிட பிரம்மதேவன் சந்திரனைச் சிவனார் தலையில் நின்று அவன் அமுத கிரணங்களால் குளிரச் செய்யுமாறு கூறினார்.

மேலும் பிரம்மா கங்கையைச் சிவனார் தலையில் இருந்து உனது பிரவாகத்தால் நனைத்துக் கொண்டிரு. உனது அபிஷேகத்தால் பரமனுக்குச் சாந்தி ஏற்படுத்து என்று கூறினார்.

கைலாயத்தைச் சுற்றிலும் ஒரு ரம்மியான ருத்திரவனம் எனப்பட்ட புஷ்பவனம் இருந்தது. பார்வதி, பரமேச்சுவரர் அதில் உலாவி வந்து சுகம் அனுபவித்தல் வழக்கம். ஒருநாள் சிவபெருமான் அங்கு ஒரு கரடியைக் கண்டு தானும் ஓர் ஆண் கரடியாகி, பார்வதி பெண் கரடியாக இருவரும் ரதி, மன்மதன் சுகம் அனுபவித்தனர். அவர்களுக்கு கரடி முகம் கூடிய மனித உடல் உடைய ஓர் உருவம் தோன்றியது.

அந்தக் கரடி உருவத்தைப் பார்த்து பரமன் நீ சிவாம்சத்துடன் பிறந்தாய். நீ சர்வ சாஸ்திரப் பண்டிதனாய் அச்சமென்பதே அறியாமல் விளங்குவாய் என்று கூறி ஆசீர்வதித்து வரங்கள் அளித்தார். அவனே ஜாம்பவந்தன். அவனைக் கொண்டே சமுத்திரத்தில் ஒஷிதிகள் சேர்க்கப்பட்டு அமிர்தம் கடையப்பட்டது.

பின்னர் அசுரர்கள் கலகம் செய்ய பொருள்கள் பிரித்துக் கொடுக்கப்பட்டது. ஸ்ரீஹரி கூர்ம வடிவை மாற்றிக் கொண்டார்.

பிரம்மா ஸ்ரீ மகாலஷ்மியடம் ரத்னி மாலையைக் கொடுத்து அவளுக்கு இஷ்டமானவர் கழுத்தில் போடுமாறு கூற, அவள் மகாவிஷ்ணுவின் கழுத்தில் அம்மாலையைச் சூடி அவனருகில் சென்று சேர்ந்தார்.

இந்திரன் ஐராவதமும், அப்சரசுகளும் ரத்னகுடையும் பெற்றான். குபேரன் நவநிதிகளைப் பெற்றான்.

கிடைத்த ஏழு குதிரைகள் சூரியன் தேருக்கு அளிக்கப்பட்டன. சமந்தக மணியையும், குண்டலங்களையும் இந்திரனே பெற்றான். கௌஸ்துப மணியை மகாவிஷ்ணுவுக்கு அளித்தனர். வருணன் புஷ்பக விமானத்தைப் பெற்றான். சிவபெருமான் சங்கை எடுத்துக் கொண்டார். கருடக்கொடி உள்ள தேரை ஸ்ரீ ஹரிக்குச் சமர்ப்பித்தனர். மகா சக்கரவர்த்திகளுக்கு கிரீடங்கள், புஜகீர்த்தி, ரத்னஹாரங்களைப் பங்கிட்டளித்தனர். பிரம்மா ஒரு மணியை மட்டும் ஏற்று அணிந்தார்.

அரக்கர்கள் தங்களுக்கு எதுவும் அளிக்காமல் தேவர்களே பங்கிட்டு கொள்வதைக் கண்டு, எங்களுக்கு எதுவும் கொடுக்கவில்லையே என பிரம்மா உங்களுக்குத் தான் அமிர்தம் இருக்கிறதல்லவா அதைப் பெற்றுச் சிரஞ்சீவிகளாக இருங்கள் என்றார்.

இவ்வாறு பிரம்மா சொன்னதும் ராஷசர்கள் அமிர்த கலசத்தைக் கொடுக்குமாறு வற்புறுத்தலாயினர். ஆனால் பிரம்மா அமிர்தம் தேவர்கள், கந்தர்வர்கள், யஷர்கள் என்று பலருக்கும் சமமாக பங்கிட வேண்டும் என்று

கூறினார். இவ்வாறு தகராறு முற்றுவதைக் கண்ட பிரம்மாதி தேவர்கள் ஸ்ரீஹரியிடம் சென்று தங்களுக்கு உதவுமாறு வேண்டினர்.

எல்லோரும் கடற்கரையில் கூடி அமிர்தம் பெறக் காத்திருந்தனர். அப்போது அவர்கள் காதில் ஓர் இனிய கானம் வந்து விழுந்தது. கானம் வந்த திசையில் எல்லோரும் வியப்புற்று பார்க்க ஓர் அழகுசுந்தரி தங்கள் இருக்குமிடத்திற்கு வருவதைக் கண்டனர். இவ்வாறு மகாவிஷ்ணு ஜகன்மோகினி வடிவில் வந்து கொண்டிருந்தார்.

அவள் அழகில் ஈடுபட்டு மெய்மறந்த சிலர் அவள் காலில் வணங்கி வீழ்ந்தனர். அனைவரையும் மோகினி கவர்ந்து இழுத்துத் தன் மாயவலையில் சிக்க வைத்தாள். பின்னர் அவர்கள் முன் உள்ள பிரச்சனை என்ன என்று கேட்க, அவர்கள் அமிர்தப் பங்கீடு பற்றி உரைத்தனர். அப்போது மோகினி தேவர்களைப் பார்த்து, நீங்கள் இப்படி அநியாயம் செய்யலாமா? என்று தேவர்களை வெறுப்பது போலும், அசுரர்கள் பக்கம் சார்ந்து பேசுவது போலும் நடிக்க அதை நம்பிய அசுரர்கள் மோகினியிடம் அவளையே அனைவர்க்கும் அமிர்தத்தைப் பங்கிட்டளிக்குமாறு வேண்டினர். தேவர்களும் அதனை ஆமோதித்தனர்.

பிறகு மோகினி பிரம்மனிடமிருந்து அமிர்த கலசத்தையும், சுரா பாத்திரத்தையும் எடுத்துக் கொண்டாள். பின்னர் தேவர்களை ஒரு பக்கமும், அசுரர்களை மற்றொரு பக்கமும் வரிசையாக உட்காரச் செய்தாள். பின்னர் அசுரர்களைத் தன் மோகனச் சிரிப்பால் வசப்படுத்திக் கொண்டே அவர்களுக்கு சுரா பானத்தையும், தேவர்களுக்கு அமிர்தத்தையும் பங்கிட ஆரம்பித்தாள். மோகினியின் மாயத்தால் அசுரர்களுக்குச் சுரா பானத்திற்கும் அமிர்தத்துக்கும் வேறுபாடு தெரியவில்லை.

ஆனால் அரக்கர்களில் ஒருவன் மட்டும் தனக்கு அமிர்தம் கிடைக்காதென உணர்ந்து தேவர்கள் உருவில் அவர்கள் வரிசையில் அமர்ந்தான்.

இதை யாரும் கவனிக்கவில்லை. ஆனால் விண்ணிலிருந்து பார்த்துவிட்ட சூரியனும், சந்திரனும் இதுபற்றி மகாவிஷ்ணுவிடம் கூற அவர் சக்ராயுதத்தை ஏவி அவன் தலையை வெட்டச் செய்தார். அவன் மரணமடையவில்லை.

தலையும், முண்டமும் வெவ்வேறாக ககனவீதியில் உயிருடன் திரிய பின்னர் அவையே ராகு, கேதுக்களாக மாறி நவக்கிரகங்களில் இரண்டாயின. இதனால் கோபம் கொண்ட அசுரர்களைப் பகவான் அடக்கி பாதாளத்திற்கு அனுப்பினார். தேவர்களுக்கு தேவராஜ்ஜியம் கிடைத்தது. இவ்வாறு திருமால் தேவர்களுக்கு அமிழ்தம் வழங்கியதன் மூலம் அவரின் அருள் தன்மை வெளிப்படுகிறது என்று கீரந்தையார் கூறுகிறார்.

**மாயோன் மகன் பிரம்மன்**

மூன்றாவது பாடலில் திருமாலின் மகன் பிரம்மன் என்னும் கதையைக் குறிப்பாக கடுவன இளவெயினார் கூறுகிறார்.

***“மாநிலம் இயலா முதல்முறை அமையத்து,***
***நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய***
***வாய்மொழி மகனோடு மலர்ந்த***
***தாமரைப் பொகுட்டு நின்நேமி நிழலே!” (பரி.3)***

கதை : இக்கதை “பதினெண் புராணங்களுள்”[35] இலிங்க புராணத்துள் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

மாதவன் உந்தித் தோன்றல் மலரோன் பிரம்மனாவான். மாதவனுக்கும், மலரோனுக்கும் ஏற்பட்ட போட்டி,

ஊழி வெள்ளத்தில் ஆதிசேஷன் மீது நாராயணன் யோக துயில் கொண்டு இருந்தான். நித்திரை கலைந்து எழுந்த பிரமன் உலகை மீண்டும் படைக்க எண்ணுகையில் ஊழி நீரில் மாதவனைக் கண்டார்.

நாராயணன் தானே சகல உலகங்களையும் தோற்றுவிப்பவன் என்றான். ஈரேழு உலகங்களையும், அனைத்து உயிர்களையும் படைப்பவன்

நானே என்றான் பிரம்மன். இருவரில் யார் பெரியவன் என்ற போட்டி துவங்கி சண்டையாக மாறியது.

அவ்வமயம் அங்கே அவர்கள் எதிரில் ஓர் ஒளி தோன்றியது. அதன் அடிமுடி காணப்படாததால் அது என்ன என்று இருவரும் வியப்பில் ஆழ்ந்தனர். அதன் முடியைக் காண அன்னப்பறவை வடிவில் பிரம்மன் புறப்பட, அடியைக் காண வராக வடிவில் நாராயணன் புறப்பட்டான். இருவரும் முடி, அடி காண முடியாமல் களைத்துத் திரும்பி வந்து ஒருவரை ஒருவர் சந்தித்தனர். அவர்கள் அகந்தை அகன்றது. இருவரும் கைகூப்பி அனற்பிழம்பாக, ஜோதிலிங்கமாக நிற்கும் அப்பொருளை வணங்கினர்.

அண்டம் கிடுகிடு என நடுங்குமாறு பேரொலி ஒன்று கேட்டது. அப்போது ஈசானம் தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்திய யோசாதம் என்ற ஐந்து முகங்களுடன் சடையில் பிறைச் சந்திரன் கைகளில் மான் மழுவேந்தி எம்பெருமான் தரிசனம் அளித்தார். இருவரும் வணங்கினர்.

மகிழ்ச்சி அடைந்த ஈசனார் தன் வலப்புரத்தில் தோன்றியவன் மலரோன் என்றும், இடப்புறத்தில் தோன்றியவன் திருமால் என்றும் கூறி இருவரும் தம் மக்களாகிய முருகன், கணபதிக்கு ஒப்பானவர்கள் என்றுரைத்து வேண்டுவதைக் கேட்குமாறு பணித்தார்.

நான்முகன் அவருடைய அருளைப் பெற்ற தனக்கு வேறென்ன வேண்டும் என்று கூறி சிவனாரிடம் என்றும் குறையாத பக்தி அருள் செய்யுமாறு வேண்டினார். அவ்வாறே என்று அருள் பாலித்தார் பரமன்.

மாதவனிடம் பத்ம கற்பத்தில் நான்முகன் அவருக்குப் புத்திரனாக உந்திக் கமலத்தில் தோன்றுவான் என்று அருளினார்.

அதன்படி, திருமால் பிரமனிடம் உலகைப் படைப்பவன் அவன் என்றால் ஈரேழு உலகங்களையும் அவன் உதிரத்தில் காட்ட முடியுமா என்று கேட்டு பிரம்மன் வாய்வழிச் சென்று அவன் வயிற்றில் சகல புவனங்களையும் கண்டு திருப்தி பெற்றவனாய் வெளிவந்தான்.

அப்போது பிரமன் திருமாலிடம் ஐயம் தீர்ந்ததா என்று கேட்டு அவர் வயிற்றிலும் அனைத்து லோகங்களையும் காட்ட முடியுமா என்று கேட்க, திருமால் அதற்கு இசைந்து அவர் வாய்வழியாகச் செல்ல அனுமதித்தார்.

நான்முகன் நாராயணன் வயிற்றை அடைந்து அங்கே சகல உலகங்களையும் கண்டான். பின்னர் திரும்ப எண்ணி மேல் நோக்கிப் புறப்பட, அஃதறிந்த மாதவன் அவர் வெளிப்படாதிருக்க வழியில்லாது செய்துவிட்டார். வெளியில் செல்லும் வழியை அடைய முடியாமல் சுற்றிச் சுற்றிக் களைத்துவிட்டார் பிரமன். அப்போது மாதவன் தொப்புள் குழியிலிருந்து தாமரை மலரின் தண்டைக் கண்டார். தன் உடலை அணுவாக்கிக் கொண்டு தண்டின் வழியே மேலே ஏறி வந்தார். மேலே வந்ததும் மொட்டின் மீது வெளிப்பட்டு மலர்மேல் அமர்ந்தார்.

அப்போது அங்கே சூலம் ஏந்தி சிவபெருமான் தோன்றினார். ஆனால் அவரை அடையாளம் தெரியாமல் பிரம்மன் நான் வெளிவர முடியாமல் வழிகளை மறைத்தது மட்டுமின்றி புதிய தோற்றத்துடன் நிற்கிறாயா நீ என்று திருமாலைக் கேட்பதாக எண்ணி ஈசனிடம் கேட்டார்.

அது கேட்டுத் திருமால் பிரம்மனிடம் அவன் பெருமையை அறிய தானே வழிகளை அடைத்ததாகவும், அவனைத் தன் மகனாக கமலத்தில் இருத்திக் கொள்ளவே அவ்வாறு செய்ததாகவும் மாலவன், மலரவனிடம் கூறினான்.

அப்பொழுது தன் எதிரில் இருக்கும் அப்புருஷன் யார்? என்று பிரம்மன் கேட்க நாராயணன் இவருக்கு நிகர் இவரே! இவரைத் தவிர வேறு தலைவன் இல்லை. சகல உயிரினங்களுக்கும் இவரே உயிராக விளங்குகிறார் என்றார். மாயையால் சூழப்பட்ட பிரம்மனால் ஈசனை உணர முடியவில்லை.

ஒவ்வொரு கற்பத்திலும், பிரம்மன் மாயையால் மயங்கி அலைய, ஈசன் அவர் மயக்கம் தீர அழற்சுடராகத் தோன்றி அருளுகிறார். இனியாவது ஈசனை உணர்ந்து அவரைத் தொழுது அருள்பெறுவாய் என்று மாதவன்

பிரமனுக்கு அறிவுரை வழங்கினார். இருவரும் பக்தியோடு ஈசனைத் துதித்துப் போற்றினர். ஊழிக் காலத்தின் முதல்வன் திருமாலே அவனது மைந்தன் பிரம்மன் என்ற கதைக் குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளது.

**கருடனின் கர்வம் அழித்தவன்**

இந்நூலின் மூன்றாவது பாடலில் திருமாலின் ஊர்தியாகிய கருடனின் ஆணவத்தை அழித்த கதையைக் கூறியுள்ளார்.

***"ஆயிர அணர் தலை அரவு வாய்க் கொண்ட***
***சேவல் ஊர்தியும், செங் கண் மாஅல்***
***ஓ! எனக் கிளக்கும் கால முதல்வனை***
***ஏஎ இன கிளத்தலின் இனைமை நற்கு அறிந்தனம்"   (பரி.3)***

திருமாலின் ஊர்தியாகிய கருடச்சேவல் ஆயிரம் தலைகளுடன் நிலவுலகைத் தாங்கும் ஆற்றலுடைய ஆதிசேடன் என்னும் பாம்பினைத் தன் வாயில் கவ்விக் கொண்ட பேராற்றலுடையது. அக்கருடன், திருமால் அசுரரை வெல்கின்ற காலத்து, அவ்வெற்றி திருமாலுடையதன்று. அவனைத் தாங்கிச் செல்லும் தன்னாலானது என்று தன்னை வியந்து தருக்கி நின்ற போது அதன் தருக்கினை அழிப்பதற்காக நீ என் உடல் முழுதும் தாங்க வேண்டாம். ஒரு கையில் சிறு விரல் துணையளவு தாங்கியினையாயின் நீ கூறியவாறே ஆகும் என்று கூறி விரலை வைப்ப, அதனைத் தாங்க முடியாது பாதலத்து வீழ்ந்து அலறி ஓலமிட்டு நெடுங்காலம் கிடந்து துதித்தான். இக்கதையின் மூலம் கருடனின் ஆணவம் அழிந்தது. இதுமட்டுமல்லாது எல்லாப் பொருட்கும் இறைவன் முதலானவன் என்ற கருத்தும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**கேசி வதம்**

இதே பாடலில் கண்ணனின் தாய்மாமனாகிய கம்சனால் ஏவப்பட்ட அரக்கனை அழித்த நிகழ்வினைக் கடுவன் இளவெயினார் சுட்டியுள்ளார்.

***"கூந்தல் என்னும் பெயரொடு கூந்தல்***
***எரி சினம் கொன்றோய்! நின்புகழ் உருவின, கை"   (பரி.3)***

இக்கதை "பாகவக்கதைகள்"[36] என்னும் நூலில் விரிவாக கூறப்பட்டுள்ளது. கம்சனால் ஏவப்பட்ட கேசி என்னும் அசுரன் ஸ்ரீகிருஷ்ணனைக் கொல்லும் எண்ணத்துடன் குதிரை வடிவத்தில் வந்து குளம்புகளால் பூமியை இடித்தும் பிடரி மயிர்களால் மேகங்களைக் குத்தியும், குதித்தோடும் வேகத்தால் சந்திர, சூரிய வழிகளில் தாவிக் கொண்டும் பெரும் கனைப்புடன் அங்கிருந்த ஆயர்களைத் துரத்தினான்.

இது கண்டு அச்சமுற்ற ஆயர்களும், ஆய்ச்சியரும் ஸ்ரீகிருஷ்ணனைச் சரணடைந்து காத்தருள வேண்டும் என்று பிரார்த்தித்தனர்.

அப்போது கண்ணன் புன் சிரிப்புடன் அவர்களைப் பயப்பட வேண்டாம் என்றும், அற்ப பலம் கொண்டது அது என்றும் கூறினான். மேலும் அவன் பலமற்றவன் சும்மா குதித்து ஆட்டம் காட்டுகிறான் என்று கூறி அவர்களை அமைதியாக இருக்கப்பணித்தான்.

கேசியை நோக்கி 'வா' என அழைத்து அதன் பற்களை உதிர்த்து விடுவதாகக் கூறினான் கண்ணன். அப்போது அக்குதிரை வாயைத்திறந்து கொண்டு கண்ணன் மீது பாய்ந்தது. உடனே கண்ணன் தன் கையை அதன் வாயிலே புகுத்தி, மிகப் பெரிதாக்கினார் கையை. அவன் பற்கள் யாவும் உடைபட்டன. வாய் இரண்டாகக் கிழிக்கப்பட்டது.

இதைக்கண்ட ஆயர்கள் மட்டுமின்றி, தேவர்களும் மகிழ்ச்சி உற்றனர். கேசியின் வதத்தை விண்ணிலிருந்து மறைந்து பார்த்த நாரதர் வெளிப்பட்டுக் கண்ணனைத் துதி செய்தார். பகவானுக்கு இதன் காரணமாக கேசவன் என்ற திருப்பெயர் விளங்கட்டும் என்றும் கூறினார்.

இக்கதையின் மூலம் திருமாலின் வெற்றிச் சிறப்பு எடுத்துரைக்கப்படுகிறது. இக்கதையை கலித்தொகையில் முல்லைக் கலியிலும் கூறப்பட்டுள்ளது.

**"அரிமாவும் பரிமாவும் களிறும் காரமும்" (முல்லை.கலி.103–18)**

**வினதை துயர் துடைத்தோன்**

இதே பாடலில் கருடன் தன் தாயின் துயரைப் போக்கிய கதை கூறப்பட்டுள்ளது.

**"ஏளர் வயங்கு பூண் அமரரை வெளவிய அமிழ்தின**
**பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளினை" (பரி.3)**

அழகுடன் விளங்குகின்ற அணிகலன்களையுடைய தேவர்களால் காக்கப்பட்ட அமிழ்தத்தை, அவர்களை ஒட்டி விட்டுக் கவர்ந்து கொண்டு வந்து அவ்வமிழ்தினால் தன்னைப் பெற்ற தாயாகிய வினதையின் துன்பத்தைப் போக்கிய கருடனை ஊர்தியாக உடையவனே.

கருடன் தன் தாயின் துன்பம் போக்கியது எங்ஙனம் எனில், இக்கதையை "பதினெண்புராணம்"[37] என்னும் நூலில் ஸ்ரீவராகபுராணம் பகுதியில் விரிவாக கூறப்பட்டுள்ளது.

"நாகபஞ்சமி" பாம்புகள் பூசைக்கு உகந்த நாள். பால் வார்த்து பூசிப்பது வழக்கம். பிரம்மா எல்லா விஷப் பாம்புகளையும் உண்டாக்கினார். அவற்றுள் அனந்தன், வாசுகி, கார்க்கோடகன், பதுமன், மகாபத்மன், கம்பனன் ஷங்கன், குளிகன் பாபா, ரஜிதா மற்றும் அபராஜிதா இந்தப் பாம்புகள் மக்களை அழித்து வரவே, தேவர்கள் பிரம்மாவிடம் முறையிட்டனர்.

பிரம்மா பாம்புகளைக் கூப்பிட்டு "நீங்கள் மற்ற உயிர்களை அழிப்பதால் நீங்கள் உங்கள் தாயாராலேயே அழிக்கப்பட்டுவிடுவீர். உங்கள் உயிர்கள் அழிக்கப்பட்டு விடும்" என்றார்.

அப்போது பாம்புகள் "எங்களுக்கு விஷமும், கடிக்கும் குணமும் உங்களாலேயே கொடுக்கப்பட்டன. நாங்கள் எவ்வாறு அதற்குக் காரணமாவோம்? எனவே எங்களுக்குக் கருணை காட்டுங்கள்."

"நாங்கள் வாழ்வதற்காக ஒரு தனி இடம் ஏற்பாடு செய்யுங்கள்." அதன்படி அவை பாதாள, விதல, சுதல லோகத்தில் வசிக்க ஆணையிட்டார்.

பாம்புகளிடம் பிரம்மா ‘‘அடுத்த பிறவியில் காசியப முனிவருக்கும் அவள் மனைவி கத்ருவுக்கும் குழந்தைகளாகப் பிறப்பீர்கள்’’ என வரமளித்தார்.

கத்ருவும், வினுதையும் தஷனது மகன்கள். காசிய முனிவரை மணந்தனர். கத்ரு காசியபரின் வரம் வேண்டி ஆயிரம் விசமுள்ள பாம்புகளைப் பெற்றாள்.

வினுதை, கத்ருவின் குழந்தைகளைவிட சக்தி வாய்ந்த இரண்டு குழந்தைகளை வேண்டிப் பெற்றாள். அவளுடைய இரண்டு கருவில் ஒன்றை அழிக்க முயல குழந்தை முடமாக பிறந்தது. அதன் பெயர் அருணன். அருணன் சூரியனுக்குத் தேரோட்டி ஆனான். இப்படி அருணனுக்கு ஏற்பட்ட நிலையினால் கோபம் கொண்ட அருணன் தாயைக் கத்ருவின் அடிமையாகப் பல ஆண்டு காலம் இருக்குமாறு சபித்தான். மேலும் அருணன் வினுதையிடம் மற்றொரு கரு நன்றாகப் பிறந்து அந்த மகன் தாயை அடிமைத் தளையிலிருந்து விடுவிப்பான் என்றான்.

இந்திரனின் குதிரை கத்ருவும், வினுதாவும் ஒருமுறை அதன் வாலில் நிறம் பற்றி பந்தயம் கட்டினர். வினுதா அது வெள்ளை என்று கூற, கத்ரு அது தவறு அதன் வால் கருப்பு என்றாள். பந்தயத்தில் தான் தோற்றுவிடும் பயத்தால் கத்ரு தன் குழந்தைகளாகிய பாம்புகளைக் குதிரையின் வாலில் சுற்றிக் கொண்டு கருப்பாகத் தோன்றுமாறு செய்யச் சொன்னாள். உண்மையற்ற தாயின் வார்த்தைக்கு சில பணிய மறுக்க, அவற்றைச் சர்ப்ப சத்ர யாகத்தில் அவை அழிக்கப்படும் என்று சபித்தாள் அந்த தாய்.

பந்தயத்தில் தோற்றதால் கத்ருவுக்கு வினுதை அடிமையாக இருக்க வேண்டியதாயிற்று. கத்ரு தன் மக்களால் அக்குதிரையின் வாலை கருமையாக்கி, சூழ்ச்சியால் வினதையை அடிமையாக்கினாள். தேவாமிழ்தத்தைக் கவர்ந்து தனக்குத் தந்தால் வினதையை விடுதலை செய்வதாகக் கத்துரு கூறினாள். வினுதாவுக்கு இரண்டாவதாகக் கருடன் பிறந்தான். பாதி பறவை, பாதி மனித உடல் கொண்டதாயிற்று. கண்களும், நகங்களும் உணவைத்தேடி கிழிக்க உதவும் பறவை போல் அமைந்தன. முகம் வெளுப்பாயிருந்தது. இறக்கைகள்

*சிவப்பு நிறம், உடல் பொன்னிறம் கருடனுக்குச் சர்ப்பங்கள் உணவாகும் என்று பிரம்மா வரமளித்தார்.*

*கத்ருவிடம் தன் தாயின் அடிமைத் தளையைப் போக்க தேவ அமிழ்தம் வேண்டும் என்ற செய்தியை தன் தாயின் மூலம் அறிந்த கருடன், அமிழ்தத்திற்குக் காவலாக இருந்த தேவர்களை விரட்டிவிட்டு அவ்வமிழத்தினைக் கொண்டு வந்து கத்ருவினிடம் தந்து தன் தாயின் அடிமைத் தளையினையறுத்து அவளை மீட்டான் என்பது கதையாகும். இக்கதையின் மூலம்திருமாலின் கொடியில் உள்ள கருடனின பெருமை நன்கு விளங்குகிறது.*

**நரசிம்மவதாரம்**

***"செயிர்தீர் செங்கட்செல்வ! நிற்புகழ்***

**................................................**

***வெடிபடா ஒடிதூண் தடியொடு***

***தடி தடி பல பட – வகிர்வாய்த்த உகிரினை;"*** ***(பரி.4)***

*இந்நூலின் நான்காவது பாடல் திருமால் பக்தனான பிரகலாதனுக்கு துன்பம் விளைவித்த அவனுடைய தநதையாகிய இரணியனை நகத்தால் பிளந்த நரசிம்மவதாரச் செய்தியைத் தருகின்றது. இக்கதையை "பக்த பிரகலாதன்"*[38] *என்னும் நூலிலிருந்து விரிவாக அறிந்து கொள்ள முடிகின்றது.*

*ஒரு சமயம் மகாலெட்சுமி திருமாலிடம் தங்கள் திருவுள்ளம் இவ்வளவு அழகாக கோமளமாகவும் உள்ளதே! ஆனால் இந்த உடம்போடு தங்களால் எப்படி போர் செய்ய முடியும்? என்று கேட்டாள். அதற்குத் திருமால் பெண்ணே! உனக்கு விருப்பமானால் போர் செய்வதை விரைவில் காண்பாய் என்று கூறினார்.*

*அவரது துவார பாலகரான சய, விசயர் என்னும் இருவர் முன்பொரு சமயம் சனத்குமார முனிவர் முதலியவர்களுடன் போராடிய போது திருமால் அங்கே சென்று சய விசயரிடம் நீங்கள் முனிவர்களை வழி மறித்தது தவறு என்று தடுத்து, முனிவர்களை நோக்கி நீங்கள் துவார பாலகர்களைச் சபித்து அவர்கள்*

பதவியிழந்து உலகில் பிறந்து துன்புறும்படி செய்யலாமா? அவர்களுக்கு நீங்கள் கருணை காட்ட வேண்டும் என்றார்.

அதற்கு முனிவர்கள், சுவாமி இவர்கள் உங்களை வழிபடும் பிறவிகளை எடுத்தால் ஏழு பிறவிகளிலும் தங்களைப் பகைக்கும் பிறவிகளை எடுத்தால், மூன்று பிறவிகளிலும் மீண்டும் தங்கள் பதவியை அடைவோம் என்றனர். அதுவே திருமாலின் விருப்பமாகவும் இருந்தது.

உடனே துவார பாலகர்கள் தங்கள் பதவியைத் துறந்து பூமியில் காசிபர் வம்சத்தில் இரண்யாட்சன், இரணிய கசிபு என்ற அரக்கர்களாகப் பிறந்தனர். சனகாதி முதலானவர்கள் நால்வரும் பிரகலாதன் முதலியவர்களாகத் தோன்றனர்.

திருமாலே இரண்ய கசிபனைச் சங்கரித்து சாபவிமோசனம் அடையச் செய்வதற்காக நரசிங்க வடிவெடுத்து வந்தார். இரண்யாட்சன் இளைஞனாக இருக்கும் போதே விளையாடச் சூரியனை அழைப்பான். வனத்திலுள்ள சிங்கம், மதயானைகளையும் பிடித்து அவற்றின் மேல் ஏறி சவாரி செய்வான். அவற்றுடன் சண்டை போடுவான். மிகுந்த பலசாலியாக இரண்யாட்சன் இருந்ததால் தேவர்களையும் துன்புறுத்த எண்ணினான். உலகையே சுருட்டி வாயில் கவ்விக் கொண்டு இதனால் கவலையடைந்த பிரும்மா திருமாலைத் துதித்தார். திருமால் அவருடைய மூக்கிலிருந்து வராக உருவத்தோடு அவதரித்து விரைவில் விருத்தியடைந்து அங்கிருந்து உலகை மீட்கச் சென்றார். உலகமே நீர் மயமாக இருப்பது கண்டு அதில் பிரவேசிக்க நினைத்தார்.

அப்போது நாரதர் சந்தியா வந்தனம் செய்து கொண்டு இருந்தார். அவர் வராகமூர்த்தி வருவதைக் கண்டு வணங்கினார். வராகமூர்த்தி, நாரதரே! நான் இரண்யாட்சன் கண்டு பிடித்து போர் செய்து வெல்லும் வரை இந்த நீரை உலர்த்துவிக்க வேண்டும். இது உம்மால் முடியும் என்றார்.

நாரதர் அதனை ஏற்றுத் தமது இரு கரங்களாலும் தண்ணீரை எடுத்து, தனது வாயிற் பெய்து கொண்டு போர் முடியும் வரை வைத்திருந்தார்.

பிறகு வராகமூர்த்தியும், இரண்யாட்சனும் நீரில் நீண்ட ஆண்டுகள் போர் செய்து இறுதியில் வராகமூர்த்தி அவனைக் கொன்று பூமியை மீட்டுத் தம் வாயில் எடுத்து வந்து பிரம்மனிடம் ஒப்படைத்துவிட்டுத் தம் திருவுருவை மறைத்தார்.

தனது தம்பியான இரண்யாட்சனைக் கொன்ற திருமாலைக் கொல்ல இரண்யகசிபன் உறுதி கொண்டான். அதனால் அவன் பிரும்மாவை எண்ணிப் பத்தாயிரம் ஆண்டுகள் கடுந்தவம் இருந்தான். அதனால் அவன்மீது மரங்கள் தோன்றிப் பெரிதாயின. மரத்தில் பறவைகள் கூடுகட்டிக் குஞ்சுகள் பொரித்தன. அப்போது அவன் தவம் கலையவில்லை. அவனது தவ நெருப்பு தேவலோகத்தைக் கொளுத்தியது. அனல் தாங்காமல் தேவர்கள் பிரும்மாவிடம் சென்று முறையிட்டனர். இரண்யகசிபன், கடுந்தவத்தால் தாங்கள் அழியும் முன்பாக காக்க வேண்டும் என வேண்டினர்.

எனவே, பிரும்மா இரண்யனுக்கு வரங்கொடுக்க எண்ணி அவன்முன் தோன்றி என்ன வரம் வேண்டும்? என வினவினார். அதற்கு அவன் படைப்புக் கடவுளே! நீர் படைக்கும் இந்த உலகினில் எவன் ஒருவனும் எத்தகைய ஆயுதத்துடன் இரவிலோ, பகலிலோ என்னைக் கொல்லக்கூடாது என்று கேட்டான். அவ்வாறே பிரம்மதேவர் வரம் கொடுத்துச் சென்றார்.

இரண்யகசிபன் சோனிதபுரியை அடைந்து அனைவரையும் திரட்டி, அசுரர்களே எம் கட்டளைக்குப் பணிய வேண்டும். மீறினால் அனைவரையும் அழிப்பேன். என்னைப் பணிந்தவர்களைக் காப்பேன். சொர்க்கலோகம், மத்தியலோகம் ஆகியவை நாங்கள் வென்றவை. திரிலோகங்களுக்கும் நானே ஏகச் சக்கராதிபதி. திருமாலுக்கு எதிராக ஆட்சி புரிவேன். இனி எங்கும் யாகங்கள் செய்யக்கூடாது. அனைத்தும் கைப்பற்றிவிட்டேன். போருக்கு வருவோர் வரலாம். சரணடைந்தோரைக் காப்போம். இச்செய்தியை எங்கும் முரசு அறைக என்றான்.

சில காலம் கழித்து, திருமால் மீது கோபம் கொண்ட இரண்யகசிபனுக்கு திருமால் மீது தீராப் பக்தி கொண்ட பிரகலாதன் என்னும் மகன் பிறந்தான். அவனுக்கு ஐந்து வயதானதும் இரண்யகசிபன், இசை முழங்க அசுரர் புடை சூழ வித்தை பயில அரசகுரு இல்லத்திற்கு அழைத்துச் சென்றான்.

ஆசிரியர் பிரகலாதனை 'இரண்யாய நம' என்று சொல்லச் சொன்னார். ஆனால் சிறுவன் அதைக் கூறாமல், 'ஓம் நமோ நாராயணாய' என்றான். அவனது தந்தை பெயரை உச்சரிக்குமாறு குரு பலமுறை வலியுறுத்தியும் மறுத்துவிட்டான். சிறுவனை விரைவில் மன மாற்றம் செய்வதாக குரு உறுதி கூறி அனுப்பி வைத்தார்.

ஆனால், என்றும் திருமால் பெயரையே உச்சரிப்பேன் என்று பிரகலாதன் உறுதியாகக் கூறிவிட்டான். பிரகலாதன் வீடு வந்து சேர்ந்தான். ஒருநாள் இரண்யகசிபன் தனது மகன் பிரகலாதனைத் தொடையில் வைத்துக் கொண்டு, மகனே! இதுவரை என்ன வாசித்தாய்? என்று கேட்டான். ஓம் நமோ நாராயணாய படித்தேன் என்றான். கோபம் கொண்ட இரண்யகசிபன் ஆசிரியரைக் கடிந்து கொண்டான்.

குரு; அசுரகுல அரசே! உனது மகனால் மற்ற மாணவர்களும் கெட்டவராயினர் என்னால் செய்யத்தக்கது யாதும் இல்லை என்றார். பிள்ளையைக் கண்டித்துக் கற்பிக்கும்படி தன் மனைவியிடம் கூறினான். எவ்வளவோ வலியுறுத்தியும் சிறுவனின் மனதை மாற்ற முடியவில்லை. வெறுத்துப் போனவள் மகனைக் கணவனிடம் அழைத்துச் சென்று இவனைத் திருத்தவே முடியாது என்று கூறிவிட்டாள்.

மிகுந்த கோபம் கொண்ட இரண்யகசிபன் அமைச்சர்களை அழைத்து, குலத்தைக் கெடுக்கும் கோடரிக் கொம்பான பிரகலாதனைக் கொன்றுவிடுங்கள் என்றான்.

அமைச்சர்கள் பிரகலாதனுக்குப் பல தண்டனைகள் அளித்தனர். நெருப்பிட்டால் அது அவனுக்குக் குளிர்ந்தது. தண்ணீரில் எறிந்தால் அது

மேடாயிற்று. விசம் தந்தால் அது அமிர்தமாயிற்று. எந்தத் தண்டனையும் பிரகலாதனைப் பாதிக்கவில்லை. அமைச்சர்கள் ஏமாற்றமும், வியப்பும் அடைந்தனர். இரண்யகசிபனிடம் சென்றனர். பிரபு இப்படிப்பட்டவனை நாங்கள் பார்த்ததில்லை, கேட்டதுமில்லை இவனைத் தண்டித்துப் பயனே இல்லை. அன்பால் இவனை மாற்றுங்கள் என்று கூறிச் சென்றனர்.

மகனை எவ்வளவோ அன்பாக அரவணைத்தும் ஒரு பயனும் இல்லை என்றுணர்ந்த இரணியகசிபன் குருவிடம் அனுப்பி இவன் மனதை மாற்றும்படி கூறினார். தந்தையார் எத்தகைய அரசர் என்று குரு பிரகலாதனிடம் கூறினார். அவருக்குப் பிறகு நீயே அரசன், இந்த பிள்ளைகளுக்கு நீயே அரசனாக இரப்பாயாக! என்றும் கூறினார்.

அப்படியானால் நானே இவர்களுக்குப் பாடம் கற்பிப்பேன் என்று கூறிவிட்டு, நாராயணாய நம என்று கற்பித்தான். பிள்ளைகளைத் தனியாக அழைத்துச் சென்று நாராயணமூர்த்தியின் பெருமைகளைச் சொன்னான். பிள்ளைகளும் நாராயண பக்தர்களாக மாறிவிட்டது கண்டு குரு அவர்களைத் தண்டித்தார். அவர்கள் உச்சரிப்பதைக் கைவிட்டாலும் பிரகலாதன் குருவின் தண்டனைக்கு அஞ்சாமல் உச்சரித்து வந்தான். தன் உயிரே போனாலும் கைவிட மாட்டேனென்று கூறிவிட்டான்.

அரசகுரு கடுங்கோபங்கொண்டு பல வகையிலும் தண்டித்தார். அதனால் ஒரு பயனும் இல்லை. மீண்டும் தந்தையிடமே ஒப்படைத்தார். தனது மகனது செயல்களால் இரண்யகசிபன் மிகுந்த கவலை அடைந்தான். மேலும் பல வகையிலும் மகன் மனதை மாற்ற முயன்றான். எவராலும் முடியவில்லை. தானே பல விளக்கங்களை அளித்தான். அதற்கு மகன் பதிலடி கொடுத்தான்.

திருமாலை வணங்கச் சொல்கிறாயே அவனை உன்னால் எனக்கு காட்ட முடியுமா என்று தந்தை கேட்டான். அதற்குப் பிரகலாதன் எங்கும் நிறைந்துள்ளவர் நாராயணமூர்த்தி என்று கூறினான். அப்படியானால் அந்த நாராயணன் இந்தத்தூணில் இருக்கிறாரா? என்று தந்தை கேட்டான். தூணிலும்

இருக்கிறார், இதோ காட்டுகிறேன் என்று கூறி கத்தியால் தூணைக்குத்தி இடித்தான். அப்போது பேரிடி போல் ஒலி உண்டாயிற்று. சந்தியாகால உக்கிரமும் பாதி உடம்பு சிங்க உருவும், பாதி மானிட வடிவாகவும் நாராயணமூர்த்தி கண்டோர் அஞ்சும்படி பயங்கரமாகக் காட்சி தந்தார்.

திருமாலின் நரசிங்க அவதாரத்தைக் கண்ட அசுரர்கள் யாவரும் இரண்யகசிபனின் ஆணைப்படி போரிட்டனர். எதிர்த்தவர்கள் அழிந்தனர். இரண்யகசிபன் தானே நரசிங்கத்துடன் கடும்போர் புரிந்தான். பூமி நடுங்கியது. கடல்கள் கலங்கின. வானிலிருந்து நட்சத்திரங்கள் உதிர்ந்தன. பெரும் போர் நடந்தது. கொடுமை மிகுந்த இரண்யனை வரத்தின்படி சம்காரம் செய்யத் தக்க சமயம் என்று நரசிங்கமூர்த்தி திருவுள்ளம் கொண்டு அவனைக் கொன்று குடலை மாலையிட்டார்.

சகல தேவர்களும் பார்த்துக் கொண்டிருக்க இரணியன் மாண்டான். தேவர்கள் மகிழ்ச்சியடைந்து மலர்மாரி பொழிந்து நரசிங்கமூர்த்தியைத் துதித்தனர். எங்கும் யாவரும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தார்கள். பிரகலாதன் மிகவும் களிப்படைந்தான். இவ்வாறு தன் அன்பனின் வருத்தத்தைத் திருமால் போக்கினர்.

**முருகனின் பிறப்பு**

**“ஆதி அந்தணன் அறிந்து பரிகொளுவ**
**வேதமா பூண் வையைத்தேர் ஊர்ந்து**
**.....................................................**
**ஒருவனை வாழி ஓங்குவிறல் சேஎய்” (பரி.5)**

பரிபாடலில் ஐந்தாம் பாடல் முருகனின் பிறப்பு வரலாறு குறித்த கதையை விளக்குகிறது.

நான்முகனாகிய அந்தணன் வேதங்களாகிய குதிரைகள் பூட்டப்பட்ட பூமியாகிய தேரைச் செலுத்தும் பாகனாகித் தேரைச் செலுத்தும் முறையறிந்து செலுத்தினான். சிவபெருமான் அத்தேரில் ஏறிச்சென்று,

வெள்ளி, பொன், இரும்பு ஆகிய மூன்று வகையில் அமைந்த முப்புரம் என்னும் மூன்று மதில்களை, இமய மலையையே வில்லாகவும், வாசுகி என்னும் பாம்பினை நாணாகவும் கொண்டு ஆற்றல் மிக்க ஒரு தீ அம்பினால் எரிந்து சாம்பலாகும்படியும் திசைகள் வெதும்பும்படியும் அழித்தான்.

தக்கன் அமரர்க்குச் செய்த வேள்வியில் இடப்பட்ட அவியுணவினை உண்டவனும், சினத்தால் பொன்னிறக் கண்ணையுடையவனுமாகிய அச்சிவபெருமான் இமவான் மகளாகிய உமையம்மையோடு புணர்ந்து காமத்தை நுகர்கின்ற திருமண நாளில் அமையாத புணர்ச்சியை இந்திரன் வேண்டுகோளுக்கேற்ப ஒரு நாளில் தவிர்ந்தான்.

நெற்றியின் நடுவில் அமையாத நெருப்புக் கண்ணையுடைய அச்சிவபெருமானிடத்தில் அமரர் தலைவனாகிய இந்திரன் சென்று, உனது புணர்ச்சியினால் தோன்றிய கருவினை அழிப்பாயாக என்று ஒரு வரத்தினை வேண்டிப் பெற்றான். தீயினைக் கக்குவதும் என்றும் அழியாத தன்மையுடையதுமான மழுப்படையினைக் கையில் உடையவனான அச்சிவபெருமான் வாய்மை தவறாதவனாதலின், நூறு வேள்விகளைச் செய்து அமரருக்குத் தலைவனும் ஒளிவிடும் மணிகளால் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்தவனும் ஆகிய அவ்விந்திரனுக்குத் தான் அளித்த வரம் செய்வதற்கு அரியது என்று அதனை மறுக்காதவனாய் இவ்வுலகங்கள் ஏழும் தனது வாய்மை தவறாத செயலைக் கண்டு வியந்து நிற்க, தனது கருவின் உருவினைச் சிதைத்துப் பல துண்டுகளாக்கி இந்திரன் கையில் கொடுத்தான்.

சிவபெருமான் அளித்த சிதைந்த கருவைப் பெற்றுக் கொண்ட இந்திரனிடத்திலிருந்து ஏற்றுக் கொண்ட ஏழு முனிவர்களும் பிளந்து துண்டுகளாக்கப்பட்ட இக்கரு ஆறுமுகமுடைய மைந்தனாகி அமரர் படைக்குத் தலைவனாகும் என்பதைத் தமது தவத்தின் வலிமையால் பெற்ற ஞானத்தால் உணர்ந்து கொண்டனர்.

அம்முனிவர்கள் சிவபெருமான் சிதைத்துக் கொடுத்த கருத் துண்டுகளைத் தீயே தாங்கட்டு என்று ஒன்றாகச் சேர்த்து வேள்வித்

*தீயிலிட்டனர். வேள்விக் குண்டங்களில் மூவகைத் தீயினாலம் கொள்ளப்பட்ட அவிப்பாகத்துடன் சேர்ந்து எச்சிலாகிய அவற்றை வானின் வடதிசையில் உறைகின்ற ஒரு மகளிருள் கடவுட்கற்பினையுடைய ஒரு மீனாகிய அருந்ததி ஒழிந்த விளங்குகின்ற மற்றைய கார்த்திகை மகளிராகிய அறுவரும் அப்பொழுதே உண்டனர்.*

*அவ்வாறு உண்ட முனிவர்களது மனைவியர் தம் கணவர் வேண்டிக் கொண்டதனாலேயே உண்டனராதலின் அவர்களது கற்புடைமைக்கு இழுக்கில்லை என்பதால் குற்றமற்ற கற்பினையுடைய அம்மகளிர் அறுவரும் உன்னைத் தங்கள் வயிற்றில் வளரும் கருவாகத் தாங்கிக் கொண்டனர். மலைகளில் மிக உயர்ந்து ஓங்கியதாகிய இமயமலையில் நீலப்பூக்களையுடைய பசுமைமிக்க சரவணம் என்னும் பொய்கையில் தாமரைப் பூவாகிய பள்ளியுள் ஆறு மகளிரும் ஒரு சேர உன்னை பெற்றெடுத்தனர் என்று முன்னோர் கூறுவர். பெருமைமிக்க புகழுக்குரிய முருகப்பெருமானே உன்னைக் கார்த்திகை மகளிர் பெற்ற அப்பொழுதே பிறர்க்கு அரிதானதும் யாவரும் விரும்புதற்குக் காரணமானதுமாகிய சிறப்பினையுடைய அமரர் தலைவனாம் இந்திரன் பகைமிகக் கொண்டு முனிவர்கட்குத் தான் கருவினைக் கொடுத்ததையும் வரம் அளித்ததையும் மறந்து நெருப்பினை உமிழும் தனது வச்சிரப்படையினால் வெட்டினான். முன் ஆறு துண்டுகளாக இருந்தவை ஆறு வடிவமாகிப் பின் ஆறும் சேர்ந்து ஒரே உருவமாக, ஒருவனாக நீ ஆனாய்! ஆற்றல் பொருந்திய சிவபெருமான் மைந்தனே, அவ்வாறு நீ ஒருவனானபோதே இந்திரனை வென்று உயர்ந்த வெற்றிச் சிறப்புடையவன் ஆனாய், நீ வாழ்க என வாழ்த்தினார்கள்.*

**தேவந்திரனின் மருகன்**

*பரிபாடல் ஒன்பதாவது பாடல் முருகன் தேவசேனையை மணந்தது குறித்தும், அவளை மணந்தபின் வள்ளியை முருகன் கூடியதால் அவளுக்கு ஏற்பட்ட துன்பத்தை குன்றம் பூதனார் உவமையாக கூறுகிறார்.*

**மைஇரு நூற்று இமை உண்கண் மான்மறி தோள் மணந்த ஞான்று**
**இருநூற்று மெய்ந் நயனத்தவன் மகள் மலர்உண்கண்     (பரி.9)**

மேற்கூறிய கதைக் குறிப்பின்படி முருகன் தேவசேனையை மணந்தது குறித்து "கந்தபுராணம்"[39] என்ற நூலில் விரிவாக கூறப்பட்டுள்ளது. சூரபத்மனைச் சம்காரம் செய்து, தேவர்களால் வணங்கி நமஸ்கரிக்கப்பட்ட முருகப்பெருமான், வீரவாகுவை நோக்கி, வீரனே! அசுரனுடைய சிறைச்சாலையில் அடைபட்டிருக்கும் ஜயந்தன் முதலான தேவர்களை விடுவித்து, விரைவில் இங்கே அழைத்து வா என்று கட்டளையிட்டார்.

அவ்வாறே வீரவாகு சிறையிலிருந்த தேவர்களை விடுவித்து முருகரின் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தினார். தேவர்கள் முருகனை வணங்கித் துதித்தனர். அவர்களை நோக்கி முருகப்பெருமான், நீங்கள் முன்போல உங்கள் பதவிகளில் அமர்ந்து, சுவர்க்க போகங்களை அனுபவித்துக் கொண்டு ஆனந்தமாக இருங்கள்! என்று திருவாய் மலர்ந்தருளினார். பின்னர் தேவர்கள் தேவேந்திரனை வணங்கினர். யுத்த களத்தில் மாண்ட பூத கணங்களையும் வீரர்களையும் பெருமான் உயிர் பெற்றெழச் செய்தார். அவர்கள் பெருமானை வணங்கித் துதித்தனர்.

பெருமான் ஏவலால் வீரமகேந்திரம் கடலில் மூழ்கியது. அதன் பின்னர் பெருத்த இசைக் கருவிகளுடன் முருகப்பெருமான் தேவர்கள் புடைசூழத் திருச்செந்தூர் வந்தடைந்தார். மயில் வாகனத்திலிருந்து இறங்கித் திவ்வியமான சிம்மாசனத்தில் அமர்ந்தார். முருகப்பெருமான் மறுநாள்காலை வீரர்களோடும் சேனாதிபதிகளோடும் அங்கிருந்து புறப்பட்டார். தேவர்களும் முனிவர்களும் குடைகளும் சாமரங்களும் இசைக்கருவிகளும் புடைசூழத் திருப்பரங்குன்றம் வந்து சேர்ந்தனர்.

சண்முகப்பெருமான் தேவதச்சனை அழைத்துத் தனக்குச் சிறந்த நகரத்தை அமைத்துக் கொடுக்க ஏவினார். அவ்வாறே விஸ்வகர்மாவும் ஓர் அதி அற்புதமான திவ்விய நகரத்தை விரைவில் நிர்மாணித்துக் கொடுத்தான்.

அப்போது தேவேந்திரன், பிரம்மா – விஷ்ணு முதலான தேவர்களை நோக்கி, என்னுடைய புத்திரியைச் சிவகுமாரனாகிய முருகப்பெருமானுக்குத் திருமணம் செய்து வைக்க நான் பெரிதும் விரும்புகிறேன்! என்று கூறினான். அதைக்கேட்ட அனைவரும் மகிழ்ந்தனர். அதன்படி இந்திரன் சேவகர்களை அனுப்பி இந்திராணியையும் தேவயானையையும் அழைத்துவரச் செய்தான்.

இந்திராணி விடுதலை பெற்ற தன் மைந்தன் சயந்தனைக் கண்டு மகிழ்ந்தார். திருமணம் நடைபெறப் போவதைக் கேட்டு அனைவரும் அக மிக மகிழ்ந்தனர். தேவேந்திரன் முருகப்பெருமானை நோக்கி, கருணாமூர்த்தியே! தாங்கள் கொடிய பாதகர்களான சூரபத்மன் முதலான அசுரர்களைக் கொன்று எங்களுடைய பதவிகளில் எங்களை மீண்டும் அமர்த்தி விட்டீர்கள் என்ன கைம்மாறு செய்யவல்லோம். என்னுடைய அருமைப் புதல்வியைத் தாங்கள் கைப்பிடித்து மனைவியாக்கிக் கொள்ள வேண்டும். இதுவே என் வேண்டுகோள்! என்று வேண்டினான். அப்படியே ஆகட்டும். நாளைய தினம் நல்லநாள். விரைந்து ஆவன செய்க! என்றார் சண்முகப்பெருமான்.

இந்திரன் தேவ சிற்பியைக் கொண்டு ஓர் அழகான கல்யாண மண்டபத்தையும் திருமணத்திற்கு வேண்டிய வசதிகளையும் செய்தான். நாலா திசைகளிலிருந்தும் தேவர்கள், முனிவர்கள் முதலானோர் திருமணத்தைக் காண வந்து குழுமினர்.

அங்கு வந்திருந்த இராஜகுலப் பெண்மணிகளும் தேவ மங்கைகளும் கல்யாணப் பெண்ணாகிய தேவயானையைத் திவ்விய ஆபரணங்களாலும், வஸ்திரங்களாலும் அதியற்புதமாக அலங்காரம் செய்தார்கள். இந்திரன் முருகரின் மாளிகைக்குச்சென்று தயாநிதியே! இந்த முகூர்த்த நேரம் சிறப்பானது. ஆகையால் தாங்கள் திருமணம் புரிந்து கொள்வதற்காக என்னுடைய இருப்பிடத்திற்கு வருகை தந்தருள வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டான்.

முருகப்பெருமான் மகிழ்ச்சியோடு மயில்வாகனத்தின் மீது ஏறி அமர்ந்தார். பிறகு அவர் லட்சத்து ஒன்பது வீரர்களோடும், தேவர்களோடும், பிரம்மா, விஷ்ணு முதலான தேவசிரேஷ்டர்களோடும் அங்கிருந்து புறப்பட்டுத் தேவேந்திரனின் திருமண மாளிகையை நோக்கிச் சென்றார். குடை, கொடி, சாமரம் முதலிய விருகளோடும் இன்னிசை வாத்தியங்களோடும், தேவமாதர்களின் நடனத்தோடும் ஊர்வலம் சென்றது.

இத்தகைய கோலாகல வைபவங்களோடு ஸ்ரீ முருகப்பெருமான் ராஜவீதிகளைக் கடந்து மாளிகைக்கு வந்து சேர்ந்தார். அப்போது அவருக்கு இலட்சுமிதேவியும், சரஸ்வதி தேவியும் மங்கள ஆரத்தி சுற்றி, மங்களகரமான பாடல்களைப் பாடினர். முருகப்பெருமான் மயில் வாகனத்திலிருந்து இறங்கிச் சகலமங்கள வாத்தியங்களும் பெரு முழக்கமிடக் கல்யாண மண்டபத்தை நோக்கிச் சென்றார்.

இந்திராணி தன் மாப்பிள்ளையாகிய முருகரை வணங்கி, அவருடைய திருவடிகளைப் பாலினால் கழுவி நறுமண மலர்களைக் கொண்டு அர்ச்சனை செய்து, தீப ஆரத்தியையும் சுற்றினாள். இவ்வாறு பாதபூஜை நடந்தது.

முருகப்பெருமான் தங்கப் பாதுகைகள் அணிந்து கொண்டு, திருமண மண்டபத்திற்குள் நடந்து சென்று, சிம்மாசனத்தின் மீது அமர்ந்தார். அருகிருந்து தேவர்களும், வீரர்களும் உபசாரங்கள் செய்தனர். பரமசிவனும் பார்வதிதேவியும் தங்கள் அருமைக்குமாரனின் திருமண வைபவத்தைக் கண்டுகளிப்பதற்காக வானவெளி மார்க்கமாகத் திருமண மாளிகையை வந்தடைந்தனர்.

உடனே முருகப்பெருமான் ஆசனத்திலிருந்து இறங்கி வந்து தன் பெற்றோர்களைப் பக்திப் பெருக்கோடு வணங்கித் துதித்தார். பெற்றோர் மகிழ்ந்தனர். தேவர்கள் சிவபெருமானை வணங்கி வழிபட்டனர். இலட்சுமி, சரஸ்வதி ஆகியோரின் அரவணைப்புடன் தேவயானையைக் கல்யாண மண்டபத்திற்குத் தேவேந்திரன் அழைத்து வந்தான்.

தேவயானை மாமனார், மாமியார் ஆகியோரை நமஸ்கரித்தாள். மணமகனைப் பார்த்துத் தலைகுனிந்தாள். பார்வதிதேவியார் மருமகளை அன்போடு அழைத்துச் சென்று தன் மகனின் பக்கத்தில் உட்கார வைத்தார். மணமக்களைக் கண்டு அனைவரும் பெருமகிழ்ச்சியுற்றனர். இந்திராணியும், இந்திரனும், மாப்பிள்ளைக்குப் பாதபூஜை செய்தனர். என்னுடைய அருமைப் புத்திரியான இந்தத் தேவசேனை முருகப்பெருமானின் அருமை மனைவியாவாள்! என்று சொல்லித் தாரை வார்த்தான் இந்திரன். பிரம்மதேவன் கொடுத்த மங்கல நாணை முருகப்பெருமான் தேவயானையின் கழுத்தில் கட்டி மாலைகளையும் மாற்றிக் கொண்டார்.

நான்முகன் அக்கினிவளர்த்து, அதில் சமித்து அன்னம், நெய் ஆகியவை வார்த்து விதி முறைப்படி ஓமம் செய்தார். அதன்பிறகு தீ வலம் வருதல், அம்மி மிதித்தல், அருந்ததி காணல் முதலிய சடங்குகள் நடைபெற்றன. மணமக்கள் பரமசிவன் பார்வதியை வலம் வந்து நமஸ்கரித்தனர். அவர்களுடைய ஆசியைப் பெற்றனர்.

அதன்பின்னர் முருகப்பெருமான் பத்தினியோடு தம் இருப்பிடத்தை நோக்கிச் சென்றார். தேவர்கள் அனைவரும் விடைபெற்றுச் சென்றனர். தேவேந்திரன் அவர்களுக்கு ஆடை அணிகலன்களை அளித்து மகிந்தான்.

**வள்ளி மணாளன்**

இதனை அடுத்து முருகன் வள்ளியின் மணவாளன் என்ற கதைக்குறிப்பு பரிபாடல் ஒன்பது, பத்தொன்பதாவது பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கதையை விரிவாக ‘‘பதினெண் புராணங்களுள்’’[40] கந்தபுராணம் விரிவாக விளக்குகிறது.

***‘‘நிலவரை அழுவத்தான் வான்உறை புகல்தந்து***
***புலவரை அறியாதபுகழ் பூத்த கடம்பு அமர்ந்து***
***அருமுனிமரபின் ஆன்றவர் நுகர்ச்சி மன்***

***இருநிலத்தோரும் இயைக! என, ஈத்தநின்***
***தண்பரங்குன்றத்து, இயல்அணி, நின்மருங்கு***
***சாறுகொள் துறக்கத்தவளோடு***
***மாறு கொள்வது போலும், மயிற்கொடி வதுவை" (பரி.19)***

*விண்ணுலகப் பெண்ணான தேவசேனையை மணந்து இந்திரனுக்கு மருகனாற் போல இம்மண்ணுலகத் தார்க்கும் மருகனாதற் பொருட்டாய் குறத்தியாம் வள்ளியை மணந்தார்.*

*பூர்வத்தில் திருமாலின் புத்திரிகளாகத் தோன்றிய அமுதவல்லி, சுந்தரி என்ற இருவரும் முருகக் கடவுளை மணந்து கொள்ளும் பொருட்டுச் சரவணப் பொய்கையில் அருந்தவங்கள் செய்தனர். முருகக்கடவுள் அவர்களுடைய தவத்துக்கு உவந்து, அங்கு வந்து அமுதவல்லி! நீ வானுலகில் இந்திரனை அடைந்ததும், சுந்தரி! நீ பூமியல் ஒரு முனிவனுக்குப் புத்திரியாகப் பிறந்து வேடரைச் சார்ந்தும் விளக்குக. நாம் நுமது கருத்தை நிறைவேற்றுவோம்! என்று சொல்லிச் சென்றனன்.*

*அந்த மொழிப்படியே அமுதவல்லி வானுலகத்தை அடைந்து ஐராவதம் என்னும் தெய்வயானையால் தேவேந்திரனிடத்துச் சேர்ந்து, 'தெய்வயானை' என்று பேர் பெற்றுத் தேவேந்திரனால் வளர்க்கப்பட்டு, முருகக்கடவுளை மணந்தாள்.*

*மற்றொருத்தியாகிய சுந்தரி அக்னிப் பிரவேசம் செய்து, தன்னுடம்பை ஒழித்துச் சூட்சம சரீரத்துடன் மேற்பாடி ஊரையடுத்த ஒரு மலையில் தவஞ்செய்து கொண்டிருந்தாள். அங்கு முன்னமே பெருந்தவம் புரிந்து கொண்டிருந்த சிவமுனி என்பான் அழகிய பெண் மான் ஒன்று தன் முன்வர அதனைக் கண்டு காதல் கொண்டு கண்ணினால் நோக்கினான். அந்தப் பெண்மான் கருவுற, சுந்தரி அந்தக் கருப்பத்தில் புகுந்து, கருவுயிர்க்குங் காலத்து அந்த மானினால் வள்ளிக் கிழங்கு அகழ்ந்தெடுத்த பள்ளத்தில் மானுடப் பெண் வடிவத்தில் கருவுயிர்க்கப்பட்டு பிறந்தாள். வள்ளிக் குழியில் தோன்றிய காரணத்தால் வள்ளியெனப் பெயர் பெற்றாள்.*

தொண்டை நாட்டில் மேற்பாடி என்பது ஊர். அதன் பக்கத்தில் உள்ளது வள்ளிமலை. முருகக்கடவுள் தனது தெய்வத்தன்மை மறைந்து நிற்கச் சாதாரண மானுடன் போலப் பல நாள் பெண் காதல் கெண்டிருக்கும்படி வள்ளியம்மையைத் தன்னிடம் தோற்றுவித்த அந்த மலையன் பெருமையை எனனென்று கூறுவது? வள்ளியைத் தோற்றுவித்தமையால் அம்மலை வள்ளிமலை எனப்பெயர் பெற்றது. அந்த மலை நாட்டூரில் வாழ்ந்த வேடர் தலைவனான நம்பி என்பான் பல புதல்வர்களைப் பெற்றமையால் ஒரு பெண் மகவைப் பெறவேண்டுமென்று தெய்வத்தை வேண்டிக் கொண்டான். ஈன்ற தாய் மான் மருண்டோடிய பின், பிறந்த பெண் மகவு இன்னிசைப்பட அழுதது அச்சமயத்தில் நம்பிராஜன் தன்மனைவியுடனும் பரிசனங்களுடனும் புனத்துக்கு வந்தான். நம்பி அங்கு வள்ளிக்குழியில் ஒரு பெண் மகவைக் கண்டெடுத்துத் தன் மனைவி கையிற் கொடுத்தான்.

குழந்தையைப் பெற்ற எயிற்றி மகப்பெற்றாள் போன்று மகிழ்வு கொண்டு சுரந்த முலைப்பாலை ஊட்டினாள். தாய், கருக்கொண்டுள்ள போதில் மயற்கையெனப்படும் வயாவையும், ஈனும் வருத்தத்தையும், அடைந்து பின் மகவைப்பெற்று மகிழ்தல் இயற்கை. இந்த நம்பியின் மனைவி வயாவும் வருத்தமும் அடையாதவளாயிருப்பினும் அவற்றையடைந்து, பின் மகவைப்பெற்ற தாய் போல் அந்தப்பெண் மகவை விரும்பி மகிழ்ச்சியடைந்து தன் முலையிற் சுரக்கும் பாலை அந்தக் குழந்தைக்கு ஊட்டினாள் என்று ஆசிரியர் விளக்குகின்றார். அந்தப் பெண் குழந்தைக்கு முதியோர் வள்ளியெனப் பெயரிட்டனர். வேடுபர் பருவம் வாய்ந்த சிறு பெண்களைத் தினைப்புனத்தில் காவலாக வைக்கும் முறைப்படியே வள்ளியின் பெற்றோர் அவளைத் தக்க பருவம் வந்ததால் தினைப் புனத்தைக் காக்குமாறு ஏற்படுத்தினர்.

தேவசேனாதிபதியாகித் தேவர்கட்கு அசுரரால் விளையும் துன்பத்தையெல்லாம் போக்குமாறு திரு அவதரித்த முருகக்கடவுளின் தேவியாகிப் பெருஞ்சிறப்பைப் பெறவேண்டிய வள்ளியம்மை குறவர்கையில் அகப்பட்டதனல், அப்பெருமாட்டியின் பெருமையைச் சிறிதும் உணராமல் அவளைத் தினைப்புனங்காக்குமாறு காவற்பரணில் இருக்கச் செய்தனர்.

இவ்வாறு வள்ளியம்மை புனங்காத்துக் கொண்டிருந்த காலத்து அவளுக்குத் திருவருள் புரியுமாறு முருகக்கடவுள் கந்தமலையை விட்டுத் தான் மாத்திரம் தனியே வந்து தணிகைமலையில் தங்கினர். கந்தமலை என்பது கைலாய மலையை அடுத்துள்ளதாய் கந்தவேள் தங்கியிருக்குமாறு விஸ்வகர்மாவினால் கோயில் நிருமிக்கப்பட்டுத் தேவர்கள் போற்ற முருகவேள் தங்கியிருக்கும் மலை ''தணிகை'' என்பது ''திருத்தணியை'' குறிக்கும். முருகக்கடவுள் சூரபத்மன் முதலியவரோடு சினங்கொண்டு பொருத போர் தணிந்து எழுந்தருளிய தலமாதலால் இதற்குத் தணிகை என்று பெயருண்டாயிற்று.

வள்ளிமலையில் வள்ளியம்மையைக் கண்ட நாரதர் அளவில்லாத வியப்புடன் வள்ளியின் பேரழகை முருகக் கடவுளிடம் கூறி, அவளை மணந்து கொள்ளுமாறு கூறினார். சுப்பிரமணியக் கடவுள் ஆறுமுகனான தன் வடிவத்தை விட்டுச் சாதாரண மனித வடிவத்தைக் கொண்டார். அதுவும் வேட்டுவ வடிவம். கந்தபுராணத்துள் சிறப்பான அம்சம் வள்ளி திருமணம். அகப்பொருள் இலக்கணத்தில் வகுக்கப்பட்ட துறைகளுக்கு ஏற்ப ஆசிரியர் இப்பகுதிக்குப் பாடல்களை அமைத்துக் கற்போர் உள்ளத்தை மகிழ்விக்கின்றார்.

வேடன் வள்ளியிடம் வந்து, படைத்தற் கடவுளாகிய பிரம்மதேவன் இந்த வேடர்களைப் படைக்கும் போது இவர்கட்குப் பகுத்தறிவையும் உடன் படைத்திருந்தானாயின் மகளிருட் சிறந்த நின்னைத் தினைப்புனத்தைக் காத்தலாகிய இந்தச் சிறுதொழிலில் இவர்கள் வைத்திடார் என்றனன். இவ்வாறு முருகக்கடவுள் வள்ளியம்மையை வினாவியது ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டு அன்னாளோடு உரையாட வேண்டுமென்று விரும்பியதனால் ஆகும். இது கிளவி வேட்டல் என்னும் துறையாகும்.

என்னுயிரைக் கொலை செய்த பாவம் நேராதவாறு என்னிடத்து அன்புகாட்டுவாயாக! என்று வள்ளியம்மை வேண்டினன். இது மொழிபெறாது வருந்துதல் என்னும் துறை.

புனலில் தோன்றுகின்ற பிரதிபிம்பமாகிய சந்திரன் நீர் அலை கையில் தானும் அலைவது போலத் தோன்றினாலும் அந்தச் சந்திர பிம்பத்திற்கு யாதொரு அசைவும் இல்லையாதல் போல வள்ளியம்மை தன்னிடத்துக் காதல் கொண்டிருப்பதற்கு ஏற்பக் குமரக்கடவுள் தானும் பெருங்காதல் கொண்டான் போன்று பார்ப்பவருக்குத் தோன்றுமாறு வந்திருப்பினும் அப்பெருமான் மனோவிகாரம் அற்றவனே.

இவ்வாறு வேடன் வள்ளியிடம் உரையாடிக் கொண்டிருந்த போது நம்பிராஜன் தினைப்புனத்திற்கு வந்தான். உடனே வேடன் ஒரு வேங்கை மரமானான். அடிப்பாகம் வேதங்களாகவும், நடுப்பாகம் சிவாகமங்களாகவும் மேற்புறத்திலும் பக்கங்களிலும் தழைத்திருக்கும் கிளைகள் அவ்வேதாகமங்களின் பொருளையுணர்தற்குக் கருவியான பல சாஸ்திரங்களாகவும் அமைந்தன. வேடர்கள் அதை வெட்டிவிட வேண்டுமென நினைத்தார்கள். பின் கடவுள் அருளால் வெட்டாது சென்றார்கள்.

அவர்கள் சென்றதும் வேங்கைமரம் மறைந்தது. வேடன் வெளிவந்தான். இப்போது நீ மேற்கொண்ட புனங்காத்தலாகிய இந்தத் தொழிலோ மிகவும் இழிந்தது. நீ இதனை விட்டுவிட்டு என்னோடு வருவாய் ஆயின் விண்ணுலகத்து மங்கையரெல்லாம் வணங்கி வாழ்த்துமாறு உன்னை எனது மனைவியாகக் கொள்வேன்! என்று வேண்டினான்.

அச்சமயத்தில் வேட்டுவர் தலைவன் தன் கூட்டத்தோடு வருவது கண்டு மனமும் உடலும் நடுங்கிய வள்ளியம்மை முருகக்கடவுளைப் பார்த்து, வேடர்கள் மிகக் கொடியவர்கள், உன்னை இங்குக் காண்பாராயின் ஏதேனும் தீங்கு இழைப்பர். ஆதலால் இங்கே நில்லாது இப்போதே விரைந்து செல்க! என்றாள்.

உடனே வேடன் கிழச்சைவத்துறவியின் வேடத்தைப் பூண்டு அங்கு வந்த வேடர் எதிரில் சென்றனன். வேடர்களுக்குத் திருநீறு கொடுத்து வாழ்த்தினார். நீர் யார்? எங்கு வந்தீர்? என்று மன்னன் வினவினான். ‘கிழத்தனம் காரணமாக உடல் மெலிந்துவிட்டது. இந்தக் கிழத்தன்மை நீங்கவும் அதனால்

நெஞ்சத்து மருள் நீங்கவும் உமது மலையிலுள்ள குமரியென்ற தீர்த்தத்தில் நீராடும் பொருட்டு வந்துள்ளேன்' என்று கிழவர் கூறினார்.

இச்சொல்லில் 'இப்போது யான் கொண்டுள்ள கிழக்கோலம் அகலவும் மனத்திலுள்ள காமமோகம் நீங்கவும் நம் மலையில் தினைப்புனத்துக் காவலாக உள்ள குமரியுடன் இனிது கலக்குமாறு வந்துள்ளேன்' என்ற பொருளும் தோன்றுமாறு உள்ளது.

வேட்டுவ அரசன், நீ என் மகளுக்குத் துணையாக இருங்கள் என்று சொல்லிச் சென்றான். தேனும் தினைமாவும் கொடுத்தாள். வள்ளி தண்ணீர் கேட்டார். என் தாகம் தீர்த்தது போல் மோகம் தீர்த்திடு என்று வேண்டினார் கிழவர்.

வள்ளி கடுங்கோபம் கொண்டாள். துறவியின் வேசம் பூண்டு அத்துறவிகட்குச் சிறிதும் அடுக்காத வேட்கை மொழியைக் கூறுவது தகாது. இது என்ன விபரீதம்! என்று சினத்தோடு பழித்துக் கூறினாள். தன் குலத்துக்குப் பழியுண்டாகுமென்று அஞ்சி வள்ளி விலகிச் சென்றாள்.

முருகக்கடவுள் ஆலோசித்து, விநாயகராகிய யானைமுகக் கடவுளைத் தன் முன்னே வருமாறு தியானித்தார். விநாயகர் யானை உருக்கொண்டு பிளிறிக் கொண்டு வந்தார். வள்ளிக்கு யானையைக் கண்டால் நடுக்கம். எனவே தன்னைக் காப்பாற்றுமாறு கிழவரிடம் ஓடி அடைக்கல மடைந்தாள். அவளைக் கட்டித் தழுவினார். யானை அங்கிருந்து சென்றது. வேடனாகவும், வேங்கையாகவும், விருத்தனாகவும் வந்தவர் முருகக்கடவுள் தான் என்பதை அதுவரை வள்ளி அறிந்திலள். அகப்பொருள் இலக்கணத்துள் இதை களிறு தரு புணர்ச்சி என்று கூறுவர்.

ஆறுமுகம் பன்னிரண்டு திருக்கரங்களும் உடைய நிஜவடிவத்தோடு முருகக்கடவுள் வெளிப்படையாக வள்ளியம்மைக்குக் காட்சி கொடுத்தார். 'உங்கள் புனத்துக்குச் செல், யாமும் வருவோம்' என்றார். அதன்படி வள்ளியம்மை தினைப்புனத்திற்குச் சென்றாள்.

புனத்தைக் காவாமல் விட்டுச் சென்றது குறித்துத் தோழி வினவ, தலைவி நாணத்துடன் வெப்பமுள்ள வேனிலால் மெலிந்ததனால் அப்பாலுள்ள சுனையில் நீராடி வரப்போனேன் என்றனள்.

தினைக்கதிர் முற்றியது. அறுவடையானது. வள்ளியின் நிலையைக் கண்டு சந்தேகம் கொண்ட செவிலித்தாய் அவளைப் பூட்டி வைத்தாள். வள்ளி மெலிந்தாள். எல்லோரும் கவலை கொண்டார்கள்.

வள்ளியம்மையினிடத்து மெய் நுடங்குதல் முதலியவற்றைக் கண்ட குறவர், இது காதல் கொண்ட முருகக்கடவுள் இவளைக் கூடிப் பிரிந்ததனால் ஆகியது என்பதை உணராமல் மலைச்சாரலில் உள்ள சிறு தேவதை எது வேனும் தீண்டிற்றோ? என்று ஐயுற்றனர்.

முருகர் தினைப்புனம் வந்து வள்ளியைக் காணாது வாடினார். நங்கையைத் தேடிச்சென்றார். ஒரு குடிசைக்குச் சென்றார். பாங்கி அவரைக் கண்டாள். வள்ளியை அழைத்து வந்தாள். வள்ளியை அழைத்துக் கொண்டு ஒரு சோலைக்கு வந்தார்.

பொழுது விடிந்ததும் வேட்டுவன் மனைவி விழித்தாள். மகள் வள்ளியம்மை காணாததைக் கணவனிடம் கூறினாள். வேடர்கள் சண்டை செய்யப் புறப்பட்டார்கள். சோலையில் இருவரையும் கண்டார்கள். சண்டை செய்தார்கள். முருகக்கடவுளின் சேவல் கொடி கூவ எல்லோரும் மயங்கி விழுந்தார்கள்.

வள்ளியின் வேண்டுகோளுக்கு இணங்கி செத்தவரை எழுப்பினார். எல்லோரும் வணங்கினார்கள். தங்கள் ஊரிலேயே அவளை மணக்கக் கூறினார்கள். அதன்படி ஆறுமுகக்கடவுளின் அருளால் தெய்வக்கோலம் பூண்டாள் வள்ளி. பின் வள்ளியை மணம் செய்தார். சிவபெருமான், நான்முகன், திருமால், உமையம்மை ஆகியோர் வானத்தில் தோன்றி வாழ்த்தினார்கள்.

திருமணம் சிறப்பாக நடைபெற்றது. பின் வேட்டுவரிடம் விடை பெற்றுக்கொண்டு முருகப்பெருமான் திருத்தணிகை வந்து சேர்ந்தார்.

மேற்கூறிய கதைப்படி தேவசேனை, வள்ளி இருவரின் மணவாளன் முருகன் என்றாலும் முருகனை "மால்மருகன்" என்றும் புகழ்வர். எவ்வாறெனின் "அமுதவல்லியும், சுந்தரியும் திருமாலின் இரு பெண்கள். இவ்விருவரும் முருகப்பெருமான் ஆணைப்படி முறையே இந்திரன் மகள் தேவசேனையாகவும், சிவமுனிவரிடத்து மான் வயிற்றில் வள்ளியாகவும் பிறந்தனர். அவர்களை முருகக் கடவுள் மணந்தமையால் மால்மருகன் ஆனார்."[41]

**இந்திரன் பெற்ற சாபம்**

பரிபாடலில் பத்தொன்பதாவது பாடல் திருப்பரங்குன்றத்தின் சிறப்பை எடுத்துரைக்கும் போது அங்கு வரைந்த ஓவியத்தில் காணப்படும் தொன்மக் கதைகளுள் ஒன்று. இக்கதை இந்திரனுக்கு ஏற்படும் சாபம் குறித்து தருகிறது. இக்கதையை "பதிணென்புராணங்களுள்"[42] ஸ்ரீ நாரதபுராணம் விரிவாக கூறுகிறது.

**"இந்திரன், பூசை, இவள் அகலிகை, இவன்**
**சென்ற கவுதமன், சினன்உறக் கல்உரு**
**ஒன்றிய படி இது என்று உரை செய்குவோரும்"** ***(பரி.19)***

கௌதம முனிவர் மனைவி அகலிகை சிறந்த அழகி, கற்புக்கரசி.

தேவலோகம் சென்ற நாரதர் இந்திரனிடம் அகலிகை என்னும் அழகியைப் பற்றி வருணித்தார். இதனால் மதிமயங்கிய இந்திரன் அவளை அடைய ஒரு சூழ்ச்சி செய்தான்.

முனிவர்கள் விடியற்காலையல் ஆற்றுக்குச் சென்று நீராடி ஜபதபங்கள் செய்வது வழக்கம். இதை அறிந்திருந்த இந்திரன் அந்த நேரத்தில் அகலிகையை அடைய எண்ணினான்.

கவுதமர் ஆசிரமத்தை அடைந்த இந்திரன் நடுஜாமத்தில் சேவலைப் போலக் கூவி கௌதமரை ஏமாறச் செய்தான். அது அதிகாலை என்று எண்ணிய கௌதமர் ஜபதபங்களை முடிப்பதற்கான ஏற்பாடுகளுடன்

ஆற்றுக்கு நீராடிச் சென்றார். அவ்வமயம் இந்திரன், கவுதமர் வடிவில் ஆசிரமத்தில் நுழைந்தான். தன் வேலைகளைச் செய்து கொண்டிருந்த அகலிகை கௌதமர் திரும்பி வந்து விட்டதாக எண்ணினாள். அப்போது கவுதமர் வடிவில் இருந்த இந்திரன், இன்னும் விடியவில்லை, ஏதோ பறவையின் ஒலியைச் சேவல் கூவியதாக எண்ணினேன் என்று கூறி அவளை அருகில் வருமாறு அழைத்தான். அருகில் கட்டிலில் அமர்ந்த அகலிகையுடன் சேர்ந்து இன்பம் துய்த்தான்.

இந்நிலையில் ஆற்றங்கரை சென்ற கௌதமர், ஏதோ தவறு நேர்ந்துவிட்டிருப்பதாகக் குழப்பத்துடன் ஆசிரமத்துக்குத் திரும்பி வந்து கதவைத் தட்டினார். அக்குரலைக் கேட்டு அதிர்ச்சி அடைந்த அகலிகை திகைப்படைந்து நடுக்குற்றாள். ஏதோ விபரீதம் நடந்திருப்பதை உணர்ந்தாள். இந்திரன் சுயஉருவில் தோன்றி அவள் காலில் விழுந்து கும்பிட்டான். தன்னை மன்னித்து விடுமாறு வேண்டினான்.

கதவைத் திறந்த அகலிகை தலைவிரி கோலமாக முனிவர் காலில் விழுந்து வணங்கி தன் புனிதத்தன்மையை இந்திரனால் இழந்ததாகக் கூறித் தன்னை மன்னிக்குமாறு பிரார்த்தித்தாள்.

ஞானதிருஷ்டியால் நிகழ்ந்தது அனைத்தையும் அறிந்த கௌதமர், பூனை உருவில் தப்பிக்க முயன்ற இந்திரனைக் கோபமாக அழைத்தார். அவர் கோபத்துக்கு அஞ்சிய இந்திரன் சுய உருவில் தலை குனிந்து நின்றான்.

எனினும் கோபம் அடங்காத முனிவர் அவன் உன் உடம்பெல்லாம் பெண் குறியாகட்டும் என்றும் வெளியில் தலைகாட்ட முடியாமல் அவதிப்படு என்றும் சபித்தார்.

அகலிகையை நோக்கிக் கணவனுக்கும், அயலானுக்கும் வேறுபாடு அறியாத அவள் உடம்பு கல்லாகுமாறு சபித்தார் முனிவர். அகலிகை தெரியாமல் செய்த பாவத்துக்கு விமோசனம் அளிக்குமாறு வேண்டினாள். அப்போது முனிவர் ஸ்ரீமந்நாராயணன் ராமனாக அவதரித்து

விசுவாமித்திரருடைய யாகத்தை நிறைவேற்ற கானகத்துக்கு வருவார். அந்த ராமர் பாதம் பட்டு சாபம் நீங்கி சுய உருவைப் பெறுவாய் என்று கூறிவிட்டு வெளியேறினார் முனிவர்.

சாபத்தின் காரணமாக இந்திரன், மறைந்து வாழ வேண்டிய அவலை நிலை உண்டாயிற்று. இந்திரனுக்காகத் தேவர்கள் கௌதம முனிவரிடம் சென்று மன்னிப்புக் கோரினர். முனிவர் ‘இந்திரன் பிரகஸ்பதியிடம் சென்று விநாயகப்பெருமானுடைய ஷடாட்சர மந்திரத்தை உபதேசம் பெற்று ஜபிக்கட்டும்’ என்று கூறினார்.

இந்திரன் பிரகஸ்பதியிடம் சென்று விநாயகப்பெருமானின் ஷடாட்சர மந்திர உபதேசம் பெற்று ஜபித்து அவர் அருளால் அவன் உடலில் இருந்த பெண் குறிகள் கண்களாக மாறிக் காட்சியளித்தன. இவ்வாறு இந்திரனது சாபம் நீங்கப்பெற்றது. பரிபாடலில் திருமால், முருகன் குறித்த தொன்மக் கதைகள் அதிகளவில் இடம்பெற்றுள்ளது.

**பத்துப்பாட்டு**

**“முருகு பொருநாறு பாண் இரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல் குறிஞ்சிப் பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து”**

என்பது பத்துப்பாட்டு குறித்து வரும் பழைய வெண்பா. இப்பாட்டினுள் ஆற்றுப்படை ஐந்தும், மதுரைக்காஞ்சியும் புறப்பாடல்களாகும். எஞ்சிய நான்கும் அகப்பாடல்கள்.

**திருமுருகாற்றுப்படை**

நக்கீரர் பாடிய ஆசிரியப்பாவால் அமைந்த 317 அடிகளைக் கொண்ட இந்நெடும் பாட்டு முருகனின் ஆற்றலையும், அருளையும் சிறப்பித்துப் பேசுகிறது. இதனுள் முறையே அறுபடை வீடுகளும் அங்கு

முருகன் செயல்களும் அவனது பெருமைகளும் விரித்துக் கூறுப்படுகின்றது. சைவத்திருமுறைகள் பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது.

**முருகன் சூரனை அழித்த வரலாறு**

***"பார்முதிர் பனிக்கடல் கலங்க உள்புக்கு***
***சூர்முதல் தடிந்த சுடர்இலை நெடுவேல்" (திருமுருகு.45–46)***

முருகன் சூரனை அழித்த நிகழ்வு "கந்தபுராணத்தில்"[43] விரிவாக கூறப்பட்டுள்ளது.

சுக்கிலவாது தேசத்தை ஆண்டு வந்த மன்னனுக்கு நான்கு குமாரர்கள் பிறந்தார்களள. அவர்களில் மூத்தவன் சூரன், இரண்டாமவன் பதுமன், மூன்றாமவன் சங்கன், நான்காமவன் தாருகன்.

சூரனும் பதுமனும் ஒருநாள் அகத்திய முனிவரைக் கண்டு வழிபட்டார்கள். அம்முனிவர் முருகப்பெருமானது பெருமையையும் அவர் ஏறிவரும் மயிலினது பெருமையையும் அவர் ஏந்தியுள்ள சேவற்கொடியினது பெருமையையும் எடுத்துக் கூறினார். அதனைக்கேட்ட சூரன் முருகனுக்கு மயிலாக விரும்பினான் பதுமன் முருகனது சேவற் கொடியாக விரும்பினான்.

அவர்கள் இருவரும் அகத்திய முனிவர் அறிவுரைப்படியே தவம் செய்யலாயினர். இச்செய்தியை முன்னமேயே முருகனைத் தாங்கிவரும் பேறுபெற்ற மயிலும், சேவலும், அன்னம் கருடனாகிய வாகனங்கள் மூலம் கேள்வியுற்றுச் சூரன், பதுமன் ஆகிய இருவரது தவத்தையும் கலைத்தன.

இவ்வுண்மையை அறிந்த தவவலிமையால் தேவகணங்களாகி முருகன் வீற்றிருக்கின்ற கந்தமாதனக் கிரிவாயிலை அடைந்தார்கள்.

சூரனும், பதுமனும் அங்கிருந்த மயிலிடத்திலும் சேவலிடத்திலும் வன்னம் கருடன் ஆகிய வாகனங்கள் பற்றி மாறுபட்ட கருத்துக்களைக் கூறிக் கோள் மூட்டினார்.

அக்கருத்துகளை உண்மை என நம்பிய மயிலும் சேவலும் அன்னத்தையும் கருடனையும் துன்பப்படுத்தின. திருமாலும் நான்முகனும் முருகப் பெருமானிடம் முறையிட்டனர். முருகப்பெருமான் உண்மையினை அறிந்து சூரனையும், பதுமனையும் அழைத்து, நீங்கள் ஆவலுற்ற எண்ணம் சிறப்புடையதாயினும் நீங்கள் அசுரத் தன்மையோடு நடந்து கொண்டமையால் நீங்களிருவரும் ஒருவராகிக் காசிபமுனிவரிடத்தே மாயையின் பிள்ளையாகத் தோன்றி வரம்பல பெற்றுத் தேவர்களைப் பெரிதும் துன்புறுத்தும் நிலை அடைவீர்கள். அப்பொழுது நாம் அங்கு வந்து ஆட்கொள்வோம் என்று கூறி அருளினார்.

அவ்வாறே தேவாசுரப்போரில் சூரபதுமன் இறுதியில் மாமரமாக நிற்க, ஞானவேலால் அம்மரத்தை முருகன் இரு துண்டாக்கினார். சூரன் மயிலாகவும் பதுமன் சேவலாகவும் வடிவெடுத்து முருகப்பெருமானைத் தாங்கும் பேற்றையும், சேவற்கொடியாகத் திகழும் பேற்றையும் பெற்றார்கள்.

இக்கதைக் குறிப்பு மேலும் சில இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது.

***"சூர் மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்"  (அக்.49:10)***

***"வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற***
***பைம்பூட் சேஎய்"  (பெரும்பாணாறு.457–458)***

**ஆயிரம் கண்ணோன் ஆகிய வரலாறு**

***"நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து, நூறுபல***
***வேள்வி முற்ய வென்றுஅடு கொற்றத்து***
***ஈர் இரண்டு ஏந்திய மருப்ன எழில்நடை***
***தாழ்பெருந் தடகை உயர்ந்த யானை***
***எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்"  (திருமு.156–160)***

இப்பாடல் அடிகளில் இந்திரன் ஆயிரம் கண்ணோன் ஆகிய வரலாறு கூறப்பட்டுள்ளது.

கௌதமர் என்ற முனிவரின் மனைவியாக திகழ்ந்தவள் அகலிகை. அவள் பேரழகியாக விளங்கினாள். அவளை ஒருமுறை பார்த்துவிட்ட தேவேந்திரன் அவள்மீது ஆசை கொண்டான். அவளை அடைய நேரம் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஒருநாள் முனிவர் இல்லாத சமயமாகப் பார்த்து, இந்திரன் அந்த முனிவரின் உருவத்திலே அகலிகை இருக்குமிடத்துக்கு வந்தான். அவள் கணவன் வடிவத்திலே அகலிகையின் கற்பைக் களவாடிவிட்டான்.

வெளியே சென்றிருந்த கௌதமர், தேவேந்திரனின் வஞ்சகமான அற்பத்தனத்தை உணர்ந்தவராய் ஆவேசமாக ஆசிரமத்தையடைந்தார்.

முனிவரைக் கண்ட இந்திரன் பயந்துபோய் பூனைவடிவம் கொண்டு ஓடினான். முனிவர் அடங்காச் சினம் கொண்டு அவனை இகழ்ந்து சபித்துவிட்டார்.

பிறன் மனையாள் என்றும் பாராமல் வஞ்சகமாகத் தன் ஆசையை நிறைவேற்றிக் கொண்ட இந்திரனின் தேகமெல்லாம் ஆயிரம் பெண் குறிகள் உண்டாகுமாறு அவர் சாபம் கொடுத்தார்.

கணவனுக்குத் துரோகம் செய்துவிட்ட அகலிகையைக் கல்லாகப் போகும்படி சபித்தார். தான் அறியாது செய்த பிழையை மன்னித்து அருளும்படித் தன் கணவரைக் கெஞ்சினாள் அகலிகை, முனிவரும் மனம் இரங்கினார்.

பிற்காலத்தில் தசரதன் மைந்தன் இராமன் இங்கு வருவான். அவன் பாதத்துகள்பட்ட மாத்திரத்தில் உனக்குச் சாபவிமோசனம் கிடைத்துவிடும். கல்லாயிருக்கும் நீ காரிகையாக மாறிவிடுவாய் என்று கூறினார் கௌதமர்.

இந்திரன் உடலில் காண்பவர் அருவருக்கத்தக்க விதமாக ஆயிரம் பெண்குறிகள் அமைந்துவிட்ட அவலத்தையறிந்த தேவர்கள் கௌதமரை அணுகி இந்திரனையும் மன்னித்து அருள்புரியும்படி வேண்டினார்கள்.

முனிவருக்கும் கோபம் குறைந்தது. தன் சாபத்தால் இந்திரனின் உடலில் தோன்றிய ஆயிரம் குறிகளும் ஆயிரம் கண்களாக மாறட்டும் என்று அருள்புரிந்தார்.

"வேள்விமுற்றிய வென்றாடு கொற்றம்" இந்திர பதவி பெறுவதற்கு நூறு, பரிவேள்வி செய்ய வேண்டும் என்பர். இவ்வேள்வி ஒவ்வொன்றும் இயற்றுங்கால், உலகில் குதிரையை விடுத்து அது சென்ற திசைக்கண் உள்ள மன்னரை எல்லாம் வென்று அடிப்படுத்தல் வேண்டுமாகலின் இவ்வாறு கூறினார். இதனாலேயே இந்திரனுக்குச் 'சதமகன்' என்னும் பெயரும் உண்டு"[44]

**பிரம்மனுக்காகத் திரண்டு வந்த தேவர்கள்:**

***"நாற்பெருந் தெய்வத்து நல்நகர் நிலைஇய***
***உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்***
***பலர்புகழ் மூவரும்தலைவ் ஆக***
***ஏமுறு ஞாலம் தன்னில் தோன்றி***
***தாமரை பயந்த தாஇல் ஊழி***
***நான்முக ஒருவற் கூட்டி"   (திருமுருகு.160–165)***

'நாற்பெருந் தெய்வத்து மூவர்' என்றது அயன், அரி, அரன், இந்திரன் ஆகிய நான்கு பெருந்தெய்வங்களுள் அயன் ஒழிந்த மூவர். இம்மூவரும் அயனை முன்னிட்டு முருகனிடம் வருகின்றனர்.

ஒருநாள் சிவபெருமானைத் தரிசிக்க வந்த பிரம்மதேவன் முருகனைக் கண்டும் உரிய வணக்கம் செலுத்தாமல் கர்வத்துடன் நடந்து கொண்டார். அதுகண்டு அவர்க்கு அறிவூட்ட நினைத்த ஆறுமுகன் அவரை அருகழைத்து, அவர் யார்! எங்கு வந்தார்! என்ன தொழில் செய்கிறார்! எனறு வினவ ஈசன் அருளியவாறு படைப்புத் தொழிலைச் செய்வதாகப் பிரம்மன் கூறிட, குமரன் அவரை 'ஓம்' என்ற பிரணவத்தின் பொருளைக் கேட்டிட பிரம்மன் அது அறியாமல் விழித்தார். அப்போது கந்தன் பிரம்மன் தலையில் குட்டி

வீரபாகுவுக்கு ஆணையிட்டு பிரம்மனைச் சிறையிலிட்டு, படைப்புத் தொழிலைத் தானே புரிய ஆரம்பித்தார்.

செய்தி அறிந்த ஈசன் நந்தியை அனுப்பி பிரம்மனை விடுவிக்கச் செய்யுமாறு கூறினார். அதனைக் கந்தன் ஏற்காததைக் கண்ட நந்தி தேவர் சிவனிடம் கூறிட, பரமனே வந்து, பிரம்மனைச் சிறையிலிருந்து விடுதலை செய்யக்கூறிட, பிரம்மன் விடுவிக்கப்பட்டார். பிரம்மன் சிறையிலிருந்து வெளியேறி ஈசனையும் கந்தனையும் வணங்கித் தன் தொழில் புரிய சத்திய லோகம் அடைந்தார்.

இவ்வாறு "திருமுருகாற்றுப்படையில் முருகன், சிவன், இந்திரன், பிரம்மன் தொடர்புடைய கதைகள் இடம்பெற்றுள்ளது."

**சிறுபாணாற்றுப்படை**

சிறுபாணாற்றுப்படை 269 அடிகளால் ஆன பாட்டு ஆகும். பாட்டு என்றும், யாழ் என்றும், இசை என்றும் பொருள்படும் பன் என்னும் சொல்லின் அடிப்படையில் பிறந்தது தான் 'பாண்' என்ற சொல். சிறிய யாழை இசைத்துப் பாடுவோர் சிறுபாணர், சிறுபாணாற்றுப்டை என்னும் இப்பாட்டு ஒய்மா நாட்டு நல்லியக் கோடனிடம் பரிசில் பெற்று மீளும் சிறுபாணன் ஒருவன், வழியில் கண்ட வறுமையால் வாடும் பாணன் ஒருவனை, அவ்வள்ளலிடம் ஆற்றுப்படுத்தும் முறையில் அமைந்துள்ளது.

**"காளரியூட்டிய கவர்கணைத் தூணிப்**
**பூவிரி கச்சைப் புகழோன் தன்முன்**
**பனிவரை மார்பன் பயந்த நுண் பொருட்**
**பனுவனின் வழாஅப் பல்வேறு அடிசில்" (சிறுபாண்.36–39)**

என்ற அடிகளில் மகாபாரதக் கதைக் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

"முன்பு ஒரு காலத்தில் அக்கினி தனக்குற்ற நோய் தீர்வின் பொருட்டுக் காண்டவம் என்னும் காட்டை உண்ணப் புகுந்தான். அக்காடு இந்திரனுக்கு உரிமை உடையது. ஆதலின், அவன் முகில்களை ஏவி அத்தீயை அணையச் செய்தான். நெருப்புக் கடவுள் இவ்வாறு பன்முறை முயன்று தோற்றுவிட,

பாண்டவருள் ஒருவனாகிய அருச்சுணனிடம் சென்று அக்காட்டை உண்ணும்படி செய்தான். இந்திரன் முகில்களை ஏவி மழை பெய்விக்க, அருச்சுணன் கணைகளாலேயே பந்தல் இட்டு அந்நெருப்பினை அவியாது காத்தான். இந்தகு திறம் படைத்த அருச்சுனனின் அண்ணன் வீமம், சமையல் கலையில் வல்லவனாக விளங்கினான். சுவையான அடிசிலைச் சுவைக்கும் போது நளபாகம் வீமபாகம் என்று குறிப்பிடும் வழக்கம் இன்றும் உண்டு.''[45]

இக்கதைக் குறிப்பு நல்லியக்கோடனின் விருந்தோம்பல் சிறப்பினைக் குறிப்பிடும் பொழுது குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளது.

**பெரும்பாணாற்றுப்படை**

இது 500 அடிகளைக் கொண்ட ஆசிரிய நெடும்பாட்டு. இதனைத் தொண்டைமான் இளந்திரையன் மீது கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியுள்ளார். ஐந்து நில மக்களின் வாழ்வையும் இதில் நன்கு புனைந்துள்ளார். 'பாணாறு' என்ற பெயரும் இந்நூலுக்கு உண்டு.

**இளந்திரையன் சிறப்பு**

***''திரைதரு மரபின் உரவோன உம்பல்***
***மலர்தலை உலகத்து மன் உயிர் காக்கும்***
***முரசுமுழங்கு தானை மூவருள்ளும்,***
***இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்***
***வலம்புரி அன்ன, வசைநீங்கு சிறப்பின்'' (பெரும்பாண்.31–35)***

''திரைதரு மரபின் உரவோன்'' என்பதற்கு நச்சினார்க்கினியர் நாகப்பட்டிணத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்ற நாக கன்னிகையைப் புணர்ந்த காலத்து, அவள் யான் பெற்ற புதல்வனை என் செய்வேன் என்ற பொழுது தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரசவுரிமை எய்வித்து நாடாட்சி கொடுப்பலென்று அவன் கூற அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரை தருதலின் என்று பெயர் பெற்றதாக விளக்கம் கூறுவர்.

ஆனால் இக்கருத்தை மறுத்து திரையன் சோழன் அல்லன் பல்லவ வேந்தர் மரபினன் என்றும், பல்லவப் பெயர்க்கு முன்பே தொண்டையன் என்ற பெயர் உண்டாயிருக்க வேண்டும், துரோணம் என்ற பதமே தொண்டை என மருவிற்று என்று ரா.இராகவையங்கார் கூறுகிறார்.

"பரத்வாஜருக்கு க்ருதாசி என்னும் நீரர மகளிரினின்றுண்டாகிய துரோணரும், கௌதமருக்கு ஜாலவதி என்றும், நீரர மகளினின்றுன்டாகிய கிருபியும் சேர்ந்து அச்வத்தாமாவிற்கு மதனி என்னும் நீரர மகளிடத்தில் உண்டாயினவன் பல்லவன் என்று அமராவதிச் சாசனங் கூறுதலானும் இக்குலம் திரைதரு மகளிர் மரபேயாதல் ஐயமறத் துணியலாம். இவற்றாற் பல்லவன் தன் தாய் வழியாலும் தந்தை வழியாலும் திரை மகளிர் மரபினனாதல்"[46] என்பர்.

ஒத்த கடலிலே தோன்றினும் ஏனைச் சங்குகளிலும் வலம்புரிச் சங்குக்குச் சிறப்பு இருப்பதைப் போல சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தர் குடியாகிய ஒத்த தமிழ்க்குடியிலே பிறந்த மன்னர் பலருள்ளும் இவன் சிறப்புடையவன் என்பதைக் காட்டும் வகையில் வளைமீக்கூறும் வலம்புரி அன்னவசை நீங்கு சிறப்பின் திரையன் எனக்குறித்தார் புலவர்.

**உலகளந்த உத்தமன்**

**"நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்**
**நான்முக ஒருவற் பயந்த பல்இதழ்த்**
**தாமரைப் பொகுட்டின் காண்வரத் தோன்றி"**

***(பெரும்பாண்.402–405)***

இப்பாடலில் "நெடியோன்" என்பது திருமாலைக் குறித்தது. இதில் திருமால் நெடியோனாக உயர்ந்து மண்ணளந்த வாமன அவதாரச் செய்தியாகும். இக்கதையை "பதிணென் புராணங்கள்"[47] என்பதில் வாமன புராணம் விரிவாகக் கூறுகிறது.

தனு, காசியப முனிவர் தம்பதிகளின் மகன் துந்து என்னும் அரக்கன். அவன் பிரம்மதேவனைக் குறித்துக் கோரத்தவம் செய்து

தேவர்களால் தனக்கு மரணம் ஏற்படாதவாறு வரம் பெற்றான். துந்து இந்திரனை வென்று அப்பதவியைப் பெற்றான். இந்திரன் தேவர்களுடன் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள பிரம்மாவின் இருப்பிடமாகிய சத்தியலோகம் சென்று அடைந்தான்.

அதை அறிந்த அரக்கன் துந்து படைத்தலைவனிடம் பிரம்மலோகம் அடைந்து தேவர்களைத் துரத்தித் தங்க இடமின்றி செய்ய வேண்டும் என்றான். பிரம்மலோகம் செல்லும் வழியில் ஏற்படக்கூடிய கஷ்ட நஷ்டங்கள் பற்றி அவர்கள் எடுத்துரைத்தனர். மேலும் அவனுக்கு வரங்கள் அளித்த பிரம்மாவின் இருப்பிடத்தின் மீது போர் தொடுத்தால் நல்லதல்ல என்று அறிவுரை கூறினார். அப்போது துந்து தனக்குப் பிரம்மலோகத்தை வெற்றிக்கொள்ள ஆவல் உள்ளது. எத்தகைய புண்ணியம் செய்தால் அங்கு செல்லமுடியும். இந்திராதி தேவர்கள் எவ்வாறு செல்ல முடிந்தது என்றெல்லாம் கேட்க, சேனாபதி குருவாகிய சுக்கிராச்சாரியாரைக் கேட்டுப் பாருங்கள் என்று உபாயம் கூறினார்.

அவ்வாறே அரக்கன் சுக்கிராச்சாரியாரை அடைந்து பிரம்மலோகம் செல்ல என்ன செய்ய வேண்டும் என்று கேட்க, அவர் இந்திரன் நூறு அசுவமேத யாகங்கள் செய்து அந்தச் சக்தியை அடைந்தான் என்றார். உடனே துத்துவும் நூறு அசுவமேத யாகங்கள் செய்யும் முயற்சியில் ஈடுபட்டான்.

துந்து சுக்கிராச்சாரியாரின் அனுமதிபெற்று யாகதீட்சை பெற்றான். சேனாதிபதிகளை அழைத்து கர்மபூமியான பூவுலகை அடைந்து அரகர்களை வென்று அவர்களையும் யாகத்துக்கு வருமாறு அழைப்பாணை விடுவித்தான். மற்றும் யாகக்குதிரைக்குக் காவலாகவும் சிலரை ஏவினான். யக்ஞபாகத்தைப் பெற ராகு கேது முதலிய ராக்ஷசர்களும் வந்தனர்.

தேவர்கள் துந்து செய்யும் அசுவமேதயாகம் பற்றி யாகசாலையி லிருந்து வரும் தூபவாசனையினால் அறிந்து மகாவிஷ்ணுவை அடைந்து

தங்கள் கவலையை வெளியிட்டு தங்களைக் காத்திடுமாறு வேண்டினர். அவன் மூவுலகங்களையும் வென்று, பிரம்ம லோகத்தையும் பற்றிட யாகம் நிகழ்த்துவது பற்றியும் எடுத்துரைத்தனர்.

விஷ்ணு அவர்களுக்கு அபயமளித்து அனுப்பிவிட்டு அரக்கனை வெல்லக்கூடிய அபாயம் பற்றிச் சிந்தித்தார். உடனே ஓர் அந்தணர் வாமனரூபம் கொண்டு தேவிகா நதியில் மூழ்கியும், எழுந்தும் கால் கைகள் மேலே தோன்ற இறப்பதற்குத் தயாராகுபவன் போல் காட்சி அளித்தார். இந்தக் காட்சியைக் கண்ட துந்து, மற்றும் புரோகிதர்கள் அனைவர்களும் யாகக்காரியங்களைவிட்டு அந்த வாமனனைக் காப்பாற்ற விரைந்தனர். இறுதியில் அவ்வாமனனை நீரிலிருந்து வெளியே எடுத்து உபசாரங்கள் செய்தார்.

அடுத்து, அந்த வாமனன் உயிர்விட எண்ணிய காரணம் அறிய பலவிதமான கேள்விகளைக் கேட்டனர். வாமன பிராமணன் உடல் நடுங்கிக் கொண்டே தன் வரலாற்றைக் கூறினான்.

பிரபாசன் என்ற மகாவித்வானுக்கு நானும், என் தமையன் நேத்ரபாஸனும் இரு புத்திரர்கள். எங்கள் தகப்பனார் மரணமடைந்து, காரியங்கள் முடிந்த பிறகு வீட்டைப் பங்கு போடுமாறு கேட்க, என் அண்ணன் வாமனன், கூனன், நொண்டி, அலி போன்றவர்களுக்குச் சொத்தில் பங்கு கிடையாது. போட்டதைச் சாப்பிட்டுவிட்டு சும்மா இருக்க வேண்டும் என்றான். வாமனனுக்குச் சொத்து கிடையாது என்பது என்ன நியாயம் என்று கேட்க, அவன் கோபம் கொண்டு என்னை இந்நதியில் இழுத்துத் தள்ளிவிட்டுச் சென்றுவிட்டான் என்று கூறினான்.

இப்போது உங்கள் தயவினால் உயிருடன் மீண்டேன் என்று நன்றி கூறி அவர்களெல்லாம் யார்? எவர்? என்று கேள்வி கேட்டான்.

பிராமணர்கள் தாங்கள் பிருகு வம்சத்தினர் என்றும், அவர் தந்து என்னும் மகாவிருன் என்னும் 'தாதா' என்றும் இங்கு அசுவமேத யாகம்

நடத்துபவர் இவரே என்றனர். மேலும் துந்துபியிடம் அந்த வாமனனுக்கு ஒரு வீடு மற்றும் பொன்னும், பொருளும் அளிக்குமாறு கூறினர். அப்போது அரக்கர் மன்னன் அவனிடம் அவனுக்கு தேவை எதுவாயினும் தான் தருவதாகக் கூறிக் கேட்கச் சொன்னார்.

அப்போது வாமனன் வீடு, பொருட்கள் மீது தனக்கு ஆசையில்லை. என் கால்களால் மூன்றடி நிலம் கொடு என்று வேண்டினான். அதைக்கேட்ட துந்து சிரித்து அப்படியே கொடுத்தேன் என்றான்.

வாமனன் ஓங்கி வளர்ந்து விசுவரூபம் கொண்டான். ஓரடியால் மண்ணையும், இரண்டாவது அடியால் விண்ணையும், அளந்து மூன்றாவது அடிக்கு இடமில்லாததால் கோபம் கொண்டு திடீரென்று துந்துவின் மேல் விழுந்தான். அவன் விழுந்த வேகம் பளு தாங்க முடியாமல் பூமியில் பள்ளம் உண்டாயிற்று. உடனே வாமனன் துந்துவை அந்தப் பள்ளத்தில் தள்ளி, அவன்மேல் மண் மாரி பொழியச் செய்து அவனுக்கு சமாதி செய்துவிட்டார்.

இவ்வாறு துந்துவை அழிக்க வந்த வாமனன், விஷ்ணுவின் முதல் வாமனாவதாரம் என்கிறது.

துந்து பிரம்மலோகத்தை வேண்டி துராசை கொண்ட தன் விளைவாகத் தனக்குத் தானே சமாதியைத் தேடிக் கொண்டான். வாமனனாகிய நாராயணன் செயலால். இதுகுறித்து விசாரமடைந்த பிரகலாதன் தன் மகனாகிய விரோசனனை ராக்ஷச ராஜ்யத்திற்கு அரசனாக்கினான். அவனும் தந்தை சொற்படி ஆட்சி புரிந்து வந்தான். இவன் மகனே பலிச்சக்ரவர்த்தி.

பலிபாட்டன் வழியில், அவன் அறிவுரைப்படி தரும சாஸ்திர நெறியில் பயிற்றுவிக்கப்பட்டான். பிரகலாதன் அவனுக்குக் குருவாகவும் விளங்கினான். பலி மன்னனானவுடன் இந்திராதி தேவர்களை வென்றது மட்டுமின்றி மூவுலகங்களையும் கைப்பற்றினான். இதனால் தேவர்களுக்கு நித்யகண்டம் ஆயிற்று.

இதனால் மனமுடைந்த தேவர்கள் தந்தை காசியபரை அணுகி முறையிட அவர் தேவர்களை பிரம்மலோகம் அழைத்துச் சென்றார். பிரம்மாவும் செய்வதறியாமல் அனைவரையும் அழைத்துக் கொண்டு மகாவிஷ்ணுவிடம் சென்று ரக்ஷிக்குமாறு வேண்டினர்.

அப்போது பகவான் தன் வாமனாவதாரம் எடுத்துப் பலியை அடக்குவதாகக்கூறி அவர்கள் புத்திரனாக அவதரிக்க அவர்களது தபஸ்ஸக்தி மட்டும் போதாது என்றும் அவர்களிருவரையும் பரமநிஷ்டையுடன் மேலும் தன்னை அடைய தவம் புரியுமாறு கூறினார். அதிலும் அதிதி செய்யும் தவமே அவள் கருவில் தான் தோன்ற மிகவும் முக்கியமாகும் என்று அருளாகி வழங்கினார்.

அப்போது அதிதி உலகையே தன்னுள் அடக்கியுள்ள பகவானைத் தன் கருவில் தன்னால் சுமக்க முடியுமா என்று ஐயத்துடன் கேட்க, விஷ்ணு உன் குழந்தையாக நான் பிறக்க இருப்பதால் உன்னையும் கரு பளுவையும் நானே சுமப்பேன், நீ தவம் செய் என்றார். இவ்வாறு கூறி நாராயணன் தக்க தருணத்தில் அதிதி கருவில் பிரவேசித்தார்.

அரக்கர்களிடையே அவ்வமயம் மகிழ்ச்சி குறைந்தது. உற்சாகமின்றி காணப்பட்டனர். இதுகண்ட பலிச்சக்கரவர்த்தி பாட்டன் பிரகலாதன் ஞானதிருஷ்டியால் நடக்கும் நிகழ்ச்சிகளுக்குக் காரணம் ஆராய பகவான் நாராயணனைத் தியானம் செய்தார். மகாமகிமை கொண்ட நாராயணன் அதிதி வயிற்றில் வாமனனாக அவதரிக்கப் போகிறார். அவர் மகாத்மா விஷ்ணுவின் அம்சமாக உதிக்கப்போகும் வாமனனே. அரக்கர்களின் தேஜஸ்ஸை கவர்ந்து கொண்டார் என்று கூறினார்.

அதுகேட்ட பலிநாராயணன் யார்? அவர் தன்னிடமுள்ள மகாராக்ஷசத் தலைவர்களைவிடச் சக்தி வாய்ந்தவரா? என்று ஏளனமாகப்பேச ஆரம்பிக்க, பிரகலாதன் கோபம் கொண்டு ராக்ஷசர்கள் தீயபுத்தி உள்ளவர்கள். அவர்ளுக்குப் பலி தலைவன். அதனால் அவனுக்கு விநாசகாலம். விநாசகாலே விபரீத புத்தி என்று எச்சரித்தார்.

உனக்கு உன் தந்தையும், அவனுக்குத் தானும், தனக்கு நாராயணனும் குரு. அத்தகைய பரமகுருவை தனக்கு உயிரினும் மேலான நாராயணனை நித்தித் தான் என்றும் அதனால் அவன் விரைவில் இராஜ்யத்தை இழப்பான் என்றும் சபித்தான் பிரகலாதன்.

பின்னர் பலி தான் செய்த தவறுக்கு பச்சாதாபப்பட்டு தன்னை மன்னித்து ஆசிர்வதிக்க வேண்ட, பிரகலாதனும் கோபத்தில் தான் கொடுத்த சாபமும் பலிக்கும் வரமாகமாறும் என்று சாபவிமோசன வழியாக அன்று முதல் பலியை விஷ்ணு பக்தி உடையவனாக இருக்குமாறு அறிவுரை பகன்றான்.

அதிதிக்கு மாதங்கள் நிறைய அழகிய வாமனனைத் தன் மகனாகப் பெற்றெடுத்தாள். தேவர்கள் மகிழ்ந்தனர். அசுரர்கள் துயரடைந்தனர். பிரம்மா தானே வந்து வாமனனுக்கு ஜாததர்மம் ஆகியவை செய்வித்து, பகவானை, அவரது லீலாவதார மகிமையைப் புகழ்ந்து துதி செய்தார். அப்போது வாமனாவதார நாராயணன் தேவர்களிடம் அவர்கள் வேண்டுகோளின்படி தான் அவதாரம் எடுத்திருப்பதை உணர்த்தி தான் வாக்களித்தபடியே நிறைவேற்றி அவர்களுக்கு மகிழ்ச்சி உண்டாக்கப் போவதாகக் கூறினார்.

பிரம்மா வாமனனுக்கு மான் தோல் அளித்தார். வியாழ பகவான் பூணூலும், மரீசி தண்டமும், வசிஷ்டர் கமண்டலமும் அளித்தார். ஆங்கீரசர் தர்ப்பை, ஆடைகள் கொடுத்தார். பிரணவத்துடன் கூடிய வேதங்கள் அவரை வந்தடைந்தன. பரத்துவாஜர் அவருக்கு உபநயனம் செய்வித்தார். பரத்வாஜரிடம் வாமனர் அத்யயனம் செய்தார். ஆங்கீரசர் சாமவேதம் கற்பித்தார். சங்கீதமும் கற்பித்தார்.

பின்னர் வாமனன் பரத்துவாஜரை நோக்கி குருவே மகாத்மாக்க ளெல்லாம் குருக்ஷேத்திரத்திற்குச் செல்கின்றனர். அங்குப் பலி சக்கரவர்த்தி அசுவமேத யாகம் செய்கிறானாம். அங்கு நானும் செல்ல விரும்புகிறேன். அனுமதி அளியுங்கள் என்று பிரார்த்திக்க பரத்துவாஜர் ஜகந்நாதா! நான் உனக்கு

கட்டளையிடுவதா? நீ போக முடிவு செய்தால் எனக்கெந்த ஆக்ஷேபனையும் இல்லை. நாங்களும் பலிசக்கரவர்த்தி யாகத்திற்கு வருகிறோம். நீ எங்கெல்லாம் இருப்பாய் என்று அருள்வாயாக என்று வேண்ட, வாமனனும் அப்படியே கூறலானார்.

விஷ்ணு சதுர்தச புவனங்களில் பல நாமங்களாகவும் இருப்பதாக பகவான் கூறினார்.

பின்னர் அனைவரும் பலியின் அசுவமேத யாகத்திற்குச் சென்றனர். பகல் இரவாயிற்று. பூமி அதிர்ந்தது. யாகசாலை அல்லகல்லோலமாயிற்று. யாகத்தில் அக்கினி மூலம் அரக்கர்களுக்குச் சேரவில்லை. இதை எல்லாம் கண்ட பலிச்சக்கரவர்த்தி தன் குருவாகிய சுக்கிராச்சாரியாரை அணுகி இவற்றிற்கான காரணத்தை அறிய வேண்டினார். சுக்கிராச்சாரியார் ஞான திருஷ்டியால் வாமனனாகிய (விஷ்ணு) வருவதை அறிந்து கூறினார்.

அப்போது பலி வாமனரை அதிதியாகத் தான் எவ்வாறு வரவேற்று உபசரிக்க வேண்டும் என்று கேட்க, அவர் பலி அரக்கர்களித்த அவிர் பாகங்களைத் தேவர்கள் அடையுமாறு செய்ய அவர் வருகிறார். அவருக்கு ஒன்றும் தரவேண்டாம். அப்படித் தருவதால் பயனேதும் இல்லை என்று சுக்கிராச்சாரியார் கூறிட, அதற்குப் பலிவரும் யாசகர் வேறு யாராக இருப்பினும் உங்கள் வார்த்தையைக் கேட்டிருப்பேன். ஆனால் சாக்ஷத் மகா விஷ்ணுவே அல்லவா! அப்படிப்பட்டவர் வந்து யாசகம் கேட்கும் போது எப்படி இல்லை என்று சொல்வேன். முற்பிறப்பு வாசனை பழக்கம் இந்த ஜன்மத்தில் கர்மமாகும். அதனை விடமுடியாது.

எனவே வாமனனுக்கு ஏதாவது தானம் தரவேண்டுமென்று உள்ளது. என்மேல் கருணை காட்டி நான் செய்யும் தானத்திற்குத் தாங்கள் தடை செய்ய வேண்டாம் என்று குருவிடம் பிரார்த்தித்தான்.

தான தர்மம், சத்தியம், பராக்கிரமம் கொண்ட பலிச்சக்ரவர்த்தி, வாமனனாகிய புருஷோத்தமனுக்குத் தானம் அளித்தால் எல்லாத்

தேவதைகளும் திருப்தி அடைவர். சற்பாத்திரமான அவருக்கு அளிக்கும் தானம் பெரும் பலனை அளிக்க வல்லது. அவர் கோபம் கொண்டு அவரால் தான் கொல்லப்பட்டாலும் அதைவிட தனக்கு நன்மை அளிக்கக்கூடியது வேறென்ன இருக்க முடியும்? இவ்வாறு அவர் கூறி முடிக்கையில் வாமனன் யாகசாலையை அடைந்தார்.

பலி சக்கரவர்த்தி, வாமனாவதார விஷ்ணுவை வணங்க, அவர் பலியை ஆசிர்வதித்து, யாகத் தலைவனான பலியை மிகவும் சிலாகித்துப் பேசினார். அதுகேட்டு அனைவரும் மகிழ்ச்சி அடைந்தனர். பலிச் சக்கரவர்த்தி வாமனர்க்கு அர்க்கியம், பாத்யம், அளித்து பூஜை செய்து தங்களுக்கு என்ன வேண்டும், எது வேண்டினாலும் அளிக்கத் தயாராக இருப்பதாக வாக்குத் தானம் செய்தான் பலி.

அப்போது வாமனன் பரத்து வாசரைக்காட்டி, இவர் என்னுடைய குரு. அக்னி ஹோத்திரம் செய்ய சொந்தமாக ஓரிடமும் மற்ற வசதிகளும் இல்லாததால் அவருக்காக நான் யாசிக்கிறேன். என் கால்களால் மூவடி நிலம் கொடுக்க வேண்டும் என வேண்டினார்.

உடனே பலி சக்கரவர்த்தி, தன் மனைவி வித்தியாவளியையும், மகனான பாணனையும் பார்த்துச் சிரித்த முகத்துடன் பாருங்கள் இவர் உருவில் மட்டுமல்ல, கோரிக்கையில் கூட வாமனனே தனக்கு மூவடி நிலம் மட்டுமே வேண்டுகிறார் என்று கூறிய பலி, வாமனனை நோக்கி, நீங்கள் எதை வேண்டுமானாலும் கேட்கலாம்! நீங்கள் யாசகர். நான் தாதன் அதாவது அளிப்பவன். எனவே மூவடி நிலம் கொடுப்பது எனக்கு வெட்கமாய் உள்ளது என்று பலவற்றை அளிப்பதாகக்கூறி வாமனன் அவை எல்லாம் எனக்கு ஏன்? நான் கேட்ட மூவடி மண்ணே போதும் என்றார்.

பின்னர் பலியின் மனைவி விந்தியாவளி நீருற்ற, பலி வாமனனின் கால்களைக் கழுவி மந்திரம் கூறி தானத்திற்கான நீரைத் தாரையாக வார்த்துக் கொடுக்க முற்பட, சுக்கிராச்சாரியார் சொம்பு மூக்கிலிருந்து நீர் வராமல்

தடையானார். அப்போது வாமனன் ஒரு தர்ப்பையால் நீர் வரும் மூக்கிலுள்ள தடையை நீக்கிட நீர் வர தானம் முடிந்தது.

அப்போது எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்க வாமனனாக வந்த விஷ்ணு ஓங்கி உலகளக்கும் உத்தமனாக மாறி ஓரடியால் மண்ணையும், அளந்து இரண்டாவது அடியால் விண்ணையும் அளந்து மூன்றாவது அடி நிலம் கொடுக்குமாறு கூற, அதைத் தன் தலைமீது வைக்குமாறு வேண்டிட, அவ்வாறே செய்த வாமனன் பலியை பாதாளத்திற்கு அனுப்பினார். அங்கு மனைவி புத்திரர்களுடன் பரிவாரங்களுடன் வசிப்பாயாக அங்கு உனக்கு இப்போதுள்ள போகங்கள் அனைத்தும் கிடைக்கும். உனக்கும் உன் மக்களுக்கும் ஆனந்த முண்டாகட்டும் என்று அருளினார்.

இக்குறிப்பு முல்லைப்பாட்டிலும், பெரும்பாணாற்றுப்படையிலும் இடம் பெற்றுள்ளது.

**''நீர் செல நிமிர்நத மா அல்'' என்றும், (முல்லை.3)**

**''இருநிலம் கடந்த திருமறுமார்பின் முந்நீர் வண்ணன்''**
**(பெரும்.29–30)**

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய கலித்தொகையிலும் இச்செய்தி கூறப்பட்டுள்ளது.

**''ஞால மூன்றடித்தாய முதல்வன்'' (கலி.124–1)**

**''நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்**
**நான்முக ஒருவற் பயந்த .....................'' (பெரும்பாண்.402)**

''நெடியோன் கொப்பூழ் நான்முக ஒருவற் பயந்த'' என்ற அடிகளால் நெடியோனாகிய திருமாலின் கொப்பூழ் (உந்தியில்) பிறந்தவன் பிரம்மன் என்பது தெரியவருகிறது. இதனை விரிவாக ''பதிணென் புராணங்களுள்''[47] ஸ்ரீபிரமாண்ட புராணம் இக்கதையைக் கூறுகிறது.

பிரம்மத்திலிருந்து நாராயணன் தோன்றி நீரில் மிதக்க அவர் நாடியிலிருந்து பிரம்மா தோன்றினார். அவர் நாராயணனையார் என்று கேட்க "அனைத்தையும் தோற்றுவிப்பவன் நான் என்று விஷ்ணு விடையளிக்க, பிரம்மா" நானே அண்டத்தைப் படைப்பவன் என்றார்.

பிரம்மாவின் சொற்களைக் கேட்டு வியப்படைந்த விஷ்ணு பிரம்மாவின் வாய்வழியே அவர் உடலுள் புகுந்து அனைத்து உலகங்களையும் அங்கு கண்டார். பிறகு வெளிவந்த விஷ்ணு பிரம்மாவிடம் ஆதியும், அந்தமும் காணப்படவில்லை என்றார். பிரம்மாவும் விஷ்ணுவின் உடலுள் வாய்வழியே புகுந்து அனைத்தையும் கண்டு, ஆதி அந்தமற்ற நிலையைக் கண்டு வெளிவர முயல்கையில் விஷ்ணு வாயை மூடிக்கொண்டு யோக துயில் கொண்டதால் வெளிவர இயலாமல் இறுதியில் தன் உடலைச் சுருக்கிக் கொண்டு நாடி வழியே வெளிவந்தார்.

அப்போது அங்கு சிவனும் தோன்றினார். அந்த வேகத்தில் நீர் தெளிக்க பிரம்மன் வீற்றிருந்த தாமரை அசைய, விஷ்ணு தாமரையில் உள்ள பிரம்மாவிடம் அவர் பூசிக்கத் தக்கவரே என்றும் தாமரை மலரிலிருந்து இறுங்குமாறு கூறினார். அப்போது பிரம்மா கேட்டுக் கொண்டபடி பிரம்மாவைத் தன் மகனாக ஏற்றார். பத்மா தாமரை யோனி மூலம் எனவே பிரம்மா "பத்மயோனி" எனப்பட்டார்.

இதிலிருந்து விஷ்ணுவின் புதல்வனாக பிரம்மாவின் பிறப்பு அமைந்தது தெளிவாகியது.

இக்கதை பரிபாடலிலும் வருகிறது.

**"தாமரை பூவினும் பிறந்தோனும் தாதையும்**
**நீயென மொழியுமால் அந்தணர் அருமறை" (பரி.3–13,14)**

**மதுரைக்காஞ்சி**

புறத்தில் நிலையாமை உணர்த்தும் காஞ்சித்திணை சார்ந்த இப்பாடல் 782 அடிகளைக் கொண்ட வஞ்சியடிகள் விரவிய ஆசிரியப்பா

வாகும். பாண்டியர் பெருமை, அவர்களது நாட்டுவளம், போர் வெற்றி முதலியன முதலிற் கூறப்படுகின்றன. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் பாடியது.

**“தென்னவன் பெயரிய துன் அருந்துப்பின்**
**தொல்முது கடவுள் பின்னர் மேய**
**வரைத்தாழ் அருவிப் பொருப்பின் பொருந!”**

***(மதுரை.காஞ்.40–43)***

இப்பாடலில் தொல்முது கடவுள் எனக் கூறப்படுபவர் அகத்தியர், அவருக்கு நிகரானவன் பாண்டியன் என்பதைக் கூற புலவர் அகத்தியரை உவமையாகக் கையாண்டுள்ளார். கடவுள் நிலைக்கு நிகராக வைக்கப்படும் காரணம் பற்றிய கதையை “கந்தபுராணம்”[49] எடுத்தியம்புகிறது.

சப்தரிஷிகளை அழைத்த சிவபெருமான், அசுர விரோதிகளால் துன்பத்திற்கு ஆளான விஷ்ணு முதலான தேவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து அந்த அசுர விரோதிகளைப் பூண்டோடு அழிப்பதற்காக என்னிடமிருந்து ஒரு புத்திரனை வேண்டினார். முனிவர்களே நானும் அவர்கள் வேண்டிய விதமே வரமளிப்பதாகக் கூறினேன். அதற்கிணங்கி தேவர்களின் பகைவர்களை அழிப்பதற்கு ஒரு சேனாதிபதியாக ஒரு குமரனை உண்டாக்குவதாக உறுதி செய்தேன். இன்று வரையிலும் சூரபதுமன் முதலான மூன்று அசுரர்களால் தேவர்கள் துன்புற்று வருகிறார்கள். எனவே தேவசேனாதிபதியாக சுப்பிரமணியனை நான் உண்டாக்கி யாராலும் நெருங்க முடியாத அந்தச் சூரபத்மனையும் அவனுடைய தம்பிகளையும் முன்பொரு சமயம் திரிபுரர்களைக் கொன்றழித்தது போல் சம்ஹாரம் செய்வோம். அதற்காகப் பர்வதராஜனின் புத்திரியான பார்வதிதேவியை என் மனைவியாக்கிக் கொள்ள விரும்புகிறேன் என்றார்.

அதன்படியே சப்தரிஷிகள், (பர்வதராஜன்) பார்வதியின் தந்தையிடம் சென்று பேசி திருமணத்திற்குச் சம்மதிக்க வைத்து, நாளும் குறித்துச் சென்றார்கள்.

பார்வதி பரமேஸ்வரரின் திருக்கல்யாண வைபவத்தைக் கண்டு மகிழ்ந்த அசையும் அசையாப் பொருட்கள் முதலான சகல உலகங்களும் பெரிதும் உவகையடைந்தன. தேவர்கள், முனிவர்கள், பிரமத கணங்கள் யோக ஞானிகள் ஆகிய அனைவரும் பார்வதி பரமேஸ்வரனை பக்தி சிரத்தையோடு வணங்கி நமஸ்கரித்தார்கள். அப்போது பார்வதி பரமேஸ்வரரின் திருக்கல்யாண மகோற்சவத்தைக் கண்டுகளிக்கும் பொருட்டு சகல உலகிலுள்ள மக்களும் அங்கே வந்து கூடியிருந்ததால், பூமி பாரம் தாங்க முடியாமல் தெற்குத் திசையில் உயர்ந்தும், வடக்குத் திசையில் தாழ்ந்தும் போய்விட்டது. அதைக் கண்ட மக்கள் அனைவரும் அளவு கடந்த பீதியடைந்து, நடுநடுங்கினார்கள். தாங்கள் பூமியிலிருந்து சரிந்து கீழே விழுந்துவிடுவோமோ என்ற பயத்தில் தேவர்களும், தபோதனர்களும் வருந்தி, சூலபாணியான பரமேஸ்வரனைத் தஞ்சமடைந்து அவரை மீண்டும் மீண்டும் வணங்கித் துதித்தார்கள். சம்போமகாதேவனே! தயாநிதியே! எங்களுடைய பாரம் தாங்காமல் பூமியானது வடக்குப் பக்கமாகக் கீழ்நோக்கிச் சரிகிறது. தேவதேவனே! நாங்கள் அனைவரும் கீழே விழுந்து விடாதபடி தாங்கள் தான் விரைவில் கருணைபுரிய வேண்டும். தங்களுடைய மகிமையால் பூமியைச் சரிந்து விழாதபடிச் சமனமாகச் செய்துவிட வேண்டும்! என்று தேவர்கள் அனைவரும் ஈஸ்வரனிடம் வேண்டி நின்றார்கள்.

அவர்களுடைய வேண்டுதலைக் கேட்டு மனமிரங்கிய பெருமாலும் புன்முறுவல் பூத்த முகத்தோடு அகத்திய முனிவரை அழைத்து தெற்குத் திசையில் சென்று தங்கியிருக்குமாறு அவருக்குக் கட்டளையிட்டார். அவரை முன்னிட்டு தென்திசையிலும் தன் கல்யாண கோலத்தைக் காட்ட நினைத்தார். அறிவு மிகுந்த அகஸ்திய முனிவரோ ஆறாத் துயரத்தோடு தமது பத்தினியையும் கூட்டிக் கொண்டு வானவெளி வழியாக மலைய மலையின் அடிவாரத்தை அடைந்தார். சதாசிவத்தியானத்திலே சிந்தையை வைத்திருப்பதால் சிவனுக்கு நிகரான சக்தி வாய்ந்த, அகத்திய முனிவர் மலையபர்வதத்தில் காலடியெடுத்து வைத்தவுடனேயே மேடு பள்ளமாக ஏறித்தாழ்ந்திருந்த பூமியானது சரிசமமாக மாறிவிட்டது. தங்களுக்கு எவ்வித

ஆபத்துமில்லாமல் பூமி சமனமாக ஆகிவிட்டதைக் கண்டதும் தேவர்களும் மற்றவர்களும் அளவு கடந்த ஆனந்தப் பூரிப்பில் லயித்தார்கள்.

"பொதியில் குன்றத்து முனிவன் அகத்தியன் முனிவர்களைக் கடவுளர் எனக் கூறும் வழக்கு உண்டு. சிவன் உமை திருமணத்தின் போது தென்திசை உயர்ந்த இன்னலை நீக்கப் பொதிய மலையில் இருந்தவன். இறைவனோடு ஒப்ப இருந்தமை பற்றி அகத்தியன் கடவுள் எனக் குறிக்கப்பட்டார்"[50] என்பது தெளிவாகிறது.

**தொகுப்புரை**

★ சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை பத்துப்பாட்டில் உள்ள கதைகள் பெரும்பாலும் உவமைகளாகவே எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

★ அக இலக்கியங்களிலும், புற இலக்கியங்களிலும் சூழலுக்கு ஏற்றவாறு கதைகள் குறிப்பாகவும், விரிவாகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

★ புராண இதிகாசக் கதைகள பெருமளவு காணப்படுகிறது.

★ மூவேந்தர்கள் குறித்த கதைகள், குறுநில மன்னர்கள், கடையேழு வள்ளல்கள் குறித்த காதைகளும் காணப்படுகிறது.

★ சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை பத்துப்பாட்டில் உள்ள கதைகள் பெரும்பாலும் உவமையாகவே எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

★ சமுதாய மாற்றங்களை, சமுதாய வளர்ச்சிப் போக்குகளை, சிந்தனைப் போக்குகளை வெளிப்படுத்தும் ஆவணமாக அமையும் தொன்மம் சங்கச் சமுதாயத்தின் பல்வேறு பரிமாணங்களை வெளிப்படுத்தும் இயல்பினதாக கதைகள் அமைந்துள்ளது.

★ சங்கப் பாடல்களில் புராணச் செய்திகள் கடவுள் பாடல்களில், பிற அகத்திணை புறத்திணைப் பாடல்களில் என இருபிரிவுகளில் அமைந்துள்ளது.

- ★ கடவுளர்களாக திருமால், சிவன், பலராமன், இந்திரன், நான்முகன், கொற்றவை போன்ற கடவுள்களைப் பற்றிய புராணக் கதைகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.

- ★ முப்பெரும் கடவுளுக்கு மேலானவன் திருமால் எனும் செய்தி ஈரிடங்களில் வலியுறுத்தப்படுகிறது.

- ★ கலித்தொகை, அகநானூறு புறநானூறு ஆகிய நூல்களில் சிவன் குறித்த கதகள் அதிக அளவில் இடம்பெற்றுள்ளது.

- ★ சூர் மருங்கறுத்த சுடரிலை நெடுவேல் கொண்டு முருகன் சூரனை அழித்த நிகழ்வு, முருகன் பிறப்பு, முருகனது திருமண நிகழ்வு போன்றவைகள் பரிபாடலில் இடம்பெற்றுள்ளது.

- ★ அக இலக்கியங்களிலும், புற இலக்கியங்களிலும் சூழலுக்கு ஏற்றவாறு கதைகள் குறிப்பாகவும் விரிவாகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

- ★ மூவேந்தர்கள் குறித்த கதைகள், குறுநில மன்னர்கள், கடையேழு வள்ளல்கள் குறித்த கதைகளும் காணப்படுகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. *வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–11, ப.303*
2. *வாழ்வியற் களஞ்சியம் தொகுதி–8, ப.583*
3. *சு.குலசேகரன், செந்தமிழின் பொற்காலம், ப.120*
4. *கிருஷ்ணமாச்சாரியார், பதினெண் புராணங்கள், ப.134*
5. *வாழ்வியற்களஞ்சியம், தொகுதி–8, ப.673*
6. *வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–10, ப.*
7. *சங்க இலக்கியக் கட்டுரைகள், ப.58*
8. *வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–2. ப.339*
9. *வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–2, பக்.120, 121*
10. *வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–10, ப.624*
11. *தராசன், இராமாயணக்கதைகள், பக்.25–30*
12. *கிருஷ்ணமாச்சாரியார், பதினெண் புராணங்கள், ப.17*
13. *ப.சரவணன், சிவபுராணம், ப.39*
14. *எம்.நாராயணவேலுப்பிள்ளை, மகாபாரதக்கதை, பக்.23–25*
15. *கிருஷ்ணமாச்சாரியார், பதினெண் புராணங்கள், ப.47*
16. *இராஜகோபாலாச்சாரி, மகாபாரதம், ப.430*
17. *மேலது, ப.120*
18. *கிருஷ்ணமாச்சாரியார், பதினெண் புராணங்கள், 1.180*
19. *செந்துறைமுத்து, பாகவதக் கதைகள், பக்.46, 47*
20. *மேலது, ப.57*
21. *கு.வெ.பாலசுப்பிரமணியன், புறநானூறு மூலமும் உரையும், தொகுதி–1, ப.105*
22. *ப.சரவணன், சிவபுராணம், ப.36*
23. *வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–1, ப.326*
24. *வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–12, பக்.965*
25. *உ.வே.சாமிநாதையர், புறநானூறு மூலமும் உரையும் ப.76*
26. *வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–6, ப.415*

27. மேலது, தொகுதி–7, ப.646

28. உ.வே.சாமிநாதையர், புறநானூறு மூலமும் உரையும், ப.69

29. மேலது, ப.80

30. அரு.இராமநாதன், கந்தபுராணம் (முதற்பாகம்), ப.470

31. இராஜகோபாலாச்சாரியர், மகாபாரதம், ப.45

32. தமிழ்ப் பல்கலைக்கழகம், சங்க இலக்கியக் கட்டுரைகள், ப.217

33. கிருஷ்ணமாச்சாரியார், பதிணென் புராணங்கள், ப.546

34. மேலது, ப.594

35. மேலது, ப.177

36. செந்துறைமுத்து, பாகவதக் கதைகள், ப.46

37. கிருஷ்ணமாச்சாரியார், பதிணென் புராணங்கள், ப.562

38. க.சரஸ்வதி, பக்த பிரகலாதன், ப.7

39. அரு.ராமநாதன், கந்தபுராணம் (முதற்பாகம்) ப.476

40. கிருஷ்ணமாச்சாரியார், பதிணென் புராணங்கள, ப.408

41. கு.வெ.பாலசுப்பிரமணியன், பரிபாடல் மூலமும் உரையும், ப.501

42. கிருஷ்ணமாச்சாரியார் பதினெண் புராணங்கள், ப.259

43. அரு.இராமநாதன், கந்தபுராணம் முதற்பாகம், ப.476

44. இரா.மோகன் (உ.ஆ.), பத்தப்பாட்டு மூலமும் உரையும் (தொகுதி–1), ப.52

45. மேலது, ப.92

46. இரா.மோகன் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.233

47. கிருஷ்ணமாச்சாரியார், பதிணென் புராணங்கள், ப.530

48. மேலது, ப.614

49. அரு.ராமநாதன், கந்தபுராணம், ப.131

50. இரா.மோகன் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும் (தொகுதி–2) ப.37

வாழ்க்கையில் மனிதன் கண்ட ஆழ்ந்த அனுபவத்தையும் பேருண்மைகளையும் வெளியிடுவது இலக்கியம். “இலக்கியம் என்பது மக்களுக்குத்தேவையான கருத்துக்களை அல்லது மக்களது சிந்தனைகளைச் சிறந்த சொற்களால் சொல்லக்கூடிய கருவியாகும்”[1] அறிவுத்துறைகள் மனிதரின் மூளைக்கு மட்டும் எட்டி இயங்குவன. ஆனால் உணர்ச்சிக்கு வடிவங்களான இலக்கியத்துறைகள் மூளையை மட்டும்அல்லாமல் மனத்தால் வாழும் வாழ்வு முழுவதையுமே இயக்குவன. ஒரு சமுதாயத்தின் விருப்பு வெறுப்பு நம்பிக்கை முதலியவற்றை வளர்த்துப் பண்படுத்துவது அந்த சமுதாயத்தின் இலக்கியமேயாகும். பாட்டு, காவியம், நாடகம், கதை முதலியன இயற்றித்தரும் புலவர்கள் சட்டம் இயற்றும் ஆட்சியாளரைவிட ஆற்றல் மிக்கவர்கள். அத்தகைய ஆற்றல் மிக்கோரின் திறன்களைக் கதைகளின்வழிக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

**படைப்பாளர்கள்**

இலக்கியம் வாழ்க்கையோடு தொடர்புடையது. வாழ்க்கைக்கு அது அடிப்படையாக இருக்கிறது. நல்ல வாழ்க்கை அமைவதற்குரிய கருவியாக இலக்கியம் படைக்கப்படுகிறது. இலக்கியம் படைக்கப்படுவதற்குரிய உந்து சக்திகளை இலக்கியத் துடிப்புகள் எனக் கூறுகின்றனர். இலக்கியம் மனித முயற்சியால் அன்றித் தெய்வீக அகத்தூண்டலால் வெளிப்பட்டு வருகின்றது. “கருவில் திருவுடையராகப் பிறந்தோரே”[2] படைப்பாளன் என்பது மேற்கு நாடுகளின் நம்பிக்கை.

தாம் வாழ்வில் பெற்ற இன்ப துன்பங்களை அனுபவத்தை மொழியின் மூலம் படிப்போர் எளிதில் உணரும் வண்ணம் வெளிப்படுத்துவரே படைப்பாளர். “அனுபவத்தின் வெளிப்பாடே இலக்கியம்.”[3]

புதுமையைப் புலப்படுத்தும் துடிப்புடையோனாக படைப்பாளன் திகழ வேண்டும். யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் எனும் பரந்த நோக்கம் உடையவராக இருக்க வேண்டும். காலம் என்னும் காரிருளில்

தம்முடைய புகழொளியை நிலைநாட்டி விட்டுச் செல்லும் நோக்கத்தோடு உள்ளத்து உந்துதல், ஆற்றல்களால் துடிப்புகளுள் ஒன்றாலோ, பலவற்றாலோ உலகில் தோன்றாப் புகழொடு விளங்கும் கலைப்படைப்புகள் யாவுமே படைக்கப்பட்டுள்ளன.

**படைப்புத்திறன்கள்**

மக்களுக்காகப் படைக்கப்பட்ட இலக்கியங்கள் மக்களைச் சென்றடையப் படைப்பாளர்கள் பல்வேறு உத்திகளைப் பயன்படுத்துவர். இதன் மூலமாகவே புலவன் கூற விரும்பிய செய்தி மக்களைச் சென்றடைகிறது. இவ்வுத்திகள் வாசிப்பாளரை ஈர்ப்பதாக அமைதலிலேயே அப்படைப்பாளனின் வெற்றி அமைகின்றது.

**உத்திகள்**

உத்தி என்பது படைப்பாளன் தான் கூற வந்த உள்ளடக்கத்தை வெளிப்படுத்தும் முறையே ஆகும். உவமை, உருவகம், படிமம், குறியீடு போன்றவற்றை உத்தியில் அடக்கலாம்.

இலக்கியம் செய்வோன் சொல்லும் செய்தியைச் சுவைபட, நயத்தோடு சொல்ல வேண்டும். புலவர் தான் சொல்ல வந்த செய்தியை நேரடியாகச் சொல்வதைவிடக் குறிப்பாக, உவமை, உருவகம் ஆகிய உத்திகள் மூலம் சொல்வது கலை நயத்தை மிகுவிக்கும். சங்கப் புலவர்கள் பாடல்களில் பயன்படுத்தியுள்ள கதைக் குறிப்புகளையும் இவ்வுத்திகளில் ஒன்றாக அடக்கலாம்.

கூற்றுகளாக அமைந்த பாடல்களில் அக்காலத்து வழங்கப்பட்ட, மக்களால் நன்கு அறியப்பட்ட, கதைகளை அமைத்தது புலவர்களின் தனித்தன்மைக்குச் சான்றெனக் கருதலாம். பொதுவாக தங்களால் அறியப்பட்ட சில கதைகளை உவமையாகவோ, உள்ளுறையாகவோ, செய்தியாகவோ எடுத்துரைத்து கதைகளின் மீது ஆர்வம் கொண்ட மக்களின் நாடியறிந்து சுவையாக அமைப்பதில் சங்கப் புலவர்கள் திறம் பெற்றுள்ளன. இக்கதைகள்

புலவர்களால் மட்டுமல்லாமல் அவ்விலக்கியம் படைக்கப்பெற்ற காலத்து மக்களும் அறிந்து கொள்ளும் வகையில் அமைக்கப்பட்டக் கதைகளாக இருந்திருக்க வேண்டும். ஆதலால் பெரும்பாலும் மன்னர்கள் பற்றிய கதைகளையே மிகவும் அதிகமாகக் கூறப்பட்டுள்ளன. இவை அக்காலத்தில் சமூகச் சூழலை மன்னர் மக்கள் உறவுமுறையை மன்னராட்சியின் சிறப்பை எடுத்துரைப்பதாய் அமைகின்றன.

**உவமை**

தெரிந்த ஒரு பொருளைக் கொண்டு தெரியாத ஒரு பொருளை ஒப்பிட்டுக் காட்டுவது உவமையாகும்.

“செய்தியைக் கலையாக்கி நெஞ்சத்தைக் கற்பனையில் பிணிப்பதில் முதலிடம் பெறுவது உவமை.”[4]

பண்பு, தொழில், பயன், உரு என்ற நான்கின் காரணமாக ஒரு பொருளை அதன் தன்மை கொண்ட மற்றொரு பொருளொடு ஒப்பிட்டுக் கூறுவதற்கு உவமை என்று பெயர் ஆகும்.

இலக்கியத்திற்கு வேறு எத்தன்மை இருப்பினும் போதாது. உணர்த்தும் ஆற்றல் இருத்தல் இன்றியமையாதது. புலவரின் மனதில் விளங்கிய அனுபவமே படிப்பவரின் மனத்திலும் விளங்குமாறு செய்தல் வேண்டும். அனுபவித்தது என்ன என்று சொல்லுதல் போதாது, வந்த அனுபவத்தையே தருதல் வேண்டும். ஒரு மனத்திலிருந்து மற்றொரு மனதிற்கு அந்த அனுபவம் மாறி அமைய வேண்டும் என்கிறார் அறிஞர் ஆபர்குரோம்பி.”[5]

சங்கப் பாடல்களைப் பாடும் புலவர்கள் பெரும்பான்மையும் தாம் உணர்ந்ததை தக்க இடத்தில் பயன்படுத்தியுள்ள உத்திகள் போற்றுதற்குரியது. அத்தகைய உத்திகளுள் ஒன்று தான் கதை கூறுதல். அக்கதைகளை உவமையாகச் சொல்லப்பட்ட கதைகள் மன்னர்களைப் பற்றிய கதைகள், கடவுளைப் பற்றிய கதைகள் என்ற பிரிவில் அடங்கும்.

## உவமையாகச் சொல்லப்பட்ட கதைகள்

*குறுந்தொகை 73, 292, 292 மூன்று பாடல்களிலும் நன்னன் என்ற குறுநில மன்னன குறித்த கதையை தோழி தக்க இடத்தில் உவமையாகக் கூறுகிறாள்.*

*முதல் பாடலில் களவொழுக்கம் மேற்கொண்ட தலைவி, பகலிலும், இரவிலும் தலைவன் வரவை பெரிதும் விரும்புகின்றாள். இச்சூழல் நீண்ட நாள் நீடித்தால் அலராகிவிடும் என்று உணர்ந்த தோழி தலைவனை வரைவு கடாவினாள். அச்சூழலில் அனைவரும் அறிந்த பெண் கொலை புரிந்த நன்னன் கதையை உவமையாக எடுத்துரைக்கின்றாள்.*

*தலைவனும் தலைவியும் ஒரு சிறு கணப்பொழுதேனும் பிரியாது இருக்க வேண்டும் என்ற எண்ணம் உடையவர்கள். அவர்கள் இருவரும் சந்திப்பதை தடுத்து நிறுத்தினால் தலைவன் தலைவியைப் பிரிந்து இருக்க முடியாத சூழல் உருவாகி விரைவாக திருமண ஏற்பாடுகளைச் செய்வான் என்று தோழி இருவரும் சந்திக்க முடியாதபடி சூழ்ச்சி செய்தாள். இச்சூழ்ச்சி எவ்வாறு இருந்ததெனில் என்று இக்கதை உவமையாகப் பயன்படுத்தியுள்ளார்.*

*கோசர்கள் செய்த சூழ்ச்சி நன்னன் மாமரம் நாட்டைவிட்டு போக்குவதற்காக, அதுபோல் தோழி செய்த சூழ்ச்சி தலைவியை தலைவன் மணம் புரிவதற்காக என்றார்.*

**“பொய்மையும் வாய்மை யிடத்து புரைதீர்ந்த**
**நன்மை பயக்கு மெனின்” *(குறள்.292)***

*இதேபோல் 292வது பாடலிலும் இக்கதையை புலவர் உவமையாக எடுத்தாண்டுள்ளார். களவு ஒழுக்கம் கொண்ட தலைவன் இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்க வரும்வேளையில் தோழி அவன் வரவினை உணர்ந்தும் உணராதவள் போல் தலைவியிடம் தோழி, அன்று ஒருநாள் இரவுக்குறியில் வந்தடைந்த தலைவனைப் பார்த்த தம் அன்னை அன்றிலிருந்து உன்னை வெளியே விடாதவாறு பாதுகாப்புடன் இருக்கிறாள். இவளின் இச்செயலால் கொடிய நரகத்தினை அடைவாள் என்றுரைக்கும் சூழலில் நன்னன் கதையை*

உவமையாக எடுத்துரைக்கின்றாள். அன்னையை பழிப்பது போல் கூறினும் தலைவனுக்கு அறிவுணர்த்தவே இவ்வாறு இற்செறிக்கப்பட்ட தலைவியைக் காண்பது அரிது. எனவே அவளை மணம் முடித்தலே மேலான செயல் என்று தலைவன் உணரும் விதமாக தோழியால் இக்கதை உணர்த்தப்பட்டது.

குறுந்தொகையின் 298வது பாடலும் பரணரால் இயற்றப்பட்டது. இப்பாடலில் தோழி, தலைவியிடம், தலைவன் இரவினும், பகலினும் பலநாள் வந்தும், அல்ல குறிப்பட்டு அவளைப் பெறாமல், காமம் மிகுந்து மடலேறுதலே சிறந்தது. அத்தகைய வழியைப் பின்பற்றி தலைவியை அடையும் நோக்கம் என்பதைக் கூறும்போது, இக்கதையை உவமையாகக்கூறி,

கோசர் குலப்பெண்ணை கொன்ற நன்னனை பழிவாங்க அகவல் மகளிரைப் பயன்படுத்தியது போல், உன்னை வரைதல் (திருமணம்) பொருட்டு தலைவன் மடல் ஏறினால் உன் களவு ஊராருக்குத் தெரிந்து உன் நாணம் அழியும். எனவே அத்தகையதொரு நிகழ்வு ஏற்படாமல் இருக்க தலைவனை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றாள்.

இப்பாடல்கள் வழியாக அக்காலச் சமுதாயத்தில் சிறிய தவறு இழைத்தாலும் கொடிய தண்டனை வழங்குதலும், தண்டனையைக் குறைக்க எடைக்கு நிகராக பொருள் வழங்கக்கூடிய நிலையும், கோசர்கள் நிலை, அகவல் மகளிரை புரவலர்கள் போற்றும் பாங்கு, அறியாது செய்த தவறினை மன்னிக்கத் தவறிய மன்னனுக்கு தீராத பழிச் சொல்லான “பெண் கொலை புரிந்த நன்னன்” என்பதே பெயராயிற்று போன்ற செய்திகளை படிப்போன் உணர்ந்து இன்புறும் வகையில் பரணர் தெளிவாக உணர்த்தியுள்ளார்.

நற்றிணையில் 216வது பாடல் கண்ணகி குறித்த கதையைத் தருகின்றது. தலைமகனின் அன்பும் அருளும் கிடைக்கப்பெற்ற காதற்பரத்தை தன் நிலைமையை தலைவனுக்கு உணர்த்தக் கருதினாள். தலைவனுக்கு பாங்காய் அமைந்த பாணன், விறலி ஆகிய இருவருள் ஒருவரை முன்னிலைப்படுத்தி அவர் என்னோடு இல்லாதபோதும், அவரைக் காணுதல் ஒன்றே இன்பமாக அமைந்தது. தற்போது அவர் ஊரில் இல்லாத நிலையில் இந்த ஊரும் இனிமையைத் தரவில்லை

என் வருந்தி உரைத்த சூழலில் இக்கதை உவமையாக எடுத்தாளப்படுகிறது. எனது இந்தப் பிரிவுத் துயரம் கண்ணகியின் பிரிவுத் துயரை ஒத்தது என அவள் கோவலன் இழந்த ஒரு முலையுடையவளாள் வேங்கை மரத்தின் அடியில் நின்றிருந்த இச்சிலப்பதிகாரக் கதையை ஆசிரியர் எடுத்தாண்டுள்ளார்.

அகநானூற்றின் 45வது பாடல் தலைவியை விடுத்து தலைவன் பொருள்வயிற் பிரிந்தான். பிரிவாற்றாது வருந்தும் தலைவியைத் தோழி தலைவன் வரும்வரை ஆற்றியிருக்கச் சொன்னாள். அது கேட்ட தலைவி அவ்வாறு ஆற்றியிருத்தல் தன்னால் இயலாது என்று கூறும் சூழலில் எந்நிலை எவ்வாறு உள்ளதெனின்,

கரிகாலன் மகள் ஆதிமந்தி நீர்விழாவொன்றில் கழாஅர் என்னும் ஊரைச் சார்ந்த காவிரித்துறையில் தன் கணவனாகிய அத்தியுடன் நீராடுகையில் காவிரிப் பெண்ணாள் தன் திரைக்கையால் அவனை வெளவிக் கொண்டு கடலிற் கொண்டு போய் ஏனித்துக்கொள்ள, இவன் அவனைக் காணாது புனல் வழியே காவிரிக்கரைமீது தொடர்ந்து சென்றாள். சென்றவள் என் தலைவனாகிய ஆட்டன் அத்தியைக் காணீரோ என நாடுதோறும் ஊர்தோறும் தேடி அலைந்து என் தலைவனைக் கடல் கொண்டதுபோலும், புனல் கொண்டது போலும் என துன்பப்பட்டு ஆற்றாது இருந்த ஆதிமந்தி போல் நானும் வருந்துகிறேன். பிரிவு என்பது யாராலும் தாங்கமுடியாத செயல், அச்செயலால் பலரும் வருந்துவர் பிரிவால் வருந்துவது எத்தகைய கொடியது என்று எல்லோரும் அறிந்த இக்கதையை உவமையாக எடுத்துக் கூறியுள்ளார்.

மேலும் இப்பாடலில் தலைவன் தலைவிமீது கொண்ட அன்பானது ஊராருக்குத் தெரிவது அலராகும். அவ்வலருக்கு உவமையாக புலவன் அன்னி என்பான் குறுக்கை என்னும் இடத்தில் திதியன் என்பனது காவல் மரமாகிய புன்னையை வெட்டி வீழ்த்தித் துண்டுகளாகத் துணித்த பொழுது அவன் புகழைப் பாடிப் பரவிய கூத்தர் தம் இன்னிசை முழக்கத்தினும் பெரிதாகும் என்ற வரலாற்றுக் குறிப்பும், ''அலர்'' என்பது எத்தன்மையது என்பதும் இப்பாடலில் உணர்த்தப்பட்டுள்ளது.

இதேபோல் **59**வது பாடலில் தலைவன் பொருள் ஈட்டலை நினைத்துத் தலைவியைப் பிரிந்து தொலை தூரம் சென்றான். குறித்த காலத்துத் தலைவன் வாராமை கண்ட தலைவி வருத்தமுற்றுத் தன் பேரழகு இழந்து உடல் வேறுபாடு கொண்டாள். அது கண்ட தோழி, தலைவர் விரைந்து வருவார், அதுவரை நீ ஆற்றியிருத்தல் வேண்டும் எனக்கூறும் சூழலில் உவமையாக,

வடதிசையில் உள்ள நீர்வளம் குன்றாத யமுனையாற்றின், மணலையுடைய அகன்ற துறையில் நீராடிய ஆயர் மகளிர் குளிர்ச்சி பொருந்திய தழையை உடுத்திக் கொள்வதற்காகக் குருந்த மரக்கிளை வளையுமாறு அதனை மிதித்துத் தந்த கண்ணபிரான் என்ற தொன்மக் கதையை பதிவு செய்துள்ள திறம் போற்றற்குரியது. அதுமட்டுமல்லாது இப்பாடலில் ''இறைச்சி'' பொருள்பட புலவர் கூறியிருப்பது சிறப்பானது, களிறு, தன் பிடி தளிர்களை உண்ணுவதற்கு யா மரத்தினை வளைத்துத் தரும் என்றது, களிது தன் பிடியின்பாற் காட்டும் காதலன்பினை வழியிற் காணும் தலைவன், தலைவிபாற் கொண்டுள்ள காதலால், அவளை நினைந்து விரைந்து வருவான் என்பதாகும்.

அகநானூற்றின் எழுபதாவது பாடல் தலைவன் தலைவியை மணந்து செல்லும் கருத்தின்றிக் களவொழுக்கமே காமுற்று ஒழுகினான். அலர் மிகுந்த காரணத்தினாலும் தோழி வரைவு கடாவியதாலும் வரைவு உடன்பட்டவனாய்த் தலைவியை மணந்து செல்ல வருகின்றமை அறிந்த தோழி அவ்வின்பச் செய்தியைக் கூறும் சூழலில் இக்கதையை உவமையாகக் கூறுகிறார்.

இராமன் இலங்கைமேல் படையெடுத்துச் செல்லும் பொருட்டுத் திருவணைக் கரையருகேயிருந்த ஆலமரத்தின் கீழ் தமக்குத்துணையான வானரவீரருடன் மறைச்செய்திகளைக் கூறும்போது மரத்திலிருந்த பறவைகள் ஒலியெழுப்பாதவாறு தன் ஆணையால் அடக்கினான்.

அதாவது தலைவன் தலைவி காதல் நிலை அறிந்த ஊரார் அலர் தூற்றினர். அதனைக்கூற விளைந்த புலவர், இராமன் இலங்கைமீது

படையெடுத்துச் செல்ல மரத்தின் அடியில் திட்டம் தீட்டினார். அப்போது பறவைகள் ஒலியெழுப்பின, அதனை தன் ஆணையால் அடக்க, பறவைகள் சப்தம் ஒடுங்கியது. அதுபோல தலைவருடன் மணம் கூடிய பிறகு அலர் தூற்றி ஆரவாரம் செய்த இவ்வூரும் ஒலியடங்கப் பெற்றது என புலவர் உவமையாக இக்காப்பியக் கதையை எடுத்துரைத்த விதம் போற்றற்குரியது.

அகநானூற்றின் **76**வது பாடல் பரணர் இயற்றியது. பரணர் பாடலில் வரலாற்றுச் செய்திகள் உவமையாக இடம்பெறும் என்பதற்கு எடுத்துக் காட்டாக திகழ்கிறது.

பரத்தையின் கூற்றாக அமைந்த பாடலில் பரத்தையின் ஆடல் பாடலில் மயங்கினான் தலைவன் எனக்கேட்ட தலைவி அப்பரத்தையைப் பழித்து அவனோடு ஊடினான். தன்னைப் பழித்தமையைக் கேள்வியுற்ற பரத்தை அவன் கூத்துக்கான வந்த அளவிற்கே என்னைத் தூற்றினாளோ, இனி அவள் அவளை என்பால் முற்றிலும் இழந்து கதறியழ அவனை நான் கைக்கொள்வேன் எனச் சூளுரைத்து சினந்து கூறும் நிலையில் இக்கதையை அதாவது,

பாடல் இசைத்தும் ஆடல் காட்டியும் நான் ஊரனை வசப்படுத்திக் கொண்டேன் எனத் தலைவி கூறுவாளாயின் காவிரி வெள்ளத்தில் தன் கணவனை இழந்து ஆதிமந்தி வருந்தியமை போன்று இவளும் என்னிடத்தே தன் கணவனை இழந்து வருந்துவாள் என ஆதிமந்தி கதையை உவமையாக எடுத்துரைக்கிறாள்.

இப்பாடலின் மூலம் வஞ்சினம் கூறல் என்பது புறத்துக்கும் மட்டும் அல்ல அகத்தும் பொருந்தும் என்பது பரத்தையின் கூற்று வாயிலாக பரணர் விளக்குகிறார். மேலும் இப்பாடலில் தலைவி பரத்தை குறித்து வசைபாடுதலை கூறும்போது ஒரு வரலாற்றுச் செய்தியினை புலவர் பதிவு செய்கிறார்.

அஃதை என்பானது களிறுகளுடன் நல்ல அணிகலன்களையும் பரிசிலர்க்கு வழங்கும் மகிழ்ச்சி பொருந்திய நாளோலக்கத்தையுடைய

அவையிடத்துப்புகும் கூத்தரது பறை இடைவிடாது ஒலிப்பது போன்று ஒழியாது வசைபாடுகின்றாள்.

“அஃதை இவன் மதுரையிலிருந்து ஓர் உபகாரி, கூத்தரைப் புரக்கும் பண்பினன். அவர்க்குக் களிற்றொடு நன்கலம் பரிசிலாக வழங்குபவன், அகுதை எனவும் இவன் வழங்கப்பெறுவான்.”[6]

அகநானூற்றின் 196வது பாடலும் பரணரால் இயற்றப்பட்டது. தலைவன் பரத்தையற் சேரிக்குச் சென்று அவரோடு தங்கி, வைகறைப் பொழுது இல்லம் திரும்பினான். அப்போது ஊடல் கொண்ட தலைவி இக்கதையை உவமையாக எடுத்துரைத்தாள்.

கோசர்களுக்குச் சொந்தமான ஊர்மிகு புன்செய் நிலத்தில் பசிய இலைகள் நிறைந்த பயிற்றங்கொல்லையில் அன்னியின் பசு மேய்ந்தது. அன்னி அதனைக் கோசரிடம் மறையாமல் உரைத்தான். பசு மேய்ந்த சிறு பிழைக்கு இரங்கி அருளாமல் அக்கோசர்கள் அன்னியின் கண்களைப் பறித்து விட்டனர். அதனால் சினம் கொண்ட அன்னியின் மகள் மிஞிலி என்பவள் அன்னிக்கு இழைக்கப்பட்ட கொடுமையை ஆற்றல் வாய்ந்த படையினை உடைய திதியன் என்பவருக்கு உரைத்தாள். அவள் அக்கோசரோடு பொருது அவரைக் கொன்றான். திதியன் கோசரோடு போர்புரிந்த இடம் “அழுந்தூர்”. அவ்வாறு கொள்ளும்வரை கலத்தில் இட்டு உண்ணாமலும் தூயதாகிய உடையினை உடுத்தாமலும் சினம் மாறாமலும் இருந்த மிஞிலி கோசர் இறந்த பிறகு தன் நோன்பை விட்டுச் சினம் மாறிப் பெரிதும் செருக்குற்றாள்.

வஞ்சினம் கூறும் இயல்புடைய கோசர்கள் சிறிதும் அருளின்றி அன்னி மிஞிலி போல, நின் நலத்தை நுகர்வதற்குத்தக்கவளாகிய பரத்தையும் நின்னை அடைந்த களிப்பு மிகுதியால் செருக்குற்றுத் திரிகின்றாள் என்று அன்னி மிஞிலி கதையை உவமையாகக் கூறுகிறாள்.

அகநானூற்றின் 222வது பாடல் தோழி தலைவன் சிறைப்புறத் தானாக நின்ற நிலையில் அறிந்தும் அறியாதவள் போல் தலைவியிடம் கூறும்போது இக்கதையை உவமையாகப் பயன்படுத்துகிறாள்.

கூற்று எழுந்த சூழல் தலைவன் களவொழுக்கம் ஒன்றனையே குறிக்கோளாகக் கொண்டு மணம் செய்தலையே விரும்பாத சூழலில் தலைவன் சிறைப்புறமாக நிற்க தோழி;

மிகுந்த அழகும், திரண்ட தோள்களையும் உடைய ஆட்டனத்தி என்பான், முழவொலி இடைவிடாது கேட்கும் ஆரவாரம் மிக்க "கழாஅர்" என்னும் ஊரில் உள்ள பெரிய துறையின் கண் நிகழ்ந்த விழாவில் நடனம் ஆடினான். தாழ்ந்து தொங்கும் கருநிறக் கூந்தலையுடைய காவிரிப் பெண்ணாள் அவன் அழகினை விரும்பி அவனைக் கவர்ந்து சென்றாள். அவன் மனைவியாகிய ஆதிமந்தி தன் கணவனைக் காணாது திசையெல்லாம் தேடி அலைந்து திரிந்து மதி மயங்கி வாட்டமுற்றாள்.

மருதி என்பவள் கடலில் சென்று ஆதிமந்திக்கு அவள் கணவனைச் சுட்டிக்காட்டிப் பின்னர் உயிர் துறந்தாள். அதனால் மருதி புலவரால் பாடப்பெறும் புகழினைப்பெற்றாள்.

தலைவன் நினைவால், தலைவன் வரைதல் வேண்டி, தலைவிக்கு மேனியில் சில மாற்றம் ஏற்பட்டது. அந்நிலையை தலைவனுக்கு உணர்த்த வேண்டி, ஆட்டனத்தியைக் காணாமல் தவித்த ஆதிமந்திக்கு கணவனைக் காட்டி கடலில் உயிர் துறந்தாள் மருதி, அவனைப்போல் தலைவிக்காக தலைவனைத் தேடிச் செல்வோம், உயிர் போனாலும் பரவாயில்லை நாமும் புலவரால் பாராட்டப்பெற்ற மருதி போல மாறலாம் எனக் கூறியுள்ளார். அவளைப் போன்று பெரும்புகழ் பெறுவதற்காகப் பலநாளும் வலிய இடியுடன் கூடிய பெருமழை இரவு முழுவதும் பெய்தாலும் நாமும் தலைவனைத் தேடிச்செல்வோம் எனக் கூறுவது சாலப் பொருத்தமாகும்.

புலவர் இப்பாடலில் தற்குறிப்பு ஏற்ற அணியைப் பயன்படுத்தி யுள்ளார்.

***"பெயர்பொருள் அல்பொருள் எனஇரு பொருளினும்***
***இயல்பின் விளைதிறன் அன்றி அயல் ஒன்று***
***தான் குறித்து ஏற்றுதல் தற்குறிப்பேற்றம்"   (தண்டி.54)***

கவிஞன் தான் நினைத்த கருத்தை பாடலில் ஏற்றி உரைப்பது தற்குறிப்பேற்றம் ஆகும். இப்பாடலிலும் பரணர் ஆட்டனத்தியைக் காவிரி கவர்ந்து சென்று கடலிற் சேர்த்தமை அவனது அழகினை விரும்பிய காவிரிப்பெண் பரந்து வந்து அவனைக் கவர்ந்து சென்றாள். வெள்ளப்பெருக்கு ஏற்படும் போதும், ஆற்றில் வரும் அனைத்தும் இழுத்து கடலில் சேர்ப்பது இயல்பான ஒன்று, இதில் காவிரியைப் பெண்ணாக உருவகம் செய்வதோடு அல்லாமல் அவள் ஆட்டனத்தி மீது கொண்ட காதலால் அவனை இழுத்துச் சென்றாள் என்பது தற்குறிப்பேற்றமாகும்.

அகநானூற்றின் **262**வது பாடலும் அன்னி மிஞிலி குறித்த கதையைத் தருகிறது. இரவுக்குறியின் கண் தலைவியின் நலன் நுகர்ந்து மீளும் தலைவன் புணர்ச்சி இன்பத்தால் பெரிதும் மகிழ்ந்து தன் நெஞ்சிற்கும் கூறும்போது இக்கதையை உவமையாக அதாவது கோசர்களால் அழிக்கப்பட்ட தந்தையின் மரணத்திற்கு பழிவாங்கும் உணர்வு கொண்டு அதை நிறைவேற்றி கோசர்களின் இறப்பில் மகிழ்வுற்ற அன்னி மிஞிலியின் மகிழ்ச்சிக்கு நிகரானது என்று பரணர் கூறியிருக்கும் விதம் போற்றற்குரியது.

அகநானூற்றின் மேற்கூறிய பாடல்கள் மூலம் அக்கால சமுதாயத்தில் வஞ்சினம் கூறுதல் என்பது புறத்தில் மட்டும் அல்ல அகத்திற்கும் பொருந்தும்.

★ அக்கால மன்னர்கள், வள்ளல்கள், குறுநில மன்னர்கள் அனைவரும் புலவர்களை மட்டும் அல்ல பொருநர், விறலியர், கூத்தர்களை புரக்கும் தன்மை வெளிப்படுகிறது.

★ சிறு பிழைக்காக (குற்றத்திற்காக) அக்குற்றத்தை ஒப்புக் கொண்ட நிலையிலும் கொடிய தண்டனை வழங்கும் விதம் வெளிப்படுகிறது.

★ வஞ்சினம் கூறுதல் புறத்துக்கு மட்டுமல்லாது அகத்திலும் இடம்பெறும் தன்மை.

கலித்தொகையின் முதல் பாடல் மதுரையாசிரியர் நல்லந்துவனரால் கடவுள் வாழ்த்தாகப் பாடப்பட்டது.

உலகிற்குப் பயன்படுமாறு படர்க்கையில் அமைத்தும் கடவுளை வாழ்த்திப்பாடும் மரபும் உண்டு. அங்ஙனமன்றி தனக்குப் பயன்படும்படி முன்னிலைப்படுத்திக் கடவுளை வாழ்த்திப்பாடும் கடவுள் வாழ்த்துப்பாடல் இதுவாகும். பிற்காலத்தே சிவபெருமானை முழு முதல் இறைவனாகப் போற்றுவோர் இறைவனுக்குரியனவாகக் கூறும் குணம் செயல்கள் சிலவற்றை நயம்பெறக் காட்டுவதாக புலவர் இப்பாடலைப் பாடியுள்ளார்.

கலித்தொகையின் இரண்டாவது பாடல் பாலைபாடிய பெருங்கடுங்கோ ஆவார். இல்வாழ்க்கையை நெறிமுறைப்படி நடத்துதற்கு வேண்டி பொருளை ஈட்டுவதற்குத் தலைவன் பிரியக் கருதிப் பொருள்வயிற் பிரிவேன் என்றான். அந்நிலையில் பாலைநிலக்கொடுமையை எடுத்துரைக்கும் நிலையில் இக்கதையை ஆசிரியர் உவமையாக எடுத்துரைப்பார்.

**“ஈயென இரத்தல் இழிந்தன்று அதன் எதிர்**
**ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று” (புறம்.204)**

வறியார்க்கொன்று ஈவதே ஈகை, இல்வாழ்க்கையின் அடிப்படை இரந்தோர்க்குக் கொடுத்தல், கொடாதிருத்தல் இழிவு என்னும் உயரிய கோட்பாட்டினை மக்களுக்கு உணர்த்துகிறது. இல்வாழ்க்கைக்கு பொருள் தேவைப்படினும் மலை கடந்து, காடு கடந்து சென்று ஈட்டும் பொருளினும் மனைவியைப் பிரியாது இருத்தலே சிறந்த பொருள் என்பதை புலவர் வலியுறுத்துகின்றார்.

அதுமட்டுமில்லாத அறிவுத்திறம் மிகுந்தவள் தோழி என்பது பலவாறு கூறி தலைவனை பொருள் தேடிச்செல்லும் செலவினைத் தடுத்தாள். தோழியின் கூற்றினைக் கேட்ட தலைவன் நிலையைக் கூற வந்த புலவர் மதம் கொண்ட யானை பாகனது பரிக்கோலுக்கு அடங்காது இசையைக் கேட்டு அடங்கிவிடும். அதுபோல தலைவன் தோழி பாலை நிலக் கடுமையை கூறும்போது தனது செலவினைத் தவிர்க்காமல் தலைவியின் அழகு நலன் கெடும்

என்னும் நிலையைக்கூற தவிர்த்தான் என்ற உள்ளுறைப் பொருளையும் இப்பாடலில் சுட்டிச் செல்கிறார்.

கலித்தொகையின் இருபத்தைந்தாவது பாடலும் தலைவன் பிரிவு குறித்துத் தோழியிடம் செய்தியை உணர்த்தினான். தலைவன் தலைவியை விடுவித்து பிரிந்து செல்லும் காடு தானே தீப்பற்றி எரியும் அழல் சூழ்ந்த வெஞ்சுரம் மூங்கிற்காடு தீப்பற்றி எரிந்தது துரியோதனன் பாண்டவர்களுக்கு எதிராக எழுப்பிய அரக்கு மாளிகை எரிந்ததற்கு ஒப்பாகும். இத்தகைய இதிகாசக் கதையை புலவர் தாம் அறிந்த நற்கருத்தை மக்களும் உணரும் வகையில் பொருத்தமான சூழலில் கூறியிருப்பது நன்கு விளங்குகிறது.

கலித்தொகையின் முப்பத்தெட்டாவது பாடல் தலைவியைச் சந்திக்க தலைவன் இரவுக்குறி வந்து நீங்கும் நிலையில் தோழி தலைவனை எதிர்ப்பட்டு தலைவியின் நிலையை எடுத்துரைத்து திருமணம்செய்ய வற்புறுத்தினாள். அதை ஏற்று தலைவனும் திருமணம் செய்ய சம்மதித்தான் என்ற செய்தியை தலைவியிடம் உணர்த்தும் சூழலில் உவமையாக இக்கதை புலவரால் எடுத்தாளப்பட்டது.

இலங்கை வேந்தனாகிய இராவணன் ஒரு சமயம் தேரினில் செல்லும்போது சிவனும் உமையும் அமர்ந்திருந்த இமயமலை குறுக்கிட்டதனால், தன் இருபது கைகளையும் அம்மலையின் கீழே கொடுத்து அம்மலையை அழுத்தினன். இராவணனின் கைகள் மலையின் கீழ் அகப்பட்டு எடுக்க முடியாமல் துன்பம் அடைந்தன. இச்செயல் வேங்கை மரத்தைக் குத்திய யானை, தன் கொம்பைப் பிடுங்க இயலாது வருந்திய நிலைக்கு உவமையாகக் காட்டப்பெற்றுள்ளது.

**“உறுபுலி உருஏய்ப்பப் பூத்த வேங்கையைக்**
**கறுவு கொண்டு அதன் முதல் குத்திய மதயானை**
**நீடு இருவிடர் அகம் சிலம்பக்கூய், தன்**
**கோடு புய்க்கல்லாது, உழக்கும் நாட”** ***(கலித்.38:6–9)***

என்ற அடிகளில் உள்ளுறை உவமத்தைப் பயன்படுத்தியுள்ளார்.

களவில் தலைவன் பெறுகின்ற இன்பத்தை நீக்குதல் கொடியது போல் தோன்றினும் கற்பில் இல்லறப் பேரின்பம் தருகின்ற வரைவு கடாதல் சிறப்பான கூற்று.

உறுபுலி ஏய்ப்ப – களவின் இன்பம் வேங்கை பூத்தது – திருமணத்திற்கு பின் பேரின்பத்திற்கு அடிப்படையாய வரைவு கடாதல்.

வேங்கையைப் பகையாகக் கருதி அதனோடு பொருத யானை என்றது வரைவு கடாதலைத் தான் நுகர்கின்ற இன்பத்திற்கு மாறாகக் கருதி, மாறுபட்டு வரும் தலைவனைச் சுட்டியது.

விடரகஞ்சிலம்பக் கூவுதல் – அக்களவொழுக்கத்திற்கு இடையீடு பட்டு வருந்திக்கூறும் தலைவனது கூற்றைக் குறித்தது.

கோட்டைப் பிடுங்க இயலாது யானை வருந்தியது என்றது. அக்கூற்றைப் பகை என்று கொண்ட மனத்தை அவள் கூற்றை நன்று என்று கருதமுடியாது வருந்துதலைக் குறித்தது. இவ்வாறு இப்பாடலில் புலவர் குறிஞ்சிக்குரிய வேங்கை, வேங்கைப்பூ, யானை, மலைப்பகுதி முதலிய குறிஞ்சித் திணைக்குரிய கருப்பொருள்களைப் பயன்படுத்தியிருப்பது சிறப்புக்குரியதாகும்.

மேலும் குறிஞ்சி நில மக்களின் திருமண மரபையும் குறிப்பிட்டுள்ளார். குறிஞ்சி நில மக்கள் வேங்கை மலரும் காலத்தை திருமணம் செய்யும் மரபாகக் கொண்டிருந்தனர் என்ற கருத்தையும் பதிவு செய்துள்ளார்.

கலித்தொகையின் ஐம்பத்திரெண்டாவது பாடலும் தலைவன் தலைவியைச் சந்திக்க இரவுக்குறியிடம் நோக்கி வந்த பொழுது தோழி அவனை எதிர்பட்டனள். இரவுக்குறி வருதலினால் ஏற்படும் குற்றமும், அக்குற்றத்தால் வரும் துன்பமும் தன் உள்ளத்து விருப்பமும் எடுத்துரைத்து திருமணம் செய்து கொள்ள வற்புறுத்தும் சூழலில் இக்கதையை புலவர் உள்ளுறை உவமாகப் பயன்படுத்தியுள்ளார். செவிமறைப்ப பாய்ந்த புலியைச் செற்ற தன்மை –

களவொழுக்கம் இடமாக அலர் கூறி அயலாரைச் சினத்தல் புலியைக்குத்தி மாறுபாடு தீர்ந்த யானை – தலைவன் வரைந்து கொண்டால் அயலாரைத் தாம் வென்றது.

கலித்தொகை நூற்றி ஒன்றாவது பாடல் தோழி தலைவியை ஆற்றுவித்த நிகழ்வாகும். ஆயர் கூட்டத்தார் சிறப்பாக வலிமை பொருந்திய எருதுகளைக் கட்டித் தழுவி, அதனை அடக்கி ஆளும் தன்மையைக் காட்டி, இத்தகைய ஒரு வீரத்தை தலைவனும் இனிவரும் நாளில் மேற்கொண்டு உம்மை கரம் பிடிப்பான் வருந்தாதே எனக்கூறி ஆற்றிவிக்கும் சூழலில் காளைகளை அடக்கும் மறவர்களின் வீரத்தை ஒப்பிட இதிகாச கதைகளை உவமையாக எடுத்தாண்டுள்ளார்.

‘‘பெருமையும் உரனும் ஆடூஉ மேன’’ எனத் தொல்காப்பியர் கூற்றை மெய்பிக்கும் வகையில் ஆடவர்களின் வீரத்தை ஏறுதழுவுதலின் மூலம் நிரூபித்துள்ளார்கள். இன்றளவும் இந்நிகழ்வுகள் (அலங்காநல்லூர் ஜல்லிக்கட்டு) நடைபெறுகின்றது.

கலித்தொகையின் நூற்றி மூன்றாவது பாடலும் ஏறு தழுவுதலின் வீரத்தன்மையையேச் சுட்டுகின்றது.

கலித்தொகையின் நூற்றி முப்பத்தி நான்காவது பாடல் நெய்தல் திணையைச் சார்ந்தது நல்லந்துவனரால் பாடப்பெற்ற இந்நெய்தல் கலிப்பாடலில் தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவி மாலைநேர ஆற்றாமையைக் கூறும் சூழலில் இக்கதையை உவமையாகத் தருகின்றார்.

அலர்ந்த தண்ணிய மாலையை அணிந்த திருமார்பை உடைய மாயோன் பகையாய மல்லர்களின் வலிமையை அழித்தான். பகைவர் ஒருசேர வந்து சினந்து போரிட்ட காலத்தே அவர் ஓடும்படியாக அவர்தம் கொல்யானையின் அழகிய மத்தகத்திலே ஆழ்த்திய சக்கரப் படைபோல, கதிரவன் தான் பரப்பிய ஒளிக்கற்றைகளைத் தன்னிடத்தே வாங்கிக் கொண்டு மேற்றிசை மலையை அடைந்து மறைந்தது, கரிய பெரிய கடல் ஒலித்து,

இராக்காலத்தைப் படைப்பது போன்றிருந்தது என்று புலவர் திருமால் பற்றிய புராணக் குறிப்பை மாலைக் காலத்திற்கு உவமையாக கூறியிருப்பது சிறப்பிற்குரியது.

**மன்னர்களைப் பற்றிய கதைகள்**

புறநானூற்றின் இரண்டாவது பாடல் பாடாண்திணையில் அமைந்தது,

***"ஒளியும் ஆற்றலும் ஓம்பா ஈகையும்***
***அளியும் என்று இவை ஆய்ந்து உரைத்தன்று"***
***(புற.பொ.வெ.189)***

புகழ், வலிமை, கொடைத்தன்மை, இரக்கம் ஆகியவற்றில் ஒருவன் சிறந்து நிற்பான் என்பது தான். பாடாண்திணைக்கு புலவர் கூறும் விளக்கமாகும். இத்திணையில் அமைந்த பாடலில் சேரலாதன் பாரதப் போரில் இரு திறத்துப் படைகளுக்கும் உணவு வழங்கி சிறப்பித்தமையை கூறியுள்ளதால் புலவரின் இதிகாச கால அறிவும், அதனைப் பாடலில் பயன்படுத்தியுள்ள தன்மையும் போற்றுதற்குரியது.

புறநானூற்றின் முப்பத்தேழாவது பாடல் வாகைத்திணை, அரச வாகை என்னும் துறையில் அமைந்தது.

அரச வாகை என்பது வேந்தனின் செங்கோல் சிறப்பை எடுத்துரைப்பது ஆகும்.

***"பகல் அன்ன வாய்மொழி***
***இகல் வேந்தன் இயல்பு உரைத்தன்று" (புற.பொ.வெ.157)***

***"காவல் அமைந்தான் கடல் உலகம் காவலால்***
***ஓவல் அறியாது உயிர்க்கு உவகை மேவரும் சீர்***
***ஐந்தொழில் நான்மறை மூத்தீ இருபிறப்பு***
***வெந்திறல் தண்ணளிஎம் வேந்து" (புற.பொ.வெ.எடு.பாடல்)***

அரசன் காக்கும் தொழிலில் மேம்பட்டு நிற்பதை விளக்குவது அரச வாகை ஆகும். "அரசனுக்குரிய ஐந்து தொழில் ஓதல், வேட்டல், ஈதல், படைக்கலம் பயிறல், பல்லுயிர் ஓம்பல்"[7] என்னும் கூற்றிற்கு இணங்க இப்பாடலில் சிபிச்சக்கரவர்த்தி தன்னை அடைக்கலமாகத் தேடி வந்த புறாவிற்கு தசையை கொடுத்து உயிர் ஓம்பினான் என்று புலவர் எடுத்துரைத்த பாங்கு சிறப்பிற்குரியது.

இதுமட்டுமல்லாது இப்பாடலுக்கு முதுமொழி வஞ்சி என்னும் துறையும் பொருந்தும் என்று கூறுகிறார். முதுமொழி வஞ்சி என்பது

**"தொல் மரபின வாட்குடியின்**
**முன்னோனது நிலை கிளந்தன்று"** ***(புற.பொ.48)***

மறவன் ஒருவன் தான் பிறந்த குடியின் முதல்வனைப் புகழ்ந்து பாடுதல் ஆகும். இப்பாடலில் சிபிச்சக்கரவர்த்தி புறாவிற்காக இரங்கி செய்வது இயற்கையாகவே அவன் இரத்தத்தில் உள்ளது. ஏனென்றால் பசுவின் துயர் போக்க தன் மகனை தேர்க்காலில் இட்டு நசுக்கிக் கொன்று மனுநீதிச் சோழன் குலத்தில் வந்ததால் முன்னோர் இயல்பும், புகழும் இவருக்கு வாய்ந்தது என்று புலவர் இருதுறைகளுக்கும் பொருந்தும் விதத்தில் இயற்றியிருப்பது போற்றற்குரியதாகும்.

புறம் ஐம்பத்து ஐந்தாவது பாடல் செவியறிவுறூஉ என்னும் துறையில் அமைந்தது.

**"மறந்திரிவு இல்லா மன்பெரும் சூழ்ச்சி**
**அறம்தெரி கோலற்கு அறிய உரைத்தன்று"** ***(புற.பொ.221)***

அறத்தினை ஆராய்ந்து ஆட்சி புரிபவன் செங்கோல் அரசன். அவனுக்கு மறமும் பிறழ்ச்சியும் இல்லாத நல்லுரைகளை உணரும்படியாகச் சான்றோர் கூறுவது இப்பாடலில் மருதன் இளநாகனார், சிவபெருமான் அழித்த முப்புரச் சிறப்பினைக்கூறி, சிவபெருமானின் மூன்று கண்கள் போல் மூவேந்தர்களும் விளங்குகின்றனர். அதிலும் நீ நெற்றிக்கண்ணாக விளங்குகிறார். நெற்றிக் கண்

திறப்பது தீமையை அழிக்கவே. ஆகவே நீயும் அதைப்போன்று வாழ்வாயாக என சிவன் அழித்த முப்புரச் செய்தியை பாண்டியன் அதைப்போல பகைமையை வெல்ல வேண்டும் என உவமையாக இக்கதையை எடுத்தாண்டுள்ளார்.

புறநானூற்றின் தொன்னூற்று ஒன்றாவது பாடலில் ஔவையார் அதியமானைப் பற்றிக் கூறிய கதை இடம் பெற்றுள்ளது, வாழ்த்தியல் துறையில் அமைந்தது.

**"கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்**
**உடையானாம் வேந்தர்க் கொளி"    (திருக்.390)**

என்னும் குறளுக்கு இணங்க தமிழ்ச் சமுதாயத்தில் மக்கள் மன்னரை உயிராகப் போற்றுவர், அதுபோல் மன்னனும் தம் மக்களை கண்ணின் மணிபோல் காப்பான். பாற்கடலைக் கடையும் போது தோன்றிய ஆலகால விசத்தை பிறரின் நன்மை கருதி சிவபெருமான் உண்டார். அதுபோல் தமிழன் நீண்ட ஆயுளைக் கருதி அதியமான் ஔவைக்கு அமிழ்தத்தை ஒத்த நெல்லிக்கனியை தான் உண்ணாது ஔவைக்கு ஈந்தான் என்பதால் அவனைப்புலவர் "நீலமணிமிடற்று ஒருவன் போல மன்னுகபெரும" என வாழ்த்திக் கூறுகிறார். இதன்மூலம் கடையேழு வள்ளல்களல் ஒருவனான அதியனின் புகழ் விளங்கியது.

புறநானூற்றின் 95வது பாடல் பாடாண்திணை வாள்மங்கலம் என்னும் துறையில் ஔவையார் பாடியுள்ளார்.

**"கயக்கு அரும் கடல்தானை**
**வயக்களிற்றான் வாள்புகழ்ந்தன்று"    (புற.வெ.மா.223)**

அதியமானின் படைக்கருவிகளைப் பாராட்டும் விதத்தில் இப்பாடல் அமைந்துள்ளதால் இது வாள்மங்கலம் ஆகும்.

சங்க காலத்தில் ஆண்கள் மட்டுமல்ல பெண்களும் தூது செல்ல ஏற்றவர்கள் என்பது தெளிவாகிறது. அகத்தில் பெண்கள் தூது செல்வர். ஆனால் புறத்தில் தூது செல்வது அதியமானுக்கு ஔவை சென்ற தூதே ஆகும்.

**"அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு**

**இன்றி யமையாத மூன்று"        (திருக்.682)**

என்ற வள்ளுவர் வாக்கிற்கு இணங்க ஔவையார் அதியமான் சார்பாக தூது சென்றார்.

**"கடனறிந்து காலம் கருதி இடனறிந்து**

**எண்ணி உரைப்பான் தலை"        (திருக்.687)**

தனது கடமையை அறிந்து, பொருத்தமான காலத்தைத் தெரிந்து, எதிரிகளின் தன்மையையும் உணர்ந்து எவன் செயல்படுகிறானே அவனே சிறந்த தூதனாவான், "மேற்கூறிய தகுதிகளோடு ஔவையார்" தொண்டைமான் பால் தூது சென்றார்.

மன்னன் தன் மீது போர் தொடுப்பவனின் மீது இரக்கம் கொண்டு அதியமானின் வீரம் உணராத தொண்டைமானால் பல உயிர்கள் அழிந்துபடுவது உறுதி. போர் ஏற்படுவதை தடுக்க தக்க ஒருவரை தூது அனுப்பிய சமயோசித புத்தி உள்ள மன்னனாக ஔவையார் அதியமானை புகழ்ந்துள்ளார்.

தொண்டைமானின் கருவிகளின் பளபளப்பைப் பாராட்டியும், அதியமானின் கருவிகளின் முனை மழுங்கலை இழிவுபடுத்தியும் கூறியுள்ள தன்மை வஞ்சப்புகழ்ச்சி அணியாகும்.

பல போர்களை கண்டவன் என் மன்னன். ஆனால் நீயோ போரையே சந்திக்காதவன் போல் இருக்கிறாய் என்று அதியனை இகழ்வது போல் புகழ்ந்தும், தொண்டைமானை புகழ்வது போல் இகழ்ந்தும் ஔவையார் வஞ்சிப் புகழ்ச்சி அணியை எடுத்துக் கூறுவது சிறப்பானதாகும்.

புறநானூற்றின் எழுபத்தி நான்காவது பாடல் சேரமான் கணைக்கால் இரும்பொறை என்ற மன்னன் பாடிய பாட்டு, இப்பாடல் முதுமொழிக்காஞ்சி என்னும் துறையில் அமைந்தது.

**"பலர்புகழ் புலவர் பன்னினர் தெரியும்**

**உலகியல் பொருள்முடிபு உணரக் கூறின்று"        (புற.பொ.வெ.)**

முன்னோர்களால் மொழியப்பட்ட அறம் முதலான பொருள்களைக் கூறுதல் முதுமொழிக்காஞ்சி என்னும் துறையாகும்.

**“மயிர்நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார்**
**உயிர்நீப்பர் மானம் வரின்”    (குறள்.969)**

நாட்டை ஆளும் மன்னனாக இருப்பினும், குடிமக்களே ஆயினும் மானம் மிக அவசியம் என்பதும் மானம் போனால் உயிர் வாழ்வதே வீண் என மக்கள் ஒவ்வொரு வரும் வாழ வேண்டும் என்னும் உயரிய அறக்கருத்து இக்கதை நமக்கு உணர்த்தும் பாடமாகும்.

தமிழர்கள் வீரத்தையும், மானத்தையும் தம் கண்களாகப் போற்றினர். சேரமான் கணைக்கால் இரும்பொறையின் கதையும் மானத்தின் சிறப்பை உணர்த்துகிறது.

“இரும்பொறை என்பது அவனது மரபின்வழி வந்த பெயர் கோட்டை வாயிற்கதவின் உட்புறமாக கதவின் குறுக்காகப் போடப் பயன்படும் மரத்தின் கட்டையாகக் கணைய மரக்கட்டையையே தமிழ் மன்னர்கள் பயன்படுத்தினர். பகைவனது யானையே வந்து மோதினாலும் கணைய மரம் உறுதியாக நின்று கோட்டைக் கதவைத் திறக்கவிடாமல் காக்கும் திறன் வாய்ந்தது. உறுதிக்குக் கணைய மரத்தை உவமை கூறுவது வழக்கம். கணைய மரத்தைப் போன்று உறுதியான கால்களைப் பெற்றிருந்தமையால் கணைக்கால் என இரும்பொறை போற்றப்பட்டான்”[8]

மானம் மிக்க இரும்பொறை தமிழர்கள் மானத்தை எத்துணைப் பெரிதாகப் போற்றினர் என்னும் தன்மையில் வீரம் செறிந்த பாடல் ஒன்று இயற்றி இவ்வுலகில் விதைத்துவிட்டுக் கடைசி வரையும் நீர் அருந்தாமலேயே தன்னை மண்ணில் புதைக்க உயிர்விட்டான்.

இப்பாடலின் மூலம் சங்க காலத்தில் அரச பரம்பரையினர் குழந்தை இறந்து பிறந்தாலோ, சதைப் பிண்டமாக இருந்தாலும் வாளால் கீறித்தான் தமிழர்கள் புதைத்தனர். அத்தகு வீரமரபில் வந்த கணைக்கால் இரும்பொறையும் உயிர் போகுமளவிற்குப் பசி, தாகம் உடற்றியும் மானக்குறைவு ஏற்பட்ட

பொழுது தன் இன்னலுக்கு இணங்காது மானத்தை உயிரைவிடப் பெரிதெனக் காத்தான் என்னும் செய்திகள் வெளிப்படுகின்றன. இன்றளவும் தமிழ்ச் சமுதாயத்தில் மக்கள் இதனைப் பின்பற்றுகின்றனர்.

புறநானூற்றின் நூற்றிநாற்பத்து ஒன்றாவது பாடல் பரணர் பேகனின் கொடைச் சிறப்பை பாணாற்றுப்படை என்னும் துறையில் அமைத்துப் பாடியுள்ளார்.

**“சேண் ஓங்கிய வரை அரிதல்**
**பாணனை ஆற்றுப்படுத்தன்று”     (புற.பெ.வெ.216)**

ஒரு பாணன் மற்றொரு பாணனை ஆற்றுப்படுத்துவது இத்துறையாகும்.

பொதுவாக ஆற்றுப்படை என்பது

**“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
**சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்”**

**(தொல்.புறத்திணை.36)**

எனத் தொல்காப்பியம் இலக்கணம் வகுத்துள்ளது.

**“ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை**
**மாற்றுவார் ஆற்றலின் பின்”     (திருக்.225)**

என்னும் குறளுக்கு ஏற்ப விளங்கும் பேகனின் கொடைத்திறம் நன்கு விளங்குகிறது. குளிரால் நடுங்கும் மயிலுக்கு போர்வை நல்கியவன் தம்மை நாடிவரும் இரவலர்களின் வறுமையையும் மறுமைப்பயன் எதிர்பாராமல் கொடுக்கிறான் என்று புகழ்கின்றார். இதன் மூலம் மன்னர்கள் இரவலர்களைப் போற்றி வாழ்ந்தார்கள் என்பதும், மன்னனைக் கண்டால் வறுமை பிணி நீங்கும் என்பதும் தெளிவாகிறது. புறநானூற்றின் 162வது பாடல் பெருஞ்சித்திரனார் வெளிமானைப் பாடியது பரிசில் விடை என்னும் துறையில் அமைந்தது.

**“வேந்தன்உள் மகிழ வெல்புகழ் அறைந்தோர்க்கு**

**ஈந்துபரிசில் இன்புற விடுத்தன்று”** ***(புற.பொ.வெ.214)***

*அரசன் வாயில்வரை நடந்து வந்து பரிசிலருக்கு விடை கொடுத்தல் இத்துறையாகும்.*

*இளைவெளிமானுக்குப் பாடம் புகட்டவே பெருஞ்சித்திரனார் குமணனிடம் சென்று பெரும் பொருளையும், யானையையும் பரிசாக அனுப்பினன். குமணன் கொடுத்த யானை இளவெளிமானின் காவல் மரத்தில் கட்டினார். அதுமட்டுமல்லாது உலகில் புரப்போர் நீ ஒருவன் மட்டும் இல்லை, புரப்போர் பலர் இருக்கின்றனர் என்பதை உணர்த்தினார்.*

*காவல் மரம் என்பது அரசனுக்குரிய சிறப்புக்களில் ஒன்று. பகைவர் அணுகாத வண்ணம் வளர்க்கப்படும் காவன் மரத்தில் யானையைக் கட்டியதன் மூலம் இளவெளிமானுக்கு இழிவு ஏற்பட்டது என்பதையும் இதன்மூலம் உணர்த்தினார். அதுமட்டுமல்லாது புலவர் வறுமையுடன் வாழ்ந்தாலும் பெருமிதத்துடன் வாழ்ந்தார். அப்பெருமிதத்திற்குக் காரணம் தொல்காப்பியம் கூறும் நான்கும் தான்.*

**“கல்விதறுகண், இசைமை, கொடை எனச்**

**சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே”** ***(தொல்.1203)***

*அவரிடம் கல்வி இருந்தது, சிறந்த புலமையும் இருந்தது, அஞ்சாமையும் உண்டு. அறிவால் புகழும், கொடையும் அவரிடம் இருந்தன. ஆனால் தன்னலம் இல்லை. பொதுநலம் மிகுதியாக இருந்தது.*

*சங்க காலத்தில் அரசனின் காவல் மரச்சிறப்பு, மன்னர்கள் புலவர்களின் திறமைக்கு தக்க மரியாதை கொடுக்கும் மாண்பு, புலவர்களும் தங்கள் தகுதி அறிந்து பரிசு வழங்காவிட்டாலும், தங்களை இழிவாக நடத்தினாலும் துணிந்து மன்னனை எதிர்த்து அவனுக்கு தவறை உணர்த்தும் எண்ணங்களையும், மாண்பும், வறுமையின் செம்மையும், உள்ளத்திண்மையும், தன்னலமற்ற வாழ்வியல் இதன்மூலம் தெளிவாக அறியமுடிகிறது.*

புறநானூற்றின் நூற்றி அறுபத்துநான்காவது பாடல் குமணனைப் பெருந்தலைச் சாத்தனார் பாடியது. இப்பாடல் பரிசில் கடாநிலை என்னும் துறையில் அமைந்துள்ளது.

**"மண்ணகம் காவல் மன்னன் முன்னர்**
**எண்ணிய பரிசில் இதுவென உரைத்தன்று"**

***(புற.பொ.வெ.193)***

இப்பாடலின் மூலமாக சங்ககால புலவர்களின் வறுமை நிலையை படம் பிடித்துக் காட்டுகிறார்.

அடுதலை மிகவும் மறந்ததால் தேய்வின்றி உயர்ந்த அடுப்பை, "கோடுயர் அடுப்பு" என்றார் பயன்படுத்தாத பொருளின் மேல் காளான் பூப்பது இயல்பாதலால் "ஆம்பி பூப்ப" என்றார். பசியால் உடல்மெலிந்து பால் இலதாயிற்று. ஆதலால் தோலோடு திரங்கி இல்லி தூர்ந்த பொல்லாவறுமுலை என்றார். பாலில்லாத வறுமுலையைச் சுவைக்கும் குழந்தையின் துயரைக் கண்டு மனைவி வருந்தும் நிலையை "மகத்துமுகம் நோக்கி நீரொடு நிறைந்த என் மனையோள்" என்றார். சேய் துயரத்தையும், தாய் துயரத்தையும் கண்ட யான் வேறொருவரையும் நினையாது நின்னையே நினைந்து வந்தேன் என்பதை "நினைஇ நிற்படர்ந்திசினே" என்றார். பரிசிலரின் வறுமை தீர்ப்பது நின் கடனாதல் என்பதை உணர்த்த வயிரியர் இன்மை தீர்க்கும் குடிப்பிறந்தோய் என்று உரைத்தார்.

ஒரு புலவர் தம் வறுமையை அழகிய ஓவியமாக தீட்டியுள்ளார். இத்தகைய வறுமைச் சூழல் தம்மை ஆட்கொண்டபோது குமணனை நாடி வந்தார். தம்பியாகிய இளங்குமணன் நாட்டைக் கவர்ந்து கொண்டு குமணனைக் கொல்ல நினைக்கிறான். அதனை அறிந்த குமணன் நாட்டைவிட்டு நீங்கிக் காட்டில் சென்று வாழ்கிறான். குமணனிடம் பரிசல் பெற முதிரத்திற்கு வந்த பெருந்தலைச் சாத்தனார் நாட்டில் நிகழ்ந்த செய்தியறிந்து மனவருத்தம் அடைகிறார். உடன் பிறந்தார் இருவர்க்கும் இடையே நிலவிய பகைமையைப் போக்கி ஒற்றுமை ஏற்படுத்த நினைக்கின்றார். இக்கதை மூலம் புலவர்கள் தாம்

வறுமைத் துன்பம் நீங்கினால் போதும் என்று எண்ணாது, பிரிவு பட்டு கிடந்த மன்னனையும், அவன் தம்பியையும் இணைக்க நினைக்கும் மாண்பு போற்றற்குரியது. புலவர்களும் தன் நலம் போற்றாது பிறர் நலம் போற்றுபவர்களாக இருந்துள்ள விதம் தெளிவாகிறது.

இதுமட்டுமல்லாது புறநானூற்றின் பதிமூன்றாவது பாடல் வாழ்த்தியல் துறையில் அமைந்தது. ஏணிச்சேரி முடமோசியார் சேரல் இரும்பொறையுடன் இருந்து சோழன் கோப்பெருநற்கிள்ளயை வாழ்த்திப்பாடியது.

சேரனுக்கும், சோழனுக்கும் பகை இருந்த போது புலவரோடு சேரன் வேண்மாடத்து உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது கோப்பெருநற்கிள்ளி யானை மீது வருவது தெரிந்து சேரன் கோபமுற்றான். கோபம் அவன் அறிவுக் கண்ணை மறைத்தது. அவன் உறவாடிக் கெடுக்க வருகிறானா எனப் பலவாறு எண்ணமிட்டான். புலவரிடம் யானை மீது வரும் அவன் யார் என வினவினான். புலவர் ஒரு மன்னன் முன் பகை மன்னனை புகழ்ந்து கூறினார்.

இவன் தான் புலியின் தோலால் செய்த கவசத்தில் விளங்கும் புள்ளிகள் சிதையுமாறு ஏவிய அம்புகள் பிளந்ததும் பரந்த அழகுடையதுமான மார்பினையுடையவனாய், எமனைப் போல விளங்கி ஆண் யானையின் மீது அமர்ந்தவன். இவன் அமர்ந்த யானை கடல் நடுவே செல்லும் மரக்கலம் போலவும், விண்மீன்களிடையே செல்லும் நிலவினைப் போல விளங்கும். அது சுறாக்கூட்டம் போன்ற வாளுடைய வீரர் சூழத் தான் வரும்போது தன்னுடைய பாகரும் அறியாதபடி மதங்கொண்டது. ஆகவே அவன் போர் செய்யும் நோக்கத்தோடு வரவில்லை. இவ்வாறு வந்துவிட்ட அவன் எத்தகைய துன்பமும் இல்லாமல் தன்னுடைய நாட்டை அடைய வேண்டும் என்று கூறினார். புலவரின் உரையால் அரசன் சினம் தணிந்தான்.

போருக்குப் புறப்பட எண்ணிய மன்னன் அந்த எண்ணத்தை ஒழித்தான். மன்னனாக இருந்தாலும், ஆத்திரத்தில் அறிவு இழந்து பகை

மன்னனை அழிக்காமல் பாதுகாத்த புலவரின் மாண்பு இக்கதையின் மூலம் உணரப்பட்டது.

புறநானூற்றின் இருநூற்றிப்பதிமூன்றாவது பாடலும் வஞ்சித்திணை துணை வஞ்சி என்னும் துறையில் அமைந்தது. பிறரை வெல்லவாவது, கொல்லவாவது துணிந்து நிற்கின்றான். ஒருவனைச் சில கூறிச் சந்து செய்வித்தல் துணை வஞ்சி என்னும்துறையாகும்.

கோப்பெருஞ்சோழனின் மக்கள் சிற்றினச் சேர்க்கையால் அறிவு திரிந்து தகப்பனிடத்திலே பகைமை கொண்டு போருக்கெழுந்தனர். தந்தையை வென்று அரசாட்சியைக் கைப்பற்றுவதே நோக்கம். பலரும் கூறிய அறிவுரைகள் எடுபடவில்லை. இந்நிலை கோப்பெருஞ்சோழனும் மறமும், மானமும் பொங்கியெழ மக்களைப் போர் செய்து தோற்கடிக்க முடிவு செய்தான். இவ்வாறு இருவரும் (தந்தையும், மக்களும்) போரிடுவது அனைவரது நகைப்பிற்கிடனாயிற்று. எனவே சான்றோர்கள் பலரும் கலங்கினார்கள். அப்போது சோழனின் அவைக்களப்புலவராக விளங்கிய எயிற்றியனார். நீ போர் மேற்செல்வது உன் பகையரர்களாகிய சேர, பாண்டியர் அல்லர், உன் மக்கள், நீ தேவருலகத்தை அடையின் உன்னுடைய அரசாட்சி உரிமை அவர்களுக்கே உரியதாகும். நிலைபெற்ற வலியோடு நின்னுடன் போருக்கெழுந்த சூழ்ச்சியில்லாத அறிவையுடைய நின் மக்கள் தோற்பின் நினது பெரிய செல்வத்தை வேறு எவருக்குக் கொடுப்பாய்? நீ அவர்களிடம் தோற்றால் நின்பகைவர் மகிழுமாறு பழியை உலகத்திலேயே நிலை நிறுத்துவாய். போர்ச் செயலை ஒழித்து, நீ மறுமைக்கான முயற்சியினை விரைந்தெழுந்து உடனே தொடங்கு என்று அறிவுரை கூறினார்.

கோப்பெருஞ்சோழனும் புலவரின் அறிவுரையை மதித்து, சினத்தின் மிகுதியினால் அறிவுக்கண் மறைபட்டு இழி தொழிலைச் செய்ய எண்ணினோம் என உள்ளம் நாணினான். உடனே புறப்பட்டுச் சென்று வடக்கிருத்தல் என்னும் தவத்தினை மேற்கொண்டிருந்து உயிரைவிட்டான்.

இக்கதையிலும் தகப்பனுக்கும், தமையன்களுக்கும் போர் நிகழுமாயின் குடிக்கு நீங்கா பழிச்சொல் உண்டாகும் எனக்கருதி தக்க நேரத்தில் மன்னனின் அறிவுக் கண்ணைத் திறந்து குடிப்பழி நேராமல் காத்த புலவரின் மாண்பு போற்றற்குரியதாகும்.

புறநானூற்றின் 212, 220, 222வது பாடல் பொதுவியல் திணையில் கையறு நிலைத் துறையில் அமைந்துள்ளது.

**''செய்கழல் மன்னன் மாய்ந்தெனச் சேர்ந்தோர்**

**கையற உரைத்துக் கைசோர்ந் தன்று''  (புற.பொ.வெ.267)**

அரசன் இறந்துபட்ட சூழலில் வருந்திப்பாடுவது.

கோப்பெருஞ்சோழனும், பொத்தியாரும் ஆருயிர் நண்பர்கள். பொத்தியார் நாளும் மன்னன் அவைக்குச் சென்று அறவழியில் நடப்பதற்குரிய அனைத்துச் செயல்களையும் கூறி அரசனை வழி நடத்துவார். சோழன் பல காரணங்களை முன்னிட்டு வடக்கிருந்து உயிர் துறத்தற்கு முடிவு செய்து அவ்வாறே வடக்கிருந்தான். பெரும் பிரிவை பொறுத்துக் கொள்ளாது பொத்தியாரும் வடக்கிருந்து உயிர்விடத் துணிந்தார். அப்போது புலவரின் மனைவி கருவுற்று இருந்தாள். மன்னன் புலவனிடம் உன் மனைவி மகவைப் பெறும்வரை அவர் உடன் இருக்க வேண்டுகோள் விடுத்தார். அதன்படியே பொத்தியார் சென்று மனைவி மைந்தனைப் பெறும்வரை இருந்து மீண்டும் வந்தார். அதற்குள் மன்னன் இறந்துபட அவன் நினைவாக நடுகல் இடப்பட்டது. அதனைக் கண்டு மன்னன் மக்களுக்குச் செய்த நன்மைகளை யெல்லாம் கூறி, நடுகல் பார்த்து உன்னோடு ஒன்றுபடுவதற்கு வந்துள்ளேன். எனக்கு இடம் தருவாயாக என்றார். புலவர் வருந்திக் கொண்டிருக்கும் போது அந்த நடுகல் படீர் என்று வெடித்தது. அசைத்து சிறிது இடம் கொடுத்தது. உடனே பொத்தியார் உள்ளம் மகிழ்ந்து அவ்விடைவெளியிலே இறங்கி மறைந்தார்.

அரசன் உலகத்தில் மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருந்த போது உடன் மகிழ்ந்திருந்த புலவர் அரசன் மறைந்த பிறகு தாம் உலகில் வாழ விரும்பாமல்

மறைந்துவிட்டார். உயிர் துறந்து நிலைபெற்ற கல்லான பொழுதும் உடனும் உயிரும் போல் இவவுலகில் நட்பு கொண்டிருந்தவர்கள் உறுதியாக இடம் கொடுப்பார்கள். இதனால் நட்புக்குப் 'புணர்ச்சி வேண்டா, உணர்ச்சி போதும்' எனற உளவியல் உண்மை இங்கு வெளிப்படுகின்றது.

புறநானூற்றின் நூற்றி ஐம்பத்தி இரண்டாவது பாடல் பாடாண் திணையில் பரிசில் விடை எனனும் துறையல் அமைந்துள்ளது. இதனை இயற்றியவர் பரணர். கடையேழு வள்ளல்களில் ஒருவனாகிய ஓரியைப்பாடியது.

**"வேந்தன்உள் மகிழ வெல்புகழ் அறைந்தோர்க்கு**
**ஈந்துபரிசில் இன்புற விடுத்தன்று"** (புற.பொரு.வெண்.127)

பரிசிலருக்குப் பொருள் வழங்கிச் சென்று வருக என விடை கொடுப்பது பரிசில் விடை ஆகும்.

வன்பரணர் தம் சுற்றத்தோடு ஓரியிடம் பரிசில் பெறவந்த நிலையில் பாடப்பெற்றது. இப்பாடலில் ஓரியின் வில்லாற்றலின் சிறப்பை சிறப்பாக உணர்த்தியுள்ளார்.

வேட்டையாடுதல் அரசனின் முக்கியமான தொழில்களில் ஒன்று. அரசர் சட்டத்திற்கடங்காத சக்திகளை அடக்கியும் கொடிய விலங்குகளைக் கொன்று தொலைத்தும், குடி மக்களைக் காப்பாற்றினார்கள். இத்தகைய சிறப்புக்களைக் கொண்ட சிற்றரசனாக ஓரியும் விளங்கினான். "ஓரி என்னும் சிற்றரசன் பெரிய வில் ஒன்று வைத்திருந்தான். ஆதலால் அவனை வல்வில் ஓரி என்றனர். ஓரம்பு எய்து அவன் ஒரு யானை, ஒரு புலி, ஒரு மான், ஒரு கரடி என்பனவற்றை வீழ்த்துவான்"[9] என்று டாக்டர் ந.சுப்பிரமணியன் தமது சங்ககால வாழ்வியல் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

தாம் வேட்டையாடிய மானை பரணருக்கும் அவருடன் வந்திருந்த அனைவருக்கும் பசு நெய்யுடன் கொடுத்து மகிழ்ந்தார். பரணரும் மேற்கூறியவாறு ஓரம்பால் விலங்குகளை வீழ்த்தும் ஆற்றலை புகழ்ந்து பரிசில் பெற்றுச் சென்றார்.

இதுமட்டுமல்லாது புறநானூற்றின் 150வது பாடலும் வண்பரணர் பாடியது. இப்பாடல் பாடாண்திணை, இயன்மொழி வாழ்த்து என்னும் துறையில் பாடினார்.

**"மயல்அறு சீர்த்தி மான்தேர் மன்னவன்**
**இயல்பே மொழியினும் அத்துறை ஆகும்" (புற.பொ.வெ.195)**

அரசனது இயல்பை எடுத்துரைப்பது.

வன்பரணர் தமது வறுமை நிலை காரணமாக ஊரைவிட்டு வெளியேறி காட்டுவழியே தமது மனைவி, மக்களுடன் சென்று பசியால் சோர்வுற்று வாடி மயங்கிய நிலையில் மரத்தடியில் இருந்தபோது வேடுவன் தோற்றத்தில் நள்ளி வந்து புலவரிடம் உரையாடினான். அவரின் பேச்சால் அவர் அறிஞர் என்று தன் நல்லுணர்வால் அறிந்து கொண்டான். வேட்டைக் கோலத்தைக் கண்டு புலவர் நடுங்கினார். புலவரின் பசியைப் போக்க வேண்டும் என்று முடிவு பண்ணி தான் வேட்டையாடிய மானைச்சுட்டு உண்ணக் கொடுத்தான். புலவரும், மனைவி, மக்களும், பசியாறினார்கள். பிறகு புலவர்க்குப் பொருள் கொடுப்பதற்கு நள்ளி விரும்பினான். வேட்டைக்கு வந்தபோது பொருள் எது? சிறிது எண்ணினான். கழுத்தில் அணிந்திருந்த முத்துமாலையும், கையில் அணிந்திருந்த பொற்காப்புகளையும் கழற்றிப் புலவர்க்குக் கொடுத்தான். அதை ஏற்றுக்கொள்ள மறுத்தான். பின்னர் நள்ளி வற்புறுத்திக் கொடுத்து புலவர் அவரை யார் என்று வினவியபோதும் நள்ளி தன்னைப் பற்றிக் கூறவில்லை. பின்னர் புலவர் வழியில் எதிர்பட்டவர்களிடம் விசாரித்து நள்ளியின் ஊருக்குச் சென்று தன் வரவை அவருக்கு உணர்த்தினார். புலவரை வரவேற்று நீண்ட நாள் தம்முடன் அவர்களை இருக்க வைத்து பெருவிருந்து வைத்தான்.

இவ்வாறு மன்னர்கள் எத்தகைய சூழல் இருந்தாலும் தம்மை நம்பி அடைக்கலமாக வரும் புலவர்களைப் போற்றிப் பாதுகாப்பார்கள் என்பது இப்பாடலில் வன்பரணர் தெளிவுபடுத்தியுள்ளார். புறநானூற்றில் வரும் கதைகளின் மூலம் அக்கால சமுதாயத்தில் மன்னர்களை மக்கள்

போற்றிய விதமும், மக்களை மன்னன் காத்த செங்கோல் சிறப்பு, புலவர்ளின் அறிவுரைக் கேட்டு அதன்படி அறவழியில் நடக்கும் மன்னர்களின் மாண்பு, மன்னர்களுக்கும் புலவர்களுக்கும் இருந்த நட்பின் மாண்பு, புலவர்களின் தன்மானச் சிறப்பு வறுமையிலும் செம்மையாக வாழ்ந்த புலவர் பெருமக்களின் சிறப்பு, மன்னனின் ஈகை சிறப்பு, வீரம், மன்னர்களின் உயிரைக் காட்டிலும் மானமே சிறந்தது என இன்றுவரை மக்கள் வாழ்வில் கடைப்பிடிக்கும் அரிய பல கருத்துக்களை புலவர்கள் தம் புலமைத் திறத்தால் சிறப்புடன் எடுத்தியம்பியுள்ளார்கள்.

**கடவுளைப் பற்றிய கதைகள்**

“கடவுள் என்பதற்கு உள் என்றும் தொழிற்பெயர் விகுதி ஒன்றே எனினும் ‘கவு’ என்னும் ‘கட’ என்றும் விகுதி இருவகைப்படும். எனவே கடவு என்னும் பகுதியில் இயக்குதல் என்றும் ‘க’ என்னும் பகுதியில் காத்தல் என்றும் பொருள் கொள்ளலாம். கடவுள் என்னும் சொல்லுக்கு உலகத்தைக் கட்டுப்படுத்தி ஆட்சி செய்யும் இயற்கைக்கு அப்பாற்பட்ட கற்பனைக்குரிய ஆற்றலே கடவுள் என்று பெயர்.”[10] அத்தகைய கடவுள் பற்றி செய்திகளை புலவர்கள்தம் பாடல்களில் செய்துள்ளனர்.

பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்து குமட்டூர்க் கண்ணனார் சேரலாதனைப் பாடியுள்ளார். புலவர் முருகனின் ஆற்றலோடு ஒத்தது மன்னனின் ஆற்றல் என்று முருகன் சூரனை அழித்த நிகழ்வை உவமையாக குறிப்பிட்டுள்ளார்.

மாயை பல செய்யும் சூரனைக் கண்ணுற்ற கந்தனின் வேலாயுதமானது மாமர வடிவில் இருந்தவனை இரு கூறுகளாக்கி அழித்தது. இத்தகைய சிறப்பு மிக்க வேலை ஒத்தது சேரலாதனின் வேல், எதிரே நின்று போர் செய்யும் பகைவரின் உடம்புகளைச் சென்று தைக்கும் பிறரால் துளைத்தற்கரிய மார்பினைத் துளைக்கும் வலிமை பெற்றது என்று குறிப்பிடுகிறார். அசுரர்களிடம் இருந்து தேவர்களைக் காத்தது முருகனின் வேல்.

பகைவரிடமும் இருந்து மக்களைக் காப்பது சேரலாதனின் வேல் எனக் குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளது. மக்களைக் காக்கும் சிறப்பில் இறைவனுக்கு நிகரானவன் மன்னன் என்னும் கூற்றை மெய்பிக்கும் வகையில் புலவர் சிறப்பாக அரசனின் வீரத்தை எடுத்தியம்பியுள்ளார்.

இதுமட்டுமல்லாது கொடைத்தன்மையிலும் மன்னன் சிறந்தவன் என்பதை மக்களுக்கு எடுத்துரைக்கும் வண்ணம் கர்ணனின் கொடைக்கு நிகரானது என்று கொடைச் சிறப்பையும் எடுத்தியம்பியுள்ளார்.

**"கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்**
**உடையானாம் வேந்தர்க் கொளி"** ***(குறள்.390)***

என்னும் குறளின் கருத்துக்கேற்ப குமட்டூர்க் கண்ணனார் சேரலாதனின் வீரத்தையும், கொடைச் சிறப்பையும் கூறியுள்ள தன்மை போற்றுதற்குரியதாகும்.

பரிபாடலில் இரண்டாவது கீரந்தையார் திருமாலின் வராக அவதாரச் சிறப்பைக் கூறுகிறார். திருமாலின் பத்து அவதாரங்களுள் ஒன்று, வராக கற்பம் என்னும் இந்த ஓர் ஊழி. திருமாலின் திருவிளையாடலில் ஒரு திருவிளையாடலை மட்டுமே உணர்த்தி நின்றது. இத்திருவிளையாடலிலே கணக்கற்ற ஊழிகள் கழிந்துள்ளன. ஆதலின் இத்தகை திருவிளையாடல் களுக்குரிய திருமாலின் தொன்மைக்குரிய ஊழிகள் யாவராலும் அறியப்படாதன என்பதால் இப்பாடலில் அவனது சிறப்புகளைக் கூறி முதல்வனாகிய அவனைப் போற்றி வணங்குவோம் என்று குறிப்பிடுகிறார்.

இதே பாடலில் திருமால் தேவர்களுக்கு உணவாகும் அமிழ்தத்தைப் பாற்கடலில் இருந்து எடுத்துக் கொடுத்த அருள் வல்லமையையும் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

பரிபாடலின் மூன்றாவது பாடலில் கடுவன் இளவெயினார் திருமாலுக்கு கருடன் எவ்வாறு வாகனமாகியது என்ற புராணச் செய்தியைப் பதிவு செய்துள்ளார். அதுமட்டுமல்லாது திருமால் கேசி என்னும் அரக்கனை அழித்து அறத்தை நிலைநாட்டினார் என்னும் கருத்தை எடுத்தியம்பியுள்ளது.

பரிபாடலின் நான்காவது பாடலும் கடுவன் இளவெயினார் இயற்றியது. இப்பாடலுள் திருமாலின் நரசிம்ம அவதாரச் செய்தியை எடுத்துக்கூறி இதன்மூலம் நெஞ்சம் நெக்குருகி இறைவனை நினைக்க அவன் அருள் நிச்சயம் நமக்குண்டு என்பதைக் கூறியுள்ளார்.

பரிபாடலின் ஐந்தாவது பாடலில் கடுவென் இளவெயினார் முருகனின் பிறப்பு, முருகன் தேவர் சேனைகளுக்கு தலைவனான தன்மையை சிறப்பாக எடுத்தியம்பியுள்ளார்.

பரிபாடல் ஒன்பதாவது பாடலில் குன்றம் பூதனார் தேவர்களின் சேனாதிபதியான முருகன் தெய்வானையை மணந்த சிறப்பினை எடுத்துரைத் துள்ளார்.

இதே பாடலில் குன்றம் பூதனார் முருகன் மலைக்குறப் பெண்ணாகிய வள்ளியை மணந்த செய்தி குறிப்பிட்டுள்ளார். முருகன் வள்ளியை மணந்தது தமிழர் போற்றும் களவு மணத்தின் வழி என்பதையும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

பரிபாடல் பத்தொன்பதாவது பாடலிலும் நப்பண்ணனார் முருகன் வள்ளியை மணந்த சிறப்பையும், கௌதமன் மனைவி அகலிகை மீது மோகம் கொண்டு பூனை வடிவில் வந்த இந்திரன் அவளை வஞ்சகமாகப் புணர்ந்ததும், கௌதமன் அவனுக்குச் சாபமிட்டதும், அகலிகையைக் கல்லுருவாக்கியதுமான புராணச் செய்தியை பதிவு செய்துள்ளார். மேலும் கலித்தொகையில் 150வது பாடலும், குறுந்தொகையில் 105 பாடலும் சிவன் குறித்த புராணக்கதைகளை எடுத்துரைக்கிறது.

மேற்கூறிய பரிபாடல் கதைகளின் மூலம் இறைவனின் அவதாரச் சிறப்பு, அவதாரங்களின் நோக்கம், தீமையை எழித்து நன்மையை நிலைநாட்டி மனிதகுலத்திற்கு முன் மாதிரியாக நிகழும் சிறப்பு, இறைவனின் அருள் தன்மை அவர்களின் திருமணச் சிறப்பு, கடவுளின் திருமணங்களில் தமிழர்களின் பண்பாட்டுக்கேற்றவாறு நிகழ்ந்தது என புலவர்கள் தமது பாடல்களில் பதிவு செய்துள்ள விதம் பாராட்டிற்குரியதாகும்.

சங்க இலக்கியத்துள் ஒன்றான பத்துப்பாட்டில் முதலாவதாக வைத்துப் போற்றப்படுவது திருமுருகாற்றுப்படை, முருகனை வேண்டினால் கிடைக்கும் அருளை நக்கீரர் **317** அடிகளில் பாடியுள்ளார். இப்பாட்டிலும் முருகன் தெய்வயானையை மணந்த நிகழ்வு, இந்திரன் பெற்ற சாபம், பிரம்மனுக்கு பிரணவ மந்திரத்தை உபதேசித்த தன்மை போன்ற பல முருகனின் அருளையும், புகழையும் தம் பாடலில் எடுத்தியம்பியுள்ளார்.

பத்துப்பாட்டனுள் இடம்பெற்றுள்ள பெரும்பாணாற்றுப்படை கடியலூர் உருத்திரங்கண்ணனார் தொண்டைமான் இளந்திரையனைப் பாடியுள்ள பாட்டில் உவமையாக மதிலின் உயர்வைக் கூறுவதற்கு திருமால் நெடியோனாக உயர்ந்து விளங்கிய வாமன அவதாரச் செய்தியை சிறப்பாக விளக்குகிறார். இது மட்டுமல்லாத திருமாலின் கொப்பூழ் (நாபிக்கமலம்)லில் பிறந்தவர் பிரம்மன் என்னும் புராணக்கதையையும் புலவர் தம் பாடலில் பதிவு செய்துள்ளார்.

பத்துப்பாட்டனுள் மிகப்பெரிய பாட்டாகிய மதுரைக் காஞ்சியைப் பாடியவர் மாங்குடி மருதனார், பாட்டுடைத் தலைவர் தலையாலங்கானத்து செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் ஆவார். இப்பாடலில் அகத்தியர் பற்றிய புராணச் செய்தியை பதிவு செய்துள்ளார். அகத்தியருக்கு பின் வந்தவர்கள் இந்த பாண்டியர்கள் என்னும் கருத்தினைக் கூறும்போது அகத்தியரின் பெருமையைக் கூறுகிறார்.

பத்துப்பாட்டில் இடம் பெற்றுள்ள கதைகள் தெய்வம் தொடர்பான புராணக் கதைகளே ஆகும். அனைத்தையும் தக்க இடத்தில் பொருத்தமான சூழலில் புலவர்கள் பயன்படுத்தியுள்ளார்கள்.

**தொகுப்புரை**

★ வாழ்க்கையில் மனிதன் கண்ட ஆழ்ந்த அனுபவத்தையும் பேருண்மைகளையும் வெளியிடுவது இலக்கியம்.

★ தாம் வாழ்வில் பெற்ற இன்ப துன்பங்களை அனுபவத்தை மொழியின் மூலம் படிப்போர் எளிதில் உணரும் வண்ணம் வெளிப்படுத்துபவரே படைப்பாளர்கள்.

★ இலக்கியம் படைப்பதற்கு படைப்பாளர்கள் உத்திகள் (உவமை, உள்ளுறை, இறைக்கி) சொல்லாட்சி கற்பனை உணர்த்தல் போன்ற திறன்களைப் பயன்படுத்துகின்றனர்.

★ செய்தியை கலையாக்கி நெஞ்சத்தை கற்பனையில் பணிப்பதில் முதலிடம் பெறுவது உவமை.

★ உள்ளுறை என்பது ஒரு கருத்தைக் கூறி அதனடிப்படையில் பிறிதொரு பொருள் உள்ளே மறைந்திருக்கும்படி கூறுவதாகும்.

★ இறைச்சி என்பது கருப்பொருளின் சிறப்புக்களைக் கூறுவதன் மூலம் பிறிதொரு கருத்தை உணர்த்துவதாகும்.

★ படைப்பாளர் படிப்போர் மனக்கண்முன் தன் அனுபவத்தைப் படைத்துக்காட்டும் திறமே கற்பனை ஆகும்.

★ புலவர்கள் பாட்டில் சொற்களைப் பயன்படுத்தும் விதமே சொல்லாட்சி.

★ இலக்கியத்திற்கு வேறு எத்தன்மை இருப்பினும் போதாது, உணர்த்தும் ஆற்றல் இருத்தல் இன்றியமையாதது.

★ சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் காணலாகும் கதைகளை புலவர்கள் பெரும்பாலும் உவமையாலே எடுத்துரைத்துள்ளனர்.

★ அக்கதைகளின் வழியே அக்கால சமூகத்தில் இருந்த உயரிய விழுமியங்களான காதலும், வீரமும், கொடையும் மன்னன் குடிமக்களை தெய்வமாக போற்றுதலும், மன்னர்கள் தம்மை நாடிவரும் இரவலர்களைப் போற்றதல், புலவர்கள் மன்னர்களைப் பொருளுக்காக மட்டும் நாடாமல் அவர்களுக்கு இன்னல் வரும் நேரங்களில் தகுந்த அறிவுரைகளைக்கூறி வழிகாட்டுதலும், மன்னர்களும், மக்களும் மானம் பெரிதென வாழ்ந்த நிலை, புலவர்கள் வறுமையிலும் செம்மையாக வாழ்ந்த திறன் போன்றவை நன்கு உணரமுடிகிறது.

★ புலவர்கள் தாம் இயற்றிய பாடல்களில் புராண, இதிகாசக் கதைக் குறிப்புகளை உவமையாக எடுத்துரைத்துள்ள பாங்கின் மூலம் அவர்களின் பல்துறை அறிவு புலப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்


1. *அரங்க.சுப்பையா, ''இலக்கியத் திறனாய்வு இசங்கள், கொள்கைகள்'', ப.12*

2. *சு.பாலசந்திரன, ''இலக்கியத் திறனாய்வு'' ப.15*

3. *அ.ச.ஞானசம்பந்தன், ''இலக்கியக்கலை'' ப.25*

4. *அ.ச.ஞானசம்பந்தன், ''இலக்கியக்கலை'' ப.91*

5. *மு.வரதராசன், ''இலக்கியத்திறன்'' ப.209*

6. *இரா.செயபால், ''அகநானூறு மூலமும் உரையும்'' ப.229*

7. *ச.திருஞானசம்பந்தம், ''புறப்பொருள் வெண்பா மாலை'' ப.179*

8. *பாக்யமேரி, ''தமிழ்ச் செம்மொழிப் பண்புகள்'' ப.186*

9. *ந.சுப்ரமணியன், ''சங்ககால வாழ்வியல்'' ப.69.*

10. *இந்திரசித்து ''சங்ககாலச் சமயமும் சமுதாயமும்'' ப.43.*

# முடிவுரை

மக்கள் அறிந்த கருத்துக்களையும் உணர்ந்த உணர்ச்சிகளையும் அளந்து உரைப்பதற்குப் பயன்படும் கருவியே மொழியாகும். மனிதனின் சிந்தனைக்கும், உணர்வுக்கும், கற்பனைக்கும் விருந்தாக அமைவது இலக்கியம் என்பர். இலக்கியங்களில் மிகவும் சிறப்புடையது சங்க இலக்கியமாகும். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய பழமையுடையது சங்க இலக்கியம். அக்காலத்தில் தமிழ் மகளிர் காதலையும் வீரத்தையும் தம்மிரு கண்களெனப் போற்றினர்.

அவ்விலக்கியங்கள் சுட்டும் காதலையும் வீரத்தையும் எடுத்துரைக்க புலவர்கள் பல்வேறு உத்திகளைப் பயன்படுத்தினர். அவற்றில் ஒன்று தான் கதை கூறுதல். வாய்மொழியாகவோ அல்லது எழுத்து மூலமாகவோ சொல்லப்படும் உண்மை அல்லது கற்பனை நிகழ்ச்சிகளின் தொகுப்பு கதையாகும்.

கதை ஏதேனும் ஒரு செய்தியை நிகழ்ச்சியை அல்லது கற்பனையான ஒன்றை மையமாக வைத்துச் சுவையுடன் சொல்லப்படுவது, இத்தகைய கதைகள் நடந்ததைப் பற்றிய விபரம் அடங்கிய தொகுப்பு என்றும் கூறுவர்.

சங்கத் தமிழ் நூல்களில் புலவர் பெருமக்களால் பதிவு செய்யப் பட்டுள்ள கதைகள் தமிழரின் பண்பாட்டையும் செம்மாந்த வாழ்வையும் அற உணர்வையும் காட்டும் கண்ணாடி, கலைகளுக்கெல்லாம் முன்னோடியாகும். மேலும் அக்காலத்து மன்னர்கள் மற்றும் அவர்கள் ஆண்ட நாட்டின் நிலையையும் மக்கள் மன உணர்வுகளையும் அரசர்களின் குடி தழுவிய செங்கோலையும், சான்றோர்களின் அறன் வலியுறுத்தலையும், கடவுள் தொடர்பான புராண, இதிகாச செய்திகளையும் அறிந்து கொள்ளும் முயற்சியே இத்தலைப்பாகும்.

கதை சொல்வது மரபு ரீதியான ஒன்று. மனிதன் தன் அனுபவங்களை அடுத்தவர்க்கும் அடுத்த தலைமுறையினர்க்கும் சொல்லும் உத்தியை சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் கடைபிடித்து உவமையாக கதைகளை எடுத்துரைத்துள்ளனர்.

கதைகள் மனிதனை அறநெறியில் நடத்துவதற்கு துணை புரிகின்றன. "அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே" என்று நன்னூல் நூலின் பயனை எடுத்துரைக்கிறது. இவ்விலக்கணக் கூற்றின் அடிப்படையில் சங்க இலக்கியங்கள் பல அறக்கருத்துக்களை எடுத்து இயம்புகின்றன. சங்க அகத்திணைப் பாடல்கள் அனைத்தும் ஒருவனும் ஒருத்தியும் நடத்தும் காதல் வாழ்க்கையினின்றும் பெறும் இன்பத்தினைப் படிப்படியாகப் பாடுகின்றன. தலைவனும் தலைவியும் ஊழ்வினைப் பயனாக எதிர்ப்பட்டு இருவரும் காதல் வயத்தராதலும், காதலித்துத் தலைவன் நீங்க பிரிவுக்காகத் தலைவி வருந்துதலும், களவொழுக்கம் சிலநாட்கள் நீடித்த பிறகு தலைவன் தலைவியை வரைந்து கொண்டு இன்ப வாழ்வு வாழ்தலும் சங்க அகப்பாடல்களில் உணர்த்தப்படுகின்றன. இத்தகைய கூற்றுகளுக்கிடையே அறத்தை உணர்த்த உவமையாகக் கதைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

அன்பு, அருள், ஈகை, தனக்கென வாழாப் பிறர்க்குரியனாதல் போன்ற அறங்களும், மன்னர் தம் நாட்டை உயிரினும் ஓம்புதல், செங்கோன்மை, போர் மேற்செல்லுதல், வீரம் இன்னோரன்ன பொருட்சிறப்புக்களும் புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய புறத்திணைப் பாடல்களில் பாடப்பட்டுள்ளன; இத்திணைப் பாடல்களுக்கிடையேயும் உவமையாக மன்னன் மக்களை பாதுகாக்கும் தன்மை, புலவர்களை புரக்கும் செயல், தம்மை நாடிவரும் எத்தகைய உயிரினங்களையும் தம் உயிரைக் கொடுத்தாலும் காக்கும் தன்மை, மன்னர்கள் மக்களுக்கு இறைத்தன்மை கொண்டவன் என்ற உண்மை நிலைநாட்டவும், மன்னர்கள் மானமே பெரிதென வாழ்ந்த செம்மாந்த வாழ்க்கை போன்ற செய்திகளைக் கதைகளாகப் புலவர்கள் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

சமயத்தின் மிக முக்கியமான பகுதியாகத் திகழ்வது இறை நம்பிக்கையாகும். இறைவனைக் கடவுள், தெய்வம், இறை, இயவுள் என்பன போன்ற சொற்களால் அழைப்பர். உலகில் தோன்றிய பெரும்பாலான சமயங்களில் இறைவனே முதன்மையாக விளங்குகிறார். சிவன் நஞ்சுண்ட

செய்தி, திரிபுரம் எரித்த நிகழ்வு, கங்கையை சடையில் தாங்கிய நிலை போன்ற கதைகளும், திருமால் மாவலி சக்கரவர்த்தியின் ஆணவம் அடங்கச் செய்த வாமன அவதாரச் சிறப்பு, திருமால் அரக்கர்களை அழித்த செயல்கள், கோபியர்களோடு இருந்த கோரிக்கை நிகழ்வு, இரணியனை அழிக்க எடுத்த நரசிம்ம அவதாரச் சிறப்பு போன்ற கதைகளும், முருகன் சூரனைக் கொன்ற நிகழ்வு, வள்ளி, தெய்வயானையை மணந்த நிகழ்வு போன்ற கடவுள் தொடர்பானக் கதைகளைப் புலவர்கள் உவமையாக எடுத்துரைத்துள்ளனர். இதன்மூலம் நாட்டில் தீமை ஒழிந்து நன்மை சிறக்கவும், அறத்தின் வழியில் மக்கள் செல்வதற்காக இறை தொடர்பான கதைகள் பாடலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

சமுதாயத்திற்காகப் படைக்கப்பட்ட இலக்கியங்களில் உள்ள இக்கதைகளைப் படிக்கும்போது அக்காலச் சமூகச் சூழலைப் புரிந்து கொள்கிறது. அவற்றுள் கூறப்படும் விழுமிய கருத்துக்களால் உள்ளம் தூய்மையும், அமைதியும் பெறுகின்றது. சமுதாயச் சிந்தனைகளை இலக்கியங்கள் உருவாக்குகின்றன. அன்பு, இரக்கம், கருணை, தொண்டாற்றும் பண்பு ஆகிய மனித சமூகத்தில் நிலைபெற இவைகள் உதவியுள்ளன.

இலக்கியம் என்பது அழகுணர்ச்சி ததும்ப எழுதியனவற்றையே குறிக்கும். பிரச்சினைகளைப் பதிவு செய்தால் மட்டும் போதாது. அது மக்கள் மனத்தில் நிலைத்து நிற்குமாறு செய்வதே படைப்பாளர்களின் திறன், தாம் பார்த்ததை, உணர்ந்ததை, உள்ளவாறோ அல்லது புனைந்துரைத்தோ கூறுவது படைப்பாளர்களின் திறன் ஆகும். ஆய்வுக்குரிய பாக்களுள் எடுத்துரைக்கப்பட்டுள்ள கதைகளின் வழி புலவர் பெருமக்களின் எடுத்துரைத் தன்மையையும், மக்கள் மன உணர்வையும், அக்காலச் சமூகச் சூழலுக் கேற்றவாறு கதைகளை எடுத்துரைத்து அதனைப் பாக்களைப் பயில்வோரிடத்துக் கொண்டு சேர்த்த படைப்புத் திறனையும் அறியமுடிகின்றது. இத்திறன் சங்க இலக்கியம் மற்றும் சங்கப் புலவர்களின் மேன்மையைச் சுட்டுவதாய் உள்ளது.

‘மன்னன் எவ்வழியோ மக்கள் அவ்வழியென’ வாழ்ந்த காலத்தில், அனைவராலும் அறியப்பெற்ற, போற்றப்பெற்ற மன்னர்களைப் பற்றிய செய்திகளைக் கதைகளாக பாக்களுள் பயின்றுவரச் செய்தும், மக்களின் இறைநம்பிக்கையை அறிந்து புராணச் செய்திகளைப் பாக்களில் பதிவு செய்வதுடன், தொன்மை போற்றும் இலக்கியங்களாகச் சங்க இலக்கியங்கள் தனிச்சிறப்பு பெற்று விளங்குவதையும் இக்கதைகள் சுவைக்காக மட்டும் அல்லாமல் இன்றுவரை அக்கால மன்னர்களைப் பற்றி அறிய உதவும் இலக்கியச் சான்றுகளாகவும் விளங்குவதையும் கதைகளைப் பயன்படுத்துதல் என்ற ஒற்றைக் கூறின் வழியாகவே தம் புலமைத் திறனைப் பறைசாற்றிய தமிழ்ப் புலவர் பெருமக்களின் தனித்திறனும் இவ்வாய்வின் வழி நிறுவப்பட்டுள்ளன.

காலம்வென்று வாழ்வதற்கானத் தனித்தளம் பெற்ற சங்க இலக்கியங்களின் சிறு துளியும் ஆய்வின் வழி ஆழ்ந்து நோக்கத்தக்கது. அவ்வகையில் கதை என்ற ஒரு துறைப்போல் சங்க இலக்கியத்தின் ஒவ்வொரு செயலிலும், கருத்திலும், உத்திநிலையிலும் எனப் பல்வேறு நிலைகளில் ஆய்வு மேற்கொள்ள இடமுண்டு.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்

1. நாகராசன்.வி. (உ.ஆ.) – குறுந்தொகை மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
ஏப். – 2004.

2. பாலசுப்பிரமணியன்.கு.வெ. (உ.ஆ.) – நற்றிணை மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
ஏப். – 2004.

3. செயபால்.இரா. (உ.ஆ.) – அகநானூறு மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
ஏப். – 2004.

4. விசுவநாதன்.அ. (உ.ஆ.) – கலித்தொகை மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
ஏப். – 2004.

5. பாலசுப்பிரமணியன்.கு.வெ. (உ.ஆ.) – புறநானூறு மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
ஏப். – 2004.

6. ஆலிஸ்.அ. (உ.ஆ.) – பதிற்றுப்பத்து மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
ஏப். – 2004.

7. சுப்பிரமணியன்.பெ. முதலியார் (உ.ஆ.) – பரிபாடல் மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
ஏப். – 2004.

8. நாகராசன்.வி. (உ.ஆ.) – பத்துப்பாட்டு மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
ஏப். – 2004.

9. சாமிநாதய்யர். உ.வே. (தொ.ஆ.) – புறநானூறு,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
1985.

10. சோமசுந்தரனார்.பொ.வே. (உ.ஆ.) – பரிபாடல்
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி – 6
1964.

11. ஔவை.துரைசாமிப்பிள்ளை.சு. – பதிற்றுப்பத்து,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி – 6
1964.

## துணைமைச் சான்றாதாரங்கள்

1. அகிலன் – கதைக்கலை,
பாரி புத்தகப்பண்ணை,
சென்னை.

2. அரங்க.சுப்பையா – இலக்கியத் திறனாய்வு,
(இசங்கள், கொள்கைகள்)
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானிஜான்கான் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை – 14
2007.

3. ஆண்டியப்பன்.தே. – தொல்காப்பிய வளம்,
3/31, மணிவாசகர் தெரு,
இந்தியன் பாங்க் காலனி,
நாராயணபுரம்,
மதுரை.
2008.

4. ஆனந்தன்.சு – தமிழ் இலக்கிய வரலாறு,
கண்மணி பதிப்பகம்,
திருச்சி.
2003.

5. இந்திரசித்து.கா. – சங்ககாலச் சமயமும் சமுதாயமும்,
என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்,
உடுமலைப்பேட்டை – 642 128
1998.

6. இளம்பூரணர் (உ.ஆ.) – தொல்காப்பியம்,
முல்லை நிலையம்,
சென்னை.

7. இராமலிங்கம் – விடுதலைக்கு முன் தமிழ்ச் சிறுகதை,
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை – 600 098
1976.

8. கிருஷ்ணன் – விநாயகபுராணம்,
குமரன் பதிப்பகம்,
2, முத்து கிருஷ்ணன் தெரு,
த.பெ.எண்.6124,
தி.நகர், சென்னை – 17
மே – 1999.

9. கிருஷ்ணமாச்சாரியார் – பதினெண் புராணங்கள்,
நர்மதா பதிப்பகம்,
10, நானா தெரு,
(தி.நகர், தலைமை அஞ்சலகத்தை ஒட்டிய தெரு)
தி.நகர்,
சென்னை – 17
ஜுன் – 2005.

10. குலசேகரன்.சு. – செந்தமிழின் பொற்காலம்,
திருமகள் வெளியீடு,
E-113, 16வது குறுக்குத்தெரு,
பெசண்ட் நகர்,
சென்னை – 90
2008.

11. கேசவன் – தமிழ்ச் சிறுகதைகளில் உருவம்,
அன்னம் வெளியீடு,
சிவகங்கை.

12. கோதண்டராமன் – சிறுகதைக்கலை,
மணிவாசகர் பதிப்பகம்
8/7, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை – 108

13. சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் – மகாபாரதம்,
வானதி பதிப்பகம்,
13, தீனதயாளு தெரு,
தி.நகர்,
சென்னை – 17
ஜன. – 1973.

14. சக்திவேல்.சு. – நாட்டுப்புறவியல் ஓர் ஆய்வு,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர்தெரு,
பாரிமுனை,
சென்னை – 600 108
1983.

15. சரஸ்வதி.கே. – பக்த பிரகலாதன்,
சங்கர் பதிப்பகம்,
15/21, டீச்சர்ஸ் கில்டு காலனி,
வில்லிவாக்கம்,
சென்னை – 49
2008.

16. சரவணன்.ப. – சிவபுராணம்,
நர்மதா பதிப்பகம்,
10, நானா தெரு, பாண்டிபஜார்,
தி.நகர்,
சென்னை – 17
செப். – 2008.

17. சுப்பிரமணியன்.ச.வே.சு. – தமிழ் இலக்கிய வகையும் வடிவும்,
தமிழ்ப் பதிப்பகம்,
சென்னை.

18. சுப்பிரமணியன்.ச.வே.சு. – இளங்கோவின் இலக்கிய உத்திகள்,
தமிழ்ப் பதிப்பகம்,
சென்னை.
1980.

19. சுப்பிரமணியன்.ச.வே. – தமிழ் இலக்கிய வரலாறு,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை – 600 108

20. சுப்ரமணியன் – சங்ககால வாழ்வியல்,
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிமிடெட்,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை – 600 098
ஆகஸ்டு – 1986.

21. சுந்தரவல்லி.ச. – மு.வ.வின் கதைகள் ஆய்வு,
பாரி நிலையம்,
184, பிராட்வே,
சென்னை – 600 108
1988

22. சிவத்தம்பி.கா. – தமிழ்ச் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்,
மணிவாசகர் பதிப்பகம்,
சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை.

23. செந்துறைமுத்து – பாகவதக்கதைகள்,
வள்ளுவர் பண்ணை,
10/31, இரண்டாவது முதன்மைச் சாலை,
சி.ஐ.டி. நகர், சென்னை – 35
2001.

24. ஞானசம்பந்தன்.அ.ச. – இலக்கியக்கலை,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
154, டி.டி.கே. சாலை,
திருநெல்வேலி – 18
1999.

25. ஞானமூர்த்தி.தா.ஏ – இலக்கியத் திறனாய்வியல்,
யாழ் வெளியீடு,
AP 1108, 3வது தெரு,
தென்றல் குடியிருப்பு,
மேற்கு அண்ணாநகர்,
சென்னை – 600 040
ஜூலை – 2002

26. தமிழண்ணல் – சங்க இலக்கிய ஒப்பீடு,
மீனாட்சி புத்தக நிலையம்,
60, மேலக்கோபுரத்தெரு, மதுரை – 625 001
1985.

27. திருஞானசம்பந்தம் – தண்டியலங்காரம்,
கதிர் பதிப்பகம்,
தெற்கு வீதி,
திருவையாறு – 613 204
2010.

28. மேலது – புறப்பொருள் வெண்பாமாலை,
கதிர் பதிப்பகம்,
தெற்கு வீதி,
திருவையாறு – 613 204
2010.

29. நிர்மலாமோகன் – இலக்கியத்தென்றல்,
மணிவாசகர் பதிப்பகம்,
8/7, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை – 108
1989.

30. நீலகண்டசாஸ்திரி.கே.ஏ. – சோழர்கள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
ஆகஸ்டு – 2007

31. பாக்யமேரி – தமிழின் செம்மொழிப்பண்புகள்,
அஞ்சனச்சிமிழ்ப் பதிப்பகம்,
10/2, சீனிவாசா சாலை,
மயிலாப்பூர்,
சென்னை – 600 004
ஆகஸ்ட் 2012.

32. பாலசந்திரன்.சு. – இலக்கியத் திறனாய்வு,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
1976.

33. பிச்சைமுத்து.ந. – திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்,
சக்தி வெளியீடு,
சென்னை.
1998.

34. கதிர்.மகாதேவன் – தொன்மம்,
"கதிரகம்",
இலட்சுமி வெளியீடு,
271, அறிஞர் அண்ணா நகர்,
மதுரை – 625 020
1989.

35. முத்தையா.ஆத. – தமிழ் இலக்கியக் கொள்கைகள்,
கட்டுரைக்கோவை,
தமிழ் உயராய்வு மையம்,
அ.வீரையா வாண்டையார் நினைவு
திருபுட்பம் கல்லூரி, (தன்னாட்சி)
பூண்டி, தஞ்சாவூர் – 3
பிப். 2006.

36. வரதராசன்.மு.வ. – இலக்கியத்திறன்,
பாரி நிலையம்,
184, பிராட்வே,
சென்னை – 108
1996.

37. வானமாமலை.நா. – பழங்கதைகளும் பழமொழிகளும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
மார்ச் – 1980

38. வரதராசன்.மு. – இலக்கிய மரபு,
பாரிநிலையம்,
184, பிராட்வே,
சென்னை – 108
1968.

39. வீரப்பன்.பா. – தமிழ் ஆராய்ச்சியின் வரலாறு,
வனிதா பதிப்பகம்,
11, நானா தெரு, பாண்டிபஜார்,
தி.நகர், சென்னை – 17
2009.

40. ராமநாதன்.அரு. – கந்தபுராணம்,
பிரேமா பிரசுரம்,
59, ஆற்காடு சாலை,
கோடம்பாக்கம்,
சென்னை – 24
செப். – 1974.

## அகராதிகளும், களஞ்சியங்களும், கருத்தரங்கக் கட்டுரைகளும்

1. கடிகாசலம்.ந.
சிவகாமி.ச.
(ப.ஆ.) – சங்க இலக்கியம்,
கவிதையியல் நோக்கு,
சிந்தனைப் பின்புல மதிப்பீடு,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி,
சென்னை – 600 113
1998.

2. கழகப்புலவர் குழுவினர்
(தொ.ஆ.) – கழகத் தமிழ் அகராதி,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்,
154, டி.டி.கே. சாலை,
சென்னை – 600 018
1964.

3. சண்முகம் பிள்ளை.மு.
(தொ.ஆ.) – தமிழ் – தமிழ் அகரமுதலி,
சாந்திய பதிப்பகம்,
அசோக் நகர்,
சென்னை – 83
2004.

4. சிங்காரவேலு.ஆ முதலியார் – அபிதான சிந்தாமணி,
ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ்,
புதுதில்லி – 110 016
1984.

5. பவானந்தம் பிள்ளை.ச. – பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி,
நியூசெஞ்சுா புக்ஹவிஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை – 600 098
2003.

6. ராமகிருஷ்ணன்.பி.
புலவர்.பொன்மணி
(தொ.ஆ.) – அடோன் – தமிழ் அகராதி,
அடோன் பப்ளிஷிங் குரூப்,
திருவனந்தபுரம் – 695 001
ஆகஸ்ட் – 2007.

7. ராமகிருஷ்ணன்.எஸ்.
(ப.ஆ.) – க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,
பல்கலைக்கழக காலனி,
பலவாக்கம்,
சென்னை – 41
2008.

8. – வாழ்வியற் களஞ்சியங்கள்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

9. – சங்க இலக்கியக் கட்டுரைகள்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
ஏப்ரல் – 1984.

# குறுந்தொகை

| வ. எண். | பாடல் எண். | கதை | புலவரின் பெயர் | கூற்று |
|---|---|---|---|---|
| *1.* | *73 (2–4)* | நன்னன் (குறுநில மன்னன்) | பரணர் | தோழி |
| *2.* | *105 (2)* | சிவன் (கடவுள்) | நக்கீரர் | தலைவி |
| *3.* | *292 (1–5)* | நன்னன் (குறுநில மன்னன்) | பரணர் | தோழி |
| *4.* | *298 (6–7)* | நன்னன் (குறுநில மன்னன்) | பரணர் | தோழி |

## நற்றிணை

| வ. எண். | பாடல் எண். | கதை | புலவரின் பெயர் | கூற்று |
|---|---|---|---|---|
| 1. | 180 (6–8) | அன்னி, திதியன் (குறுநில மன்னர்கள்) | பாடியோர் குறிப்பு இல்லை | தோழி |
| 2. | 216 (6–9) | திருமாவுண்ணி (காப்பிய கதை) | மதுரை மருதனிலநாகனார் | பரத்தை |
| 3. | 320 (5–6) | ஓரி (கடையேழு வள்ளல்) | கபிலர் | பரத்தை |

# அகநானூறு

| வ. எண். | பாடல் எண். | கதை | புலவரின் பெயர் | கூற்று |
|---|---|---|---|---|
| *1.* | *45 (14–15)* | ஆதிமந்தி (கரிகாலன் மகள்) | வெள்ளிவீதியார் | தலைவி |
| *2.* | *59 (6–7)* | கண்ணன் (கடவுள்) | மதுரை மருதனிள நாகனார் | தோழி |
| *3.* | *70 (15–17)* | இராமாயணக் கதை | மதுரை தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார் | தோழி |
| *4.* | *76 (7–10)* | ஆதிமந்தி | பரணர் | பரத்தை |
| *5.* | *196 (8–13)* | அன்னிமிஞலி | பரணர் | தலைவி |
| *6.* | *222 (5–12)* | ஆட்டனத்தி, ஆதிமந்தி | பரணர் | தோழி |
| *7.* | *262 (4–12)* | அன்னிமிஞலி | பரணர் | தலைவன் |

# கலித்தொகை

| வ. எண். | பாடல் எண். | கதை | புலவரின் பெயர் | கூற்று |
|---|---|---|---|---|
| 1. | கடவுள் வாழ்த்து (2) | சிவன் (கடவுள்) | மதுரையாசிரியர் நல்லந்துவனார் | |
| 2. | 2 (1–5) | சிவன் (கடவுள்) | பாலைபடிய பெருங்கடுங்கோ | தோழி |
| 3. | 25 (1–4) | மகாபாரதக் கதை | பாலைபாடிய பெருங்கடுங்கோ (பாலைக்கலி) | தோழி |
| 4. | 38 (1–3) | இராவணன் (இராமாயணக்கதை) | கபிலர் (குறிஞ்சிக்கலி) | தோழி |
| 5. | 52 (1–3) | மகாபாரதக்கதை | கபிலர் (குறிஞ்சிக்கலி) | தோழி |
| 6. | 101 (18–20) (30–32) | மகாபாரதக்கதை | சோழன் நல்லுருத்திரன் (முல்லைக்கலி) | தோழி |
| 7. | 103 (18–20) (52–54) | சிவன் திருமால் | சோழன் நல்லுருத்திரன் (முல்லைக்கலி) | தோழி |
| 8. | 134 (1–3) | திருமால் (கடவுள்) | நல்லந்துவனார் (நெய்தல்) | தலைவி |
| 9. | 150 (9) | சிவன் (கடவுள்) | நல்லந்துவனார் | தோழி |

## புறநானூறு

| வ. எண். | பாடல் எண். | கதை | புலவரின் பெயர் | கூற்று |
|---|---|---|---|---|
| 10. | 2 (13–16) | பெருஞ்சோற்று (சேர மன்னன்) | முரஞ்சியூர் முடிநாகராயர் | பாடாண் திணை |
| 11. | 13 முழுமை | அந்துவஞ்சேரல் | முடமோசியார் | பாடாண் |
| 12. | 21 முழுமை | வேங்கைமார்பன் (குறுநில மன்னன்) | ஐயூர் மூலங்கிழார் | பாடான் |
| 13. | 37 (5–6) | சிபிச் சக்கரவர்த்தி (சோழ மன்னன்) | மாறோக்கத்து நப்பசலையார் | பாடாண் |
| 14. | 55 (1–5) | சிவன் (கடவுள்) | மருதனிளநாகனார் | பாடாண் |
| 15. | 74 முழுமை | சேரன் கணைக்கால் இரும்பொறை (சேர மன்னன்) | சேரன் கணைக்கால் இரும்பொறை | பொதுவியல் |
| 16. | 91 (6–11) | அதியமான் (கடையேழு வள்ளல்) | ஔவையார் | பாடாண் |
| 17. | 95 (1–5) | அதியமான் | ஔவையார் | பாடாண் |
| 18. | 141 (11–12) | பேகன் (கடையேழு வள்ளல்) | பரணர் | பாடாண் |
| 19. | 150 முழுமை | நள்ளி (கடையேழு வள்ளல்) | வன்பரணர் | பாடாண் |
| 20. | 152 முழுமை | ஓரி (கடையேழு வள்ளல்) | வன்பரணர் | பாடாண் |
| 21. | 162 முழுமை | இளவெளிமான் (குமணன் தம்பி) | பெருஞ்சித்திரனார் | பாடாண் |

| | | | | |
|---|---|---|---|---|
| *22.* | *164* முழுமை | குமணன் | பெருந்தலைச் சாத்தனார் | பாடாண் |
| *23.* | *181 (9–10)* | பண்ணன் | முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் | வாகை |
| *24.* | *209* முழுமை | மூவன் | பெருந்தலைச் சாத்தனார் | பாடாண் |
| *25.* | *213* முழுமை | கோப்பெருஞ் சோழன் | புல்லாற்று எயிற்றியனார் | வஞ்சி |
| *26.* | *212* முழுமை | கோப்பெருஞ் சோழன் | பிசிராந்தையார் | பொதுவியல் |
| *27.* | *220, 222* முழுமை | கோப்பெருஞ் சோழன் | பொத்தியார் | பொதுவியல் |

# பதிற்றுப்பத்து

| வ. எண். | பாடல் எண். | கதை | புலவரின் பெயர் |
|---|---|---|---|
| 1. | இரண்டாம் பத்து | முருகன் (கடவுள்) | குமட்டூர் கண்ணனார் |
| 2. | இரண்டாம் பத்து | மகாபாரதக் கதை | குமட்டூர் கண்ணனார் |

## பரிபாடல்

| வ. எண். | பாடல் எண். | கதை | புலவரின் பெயர் |
|---|---|---|---|
| 1. | 2 (1–4) | திருமால் (கடவுள்) | கீரந்தையார் |
| 2. | 2 (71–72) | திருமால் | கீரந்தையார் |
| 3. | 3 (13–14) | திருமால் | கடுவன் இளவெயினார் |
| 4. | 3 (15–16) | திருமால் | கடுவன் இளவெயினார் |
| 5. | 3 (31–32) | திருமால் | கடுவன் இளவெயினார் |
| 6. | 3 (59–60) | கருடன் | கடுவன் இளவெயினார் |
| 7. | 4 (10–20) | திருமால் | கீரந்தையார் |
| 8. | 5 (22–54) | முருகன் | குன்றம்பூதனார் |
| 9. | 9 (27–44) | முருகன் | குன்றம்பூதனார் |
| 10. | 19 (1–7) (50–53) | முருகன் வள்ளியை மணந்தது இந்திரன் | நப்பண்ணனார் |

# பத்துப்பாட்டு

| வ. எண். | பாடல் எண். | கதை | புலவரின் பெயர் |
|---|---|---|---|
| *1.* | திருமுருகாற்றுப்படை *(45–46)* | முருகன் | நக்கீரர் |
| *3.* | திருமுருகாற்றுப்படை *(156–160)* | இந்திரன் | நக்கீரர் |
| *3.* | திருமுருகாற்றுப்படை *(160–165)* | பிரம்மன் | நக்கீரர் |
| *4.* | சிறுபாணாற்றுப்படை *(36–39)* | வீமன் நளபாகம் | நல்லூர் நத்தத்தனார் |
| *5.* | பெரும்பாணாற்றுப்படை *(31–33)* | திரையன் | கடியலூர் உருத்திரங் கண்ணனார் |
| *6.* | பெரும்பாணாற்றுப்படை *(402–405)* | திருமால் | கடியலூர் உருத்திரங் கண்ணனார் |
| *7.* | பெரும்பாணாற்றுப்படை *(402)* | திருமால் | கடியலூர் உருத்திரங் கண்ணனார் |
| *8.* | மதுரைக்காஞ்சி *(40–43)* | அகத்தியர் கதை | மாங்குடி மருதனார் |